

## க்ஷணத்தில் நுரையும் ஸன்லைட் அடித்துத்துவைக்காமலே
## வெண்மையாகவும் பிரகாச மாகவும் சலவை செய்யும்



"என் துண்டு எவ்வளவு வெண்மையாயிருக்கிறதென்று பார்த்தீர்களா? அதற்குக்காரணம் ஸன்லைட் சோப் உபயோகித்து அதைச் சலவை செய்ததுதான். ஸன்லைட் சோப்பின் க்ஷணத்தில் பொங்கிவரும் நுரை அழுக்கைத்திரட்டி வெளிக் கொண்டுவருகிறது. அதனால் உங்கள் துணிகள்யாவும் பளிச் சென்று வெண்மையாகச் சலவை செய்யப்படுகின்றன."



"கலர் துணிகளுக்கு மலர்ச்சி அளிக்க ஸன்லைட் சலவை போல வேறெதுவுமில்லை. ஸன்லைட் சோப்பின் மிருதுவான நுரை அடித்துத் துவைக்காமலேயே அழுக்கை அகற்றுகிறது. அதனால் துணிகள் நீடித்து வருகின்றன."




# ஸன்லைட் சோப்

துணிகளைக்காப்பாற்றுகிறது, சிரமத்தைக்குறைக்கிறது, பணத்தை மிச்சப்படுத்துகிறது

S. 221-50 TM

இந்தியாவில் தயாரித்தது

மலர் 14
இதழ் 20

# கல்கி பொருளடக்கம்

ஜய ஸ்ரீ
கார்த்திகை 27

1954 டிசம்பர் 12



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

மலர் 14 கல்கி இதழ் 20

தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார்

# தமிழுக்கு ஒருவர் !

என்றும் நிற்கக்கூடிய தமிழை எழுதிய கை நின்று விட்டது!
மறையாத எழுத்தின் நாயகம் மறைந்து விட்டது!
ஓய்வின்றிச் சிந்தித்த உள்ளம் ஒடுங்கி விட்டது!
தமிழ் வழங்கும் இடம் எல்லாம் துயரத்தில் ஆழ்ந்துள்ளது!
ஆயிரக்கணக்கான 'கல்கி' நேயர்களின் துயரத்தில் நாமும் பங்கு கொள்கிறோம்!
ஆறாத துயரத்துக்கு என்ன ஆறுதல் சொல்ல?

* * * *

சென்ற ஞாயிறு காலை ஐந்து மணிக்குக் கல்கி ஆசிரியர் ஸ்ரீ ரா. கிருஷ்ண மூர்த்தி அவர்கள் நம்மிடையே இருந்து மறைந்தார்.

தமிழுக்கும், தமிழ்க் கலைகளுக்கும், தமிழ் நாட்டின் அரசியல் வாழ்வுக்கும் அருந்தொண்டு புரிந்த பேராசிரியர் இந்தத் தமிழ் நாட்டையும், தமிழ் மக்களையும் விட்டுப் பிரிந்து சென்று விட்டார்.

ஆசிரியர் 'கல்கி' அவர்களுக்குக் கடந்த இரண்டு மாதமாக உடல் நோய் அதிகரித்து, அவர் சிகிச்சைக்காக ஆஸ்பத்திரியில் தங்க நேர்ந்தது என்று கேட்டதுமே எத்தனையோ ஆயிரம் உள்ளங்கள் கவலையில் ஆழ்ந்தன. கடந்த வாரம் அவருடைய உடம்பு திருந்தியதைப் பார்த்து, நமது துக்கம் நீங்கி விடும் என்று எதிர்பார்த்தோம். ஆனால் அந்த உடலே இப்பொழுது நீங்கிவிட்டது! நமது மதிப்புக்கு உரிய தலைவர் ராஜாஜி அவர்கள் குறிப்பிட்டதுபோல "எதிர்பாராதது நடந்து விட்டது!"

* * * *

கடந்த முப்பது ஆண்டுகளுக்கும் மேலாக ஆசிரியர் கல்கி அவர்கள் தமிழ்ப் பத்திரிகை உலகிலே செய்து வந்துள்ள சேவை அளவு கடந்தது. ஒரு தனி மனிதர் தேச பக்தியினாலும், சலியாத உழைப்பினாலும் மொழியாற்றலினாலும் எவ்வளவு பெரிய சாதனையைச் செய்து விட முடியும் என்பதற்கு அவருடைய வாழ்வே ஒரு சான்று.

நோவாத ஹாஸ்யமும், எல்லாரும் பேசுகிற பேச்சிலே எந்தக் கருத்தையும் வெளியிட்டு விடக்கூடிய ஆற்றலும், தமிழ் பாஷையின் சாயல்களை யெல்லாம் அற்புதமான முறையிலே வர்ணம் தீட்டிவிடக் கூடிய கலைப் பண்பும், கல்கி அவர்களின் தனிச் சிறப்பாக ஒளி வீசின.

இருபத்துமூன்று ஆண்டுகளுக்கு முன் மகா மகோபாத்யாய ஸ்ரீ சுவாமிநாதய்யர் அவர்களிடம் கல்கியைப் பற்றிக் குறிப்பிட்டபோது ரஸிகமணி டி. கே. சி. சொன்னார்கள்: 'ஐயா, தமிழ் நாட்டில் ஒருவர் தமிழ் எழுதுகிறார்' என்று. ரசிகமணியின் இந்தத் தனிப் பெரும் வியப்புக்குப் பாத்திரமான கல்கி அவர்களின் எழுத்தை, ரஸிகமணி டி. கே. சி. அவர்கள் பாராட்டிப் பேசாத நாளே கிடையாது.

'கல்கி'யின் திறமையும், அவருடைய தைரியமும், தெளிவும் அவருடைய அரசியல் கட்டுரைகள் மூலம் தமிழ் நாட்டு மக்களுக்கு எத்தனையோ பல சந்தர்ப்பங்களில் வழி காட்டி உதவின. இந்த நூற்றாண்டின் தமிழ் நாட்டு அரசியல் சரித்திரத்தில் அவர் செய்த தொண்டு மகத்தானது.

* * *

அரசியல் துறையைப் போலவே கலைத் துறையிலும், அவர் செய்த பொது நலப் பணி அபாரமானது. புதிதாகத் தோன்றும் திறமை யென்று எங்கெங்கு கண்டாரோ, அந்தத் திறமையை யெல்லாம் மேலும் மேலும் ஊக்கப்படுத்தி நல்ல முறையிலே வளர்த்து நாட்டுக்கு உபயோகமான வகையிலே சிறப் புறும்படி செய்வதே அவருடைய இலட்சிய மாக இருந்தது. சங்கீத வித்வான்கள், நடிகர்கள், திரைப்பட நக்ஷத்திரங்கள், ஓவியர்கள், தமிழ்ச் சங்கத்துப் பணியா ளர்கள், கலையன்பர்கள், தமிழை வளர்த்த வள்ளல்கள், வளரும் தமிழுக்கும் வழி வகுக் கும் அறிஞர்கள்—என்று எத்தனையோ அரிய மனிதர்களைக் கல்கி அவர்கள் தமிழ் நாட் டுக்கு அறிமுகப்படுத்தி, அவர்களுடைய சேவையெல்லாம் நாட்டுக்குப் பயன்படும் விதத்திலே ஊக்கமூட்டி ஆதரித்தார்.

ஞாயிற்றுக்கிழமை யன்று அவருடைய பூத உடலுக்குத் தங்களுடைய கடைசி மரியாதை யைச் செலுத்துவதற்குக் கூட்டமாகக் கூடிய அன்பர்களைப் பார்த்தால், அந்தக் காட்சியே அவருடைய சேவையின் வகைகளுக்கு ஒரு அத்தாட்சியாக விளங்கியது!

கல்கியின் மறைவால் எத்தனை துறைகள் எப்படியெல்லாம் வருந்துகின்றன என்பதை அந்த மக்களின் சங்கம் எடுத்துக் காட்டியது.

தேச பக்தர் என்ற முறையிலும், சமூக நலப் பணியாளர் என்ற முறையிலும் செய்த சேவையின் பாங்கு இது. எழுத்துக் கலையிலோ என்றால், சிறு கதை, நாவல், கலை விமர்சனம், ஹாஸ்யக் கட்டுரைகள், பிரயாண வரலாறுகள் கவிதைகள் என்று எல்லாத் துறைகளிலும், தமக்கென ஒரு வழியை வகுத்துக் கொண்டு, 'தமிழ்ச் சிற்பி' என்ற சொல்லுக்கு அரிய இலக்கிய மாகத் திகழ்ந்தார் ஆசிரியர் கல்கி.

எழுதுகிற தமிழுக்கும், பேசுகிற தமிழுக் கும் எத்தனையோ நாளாக இருந்து வந்த வேற்றுமையை அகற்றி, பாரதியார் உரு வாக்கிய மறுமலர்ச்சி இலக்கியத்தை மேலும் வளர்த்தார் கல்கி.

வசன இலக்கியத்தை அதிசயிக்கும்படி யான விதத்தில் வளம்படுத்தித் தமிழ் மொழி யின் வியாபகத்துக்கும், இயக்கத்துக்கும் வன்மை ஊட்டியவர் கல்கி. இது காரண மாகவே, பெரியவர்கள், மாணவர்கள், ஆட வர், பெண்டிர், குழந்தைகள் — எல்லோரும் விரும்பக் கூடிய நயத்துடன் தமிழ் மொழியை ஆண்டார் கல்கி! பல வேறுபட்ட அவருடைய இத்தனை எழுத்துக்களுக்கும் ஊடாக நிரந்தர மான தமிழ்ப் பண்பு ஆதார வேகமாக ஓடி வந்தது. எழுதுகிற மொழியினிடத்து மெய் யான பற்றும், சொல்லுகிற விஷயத்தில் ஒரு பிடிப்பும் இருந்ததால், கல்கியின் தனிப் பண்பு அவர் எழுதிய எந்த விஷயத்திலும் துலாம்பரமாக நின்று நேருக்கு நேர் நம் மோடு உரையாடியது.

* * *

கல்கியினுடைய இன்னொரு பெருஞ் சிறப்பு, நம்முடைய தமிழ் நாட்டின் பண்பாட் டிலும், பூர்வமான சிறப்பிலும் அவருக்கிருந்த ஈடுபாடு. இது வெறும் கண்மூடித்தனமான ஈடுபாடு இல்லை. விஷயங்களை நன்றாகப் புரிந்து கொண்டு, அந்த ஞானத்திலிருந்து ஏற்பட்ட திடமான நம்பிக்கையும் அதனால் விளைந்த பக்தியுமாகும்.

தமிழ் மொழியினிடத்தும், தமிழ் நாட்டின் சரித்திரத்தினிடத்தும் அவருக்கிருந்த இந்த அபாரமான பற்றுத்தான், அவருடைய எழுத் துக்கு, பேச்சுக்கு,—ஏன்—அவருடைய வாழ் வுக்கே மூச்சாக இருந்தது. ஆழ்ந்து படித்துப் புதிது புதிதாக விஷயங்களைத் தெரிந்து கொள்வதில் அவருக்கிருந்த மெய்யான அக்கறை அவருடைய இந்தப் பற்றை மேலும் மேலும் வளர்த்தது. எனவே, பழமையை புத்திக் கூர்மையோடு பேணுவதிலும், புது மையை ஆக்கமான முறையிலே வளர்ப்பதி லும் அவர் ஒரு வழிகாட்டியாக விளங்கி வந்தார். கவியரசர் பாரதியார் கூறியதுபோல,

"முன்னர் நாடு திகழ்ந்த பெருமையும்
மூண் டிருக்குமிந் நாளின் இகழ்ச்சியும்
பின்னர் நாடுறு பெற்றியும்"

கல்கியினுடைய இதயத்திலும் அறிவிலும் நாளும் பொழுதும் இடையறாமல் நின்று அவருடைய சிந்தனைக்கு ஒளி வீசி வந்தன.

* * *

கற்பனை பொங்கி வந்த ஊற்று அடைத்து விட்டது! எழுதிய பேனா நின்று விட்டது!

ஆனால் அவருடைய இலட்சியங்கள்?

பெரியோர்களுக்கு நினைவுச் சின்னங்கள் நிறுவுகிறார்கள். இன்று கல்கி அவர்களின் உயிர்ச் சின்னமாக விளங்குவது அவர் அல் லும் பகலும் அனவரதமும் பாடுபட்டு உழைத்த இந்தக் 'கல்கி' ஸ்தாபனமே. இந்த ஸ்தாபனத்தை வளர்ப்பதிலும், இதன் வளர்ச்சியில் ஏகோபித்து ஈடுபடுவதிலுமே, மறைந்த ஆன்மாவுக்கு நாம் செய்யும் அஞ் சலி நிரம்பி யிருக்கிறது. இறைவன் அரு ளாலும், தமிழ் அன்னையின் கருணையினாலும் அன்னாரின் ஆன்ம சாந்திக்குப் பிரார்த்திப்ப தோடு, அவர் உருவாக்கிய இலட்சியங்கள் எல்லாம் மேலும் மேலும் வளர வேண்டும் என்று பிரார்த்திப்போமாக.

மறைந்த அமரருக்கு அஞ்சலி கூறுவோ மாக! அந்த ஆத்மா சாந்தியடையுமாக!

# மாணிக்கத்தை இழந்தோம்

### ✧ ராஜாஜி ✧

அபர மொழிகளின் வேலைமுறை யானது தலை கீழாகப் போயிற்று. எனக்காகப் பக்கம் பக்கமாகக் கல்கியில் எழுதித் தீர்க்க விருந்த ஆசிரியர், வயோதிகர்கள் அனைவருக்கும் முன்பாகத் தாமே சாந்தி அடைந்து விட்டார். பாக்கியசாலி! பூரண சந்திரன் மேற்கே மறைவது போல் முழுக் கலையுடன் புகழின் சிகரத்தில் தோய்ந்து மறைந்தார். புகழைக் குறைப்பதற்கும் மறப்பதற்கும் இடமில்லாமல், நம்மை ஏமாற்றி விட்டு ஏகி விட்டார்.

கல்கியின் பிரிவானது பத்திரிகையை வாரம் வாரம் பூர்த்தி செய்து ஊக்கத்துடன் தயாரித்து வந்தவர்களுக்கும், தமிழ் நாடு முழுதும் — நாட்டுக்கு அப்பால் இருக்கும் தமிழர் உலகத்திலும்— ஒவ்வொரு வாரமும் படிக்கக் காத்திருந்த ஆண்–பெண்–சிறியோர் அனைவருக்கும், குடும்பத்துக்கு வந்த ஒரு துக்கத்தைப் போன்ற பெரிய துக்கம் ஆகும். கூரை எரிந்து போன வீடுபோல் காணப்படும் அவர்களுக்கு, "கல்கி" கட்டித் தந்த மகிழ்ச்சி உலகம். என்ன செய்வது? விதியை யாரும் வெல்ல முடியாது. துயரத்தைக் கொண்டு உள்ளத்தைச் சுத்தி செய்து கொள்வோமாக.

'கல்கி'யின் எழுத்துப் பண்பை அனுபவித்தவர்கள் அதன் ரகசியத்தை உணர வேண்டும். தமிழின் சிறப்பு தமிழில் மறைந்து கிடக்கிறது. அது அனைவருக்கும் பொதுவான சொத்து. தோண்டி எடுக்கக் காத்திருக்கிறது. அது கல்கியோடு மறைந்து போக வேண்டியதில்லை. விஷயத்தைத் தெளிவான அறிவுடன் உணர்ந்து கொண்டே யாரும் எழுத வேண்டும். எழுதுபவர் உள்ளத்தில் முதலில் தெளிவு ஏற்பட வேண்டும். சந்தேகமின்றி, குற்றமின்றி, பொருளை உணர்ந்து கொண்டு, அதைத் தெளிவான தமிழில் விளக்கி வந்தார் கல்கி. மொழி அதிகமாக வளரவிடாமல் அடக்குவார். பத்து வார்த்தைகளைச் சொல்லிக் குழப்பாமல் எதையும் நாலு வார்த்தைகளில் விளக்கி முடிப்பார். ஆடம்பரத்தில் விஷயம் மறைந்து போகாமல் காத்து எழுதுவார். உடை கொஞ்சமாகவும் மூர்த்தி அதிகமாகவும் ஜொலிக்கும், கல்கியின் எழுத்தில் நின்று தெரிசனம் காட்டும் கலை மகளின் விக்கிரகம்.



வீட்டிலும் தெருவிலும் ஒலிக்கும் தமிழே தம் தமிழாக வைத்துக்கொண்டு நாவலர் தம் தமிழுக்கும் கவுரவம் செலுத்தி வந்தார். பேசும் தமிழை நன்றாக வளர்த்து வந்தார். புல்லும் தவிடும் புண்ணாக்கும் போட்டுக் கறவை மாட்டை வளர்ப்பது போல் வளர்த்தார். பால் நன்றாகக் கறந்தது.

கற்பனைச் செல்வம் வேறு, எழுத்தின் திறமையும் அழகும் வேறு. கற்பனைச் சக்தியானது வியக்தியின் தனிச் செல்வம். அது பிறப்புடன் வரவேண்டும். பண்பாட்டினால் வளர வேண்டும். பயிற்சியினால் உயிருடன் வடிவம் எடுத்தும் பிறருக்குத் தெரிசனம் தரவேண்டும். இது படிப்பினால் வராது. எந்த மொழியிலும் சில மகான்களுண்டு. இந்தச் செல்வத்தைப் பெற்றுப் புகழுடைந்து மக்களை மேன்மையடையச் செய்தவர்கள் எந்தக் காலத்திலும் உண்டு. இந்தக் காலத்தில் தமிழ் நாட்டில் கல்கி அந்தச் சக்தியைப் பெற்றிருந்தார்.

செய்யுளுக்கு உரிய எதுகை, மோனை இவற்றை வசனத்தில் அடுக்க மாட்டார். அது ஆணுக்குப் பெண் வேஷம் போடுவது போல் என்பது அவர் கருத்து. ஆனால் வசனத்துக்குரிய ஓட்டமும் லயமும் விடமாட்டார். விளக்க வேண்டிய பொருள் தங்குதலும், தடை படுதலுமில்லாமல் ஆற்றொழுக்காகச் சொல்லுடன் செல்லச் செய்வார்.

ஒரு மாணிக்கத்தை இழந்தோம். என் தனித் துயரத்தைச் சொல்லிப் பயனில்லை. சொல்லப் புகுந்தால் அதற்குச் சரியான மொழிகள் இல்லை. விட்டு விட்டேன்.

தமிழ் நாட்டில் ஹாஸ்யத்துக்குத் தண்ணீர் வார்த்து வளர்த்த ஒரு பேராசிரியர் மறைந்து விட்டார். துன்புறுத்துவது ஹாஸ்யம் என்ற பொய்யை அகற்றி, உண்மை மகிழ்ச்சியுடன் கூடிய சிரிப்பைத் தமிழ் நாட்டில் பரப்பி வந்தார். எழுத்தாளர்களுக்கு இத் துறையில் வழி காட்டியாயிருந்தவர் மறைந்து விட்டார். சிரிப்பு எல்லாம் சிரிப்பு அல்ல. அறிவும் இரக்கமும் நிறைந்திருந்தது, கல்கியின் சிரிப்பெழுத்தில். அது அவருடைய தனிச் செல்வமாகத் தமிழுலகம் கண்டது. அந்தச் சிரிப்பை எமன் கொண்டு ஏகி விட்டான் சென்ற ஞாயிறு காலையில்.

# நன்றியுள்ள தமிழ் என்றும் மறவாது!

ம. பொ. சிவஞானம்

“கல்கி” ஆசிரியர் ரா. கிருஷ்ணமூர்த்தி காலமான செய்தி கேட்டுக் கண் கலங்காதார் இல்லை. “கல்கி” நோயுற்றிருக்கிறார் என்று தெரிந்ததும், விரைவில் குணமடைந்து விடுவார் என்றே நம்பினோம். “அபாய கட்டத்தைக் கடந்து விட்டார்” என்ற செய்தி ஒன்றும் கடந்த வாரக் கல்கி இதழில் வெளியாகியிருந்தது. அதைப் படித்ததும், அவர்பால் அன்பு கொண்டவர்கள் ஆனந்தப்பட்டனர். ஆனால், ‘கல்கி காலமானார்’ என்ற செய்தி கேட்டதும் அந்த ஆனந்தம் ஆறாப் பெருந் துயராக மாறி விட்டது.

எவ்வளவுதான் பெரியவர்களாயினும் நல்லவர்களாயினும் என்றேனும் ஒருநாள் மரணமடைவது திண்ணம். ஆனால் மரணம் எதிர்பாராமல் ஏற்படுகின்ற பொழுது, அதன் விளைவாக ஈடு செய்ய முடியாதவர்களை இழக்கின்றபொழுது நாம் எவ்வளவுதான் தைரியசாலிகளாயினும், துயரக் கடலில் மூழ்கி விடுகின்றோம். கரையேற மனமிருந்தும் மார்க்கம் தெரியாமல் தத்தளிக்கின்றோம். இது போன்றதுதான் கல்கியின் பிரிவால் அவருடைய நண்பர்கள் அடைந்துள்ள நிலை. வேதாந்த மனம் படைத்த ராஜாஜியைக் கூடக் கல்கியின் பிரிவு வேதனையி லாழ்த்திவிட்டதென்றால் வேறு சொல்வானேன்?

கல்கியின் உடலுக்கு அவருடைய மைந்தன் மூட்டிய தீ முற்றிலும் அணைந்து விட்டது. ஆனால், அவரது பிரிவால் நமது உள்ளங்களில் மூண்ட தீ இன்னமும் அணையவில்லை. அது எளிதில் அணையக் கூடியதும் அல்ல.

மதிப்பிற்குரிய கல்கி முப்பது ஆண்டுகள் வரை பொதுவாழ்வில் ஈடுபட்டிருந்தார். ஆனால், நூறு ஆண்டுகளில் பிறரால் சாதிக்க முடியாதவற்றை முப்பதே ஆண்டுகளில் சாதித்துக் காட்டினார். முப்பது ஆண்டுகளுக்கு முன்பு தமது கையில் எடுத்த எழுது கோலைக் கண் மூடுங்காலம் வரை கீழே வைக்கவில்லை. ஆம்; ஓய்வின்றி உழைத்தார். ஒரு துறையிலல்ல, பல்வேறு துறைகளில். கலையும் மொழியும் சம்பந்தப்பட்ட துறைகளிலெல்லாம் கல்கியுமிருந்தார். எழுத்தாளர் உலகில் புகுந்த நாள் முதல் இறுதி நாள் வரை அவருடைய செல்வாக்கு வளர் பிறையாகவே இருந்து வந்தது. இடையில் எந்தவொரு சந்தர்ப்பத்திலும் தேய் பிறையாக இருந்ததில்லை. ராஜாஜி கூறியது போல, புகழில் பூரணச் சந்திரனாக இருந்த நிலையில்தான் அவருடைய வாழ்க்கையும் பூரணத்துவம் எய்திவிட்டது.

நாட்டுப் பற்றுக்கும், மொழிப்பற்றுக்கும் இடைவெளி அதிகமிருந்த காலத்தில் அந்த

இரண்டையும் பிணைக்கும் பாலமாக விளங்கினார் கல்கி. அவர் எதைப்பற்றி எழுதினாலும் அதிலெல்லாம் நாட்டுப் பற்றும் மொழிப் பற்றும் கைகோத்துக் களிக் கூத்தாடும் காட்சியைக் கண்டோம். எளிய நடையில் தான் எழுதினார் என்றாலும் தமிழின் இனிமை குன்றாமல் எழுதினார்.

ஆம்; பண்டிதரையும் பாமரரையும் ஒரு சேரத் திருப்திப் படுத்தும் பழகு தமிழில் எழுதி வந்தார்.

தமிழுக்கு இடுக்கண் நேர்ந்த போதெல்லாம், கல்கி கிருஷ்ணமூர்த்தி போர்க்கோலம் கொண்டார். அந்தச் சமயங்களில் அவருடைய எழுதுகோல் வீரன் கையிலிருக்கும் வாள்போல விளங்கியது. இசைத் தமிழுக்கு வாழ்வு தேடப் போர் நடந்த போது கல்கி கிருஷ்ணமூர்த்தி தமிழ்ப் படையின் முன்னணி வீரராக விளங்கி வெற்றி கண்டார். இசைத் தமிழின் திறமையை இயற்றமிழால் எடுத்துக் காட்டிய பெருமை கல்கி ஒருவருக்கே உரிமை. முத்தமிழில், மனதைக் கவரும் சக்தி இயற்றமிழினும் இசைத் தமிழுக்கே அதிகம். ஆனால், கல்கி கிருஷ்ணமூர்த்தி தமது எழுது கோலின் திறத்தால் இயற்றமிழைக் கொண்டு சக்தி மிகுந்த இசைத் தமிழைக் காத்தார்.

தனிப்பட்டவர்களிடமுள்ள குணங்களை எடுத்துக் காட்டுவதிலும், குறைகளை இடித்துக் கூறுவதிலும் கல்கிக்கு ஒரு தனித்திறமை இருந்தது. புகழப் படுபவரே வியக்கும் வகையில், வாய்மையின் வரம்பு கடவாத வண்ணம், புகழும் ஆற்றல் படைத்தவர் கல்கி. தனிப்பட்ட ஒருவரைக் குறை கூறி எழுதும்போதும் அவருடைய வளர்ச்சிக்குக் கேடு செய்ய வேண்டுமென்ற கெட்ட எண்ணம் கல்கிக்கு எந்தச் சந்தர்ப்பத்திலும் இருந்ததில்லை. தவிர்க்க முடியாத காரணத்தால், தாம் ஏற்றுக் கொண்டுவிட்ட கடமையின் காரணமாக தனிப்பட்டவர்களை அழுத்தந்திருத்தமாகக் கண்டித்து எழுதுவார். அதனால், தமக்கு ஏற்படும் மன வருத்தத்தைப் போக்கிக் கொள்வதற்காக அதே நபரைப் புகழ்ந்து எழுதுவதற்காகத் தக்க தருணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருப்பார். பொதுவாகக் கல்கியின் கண்டனம் மாற்றாரின் மதியைத் திருத்துவதாக இருந்ததேயன்றி அவர்களுடைய மனத்தைப் புண்படுத்துவதாக இருந்ததில்லை.

கல்கியின் பிரிவால் பொது மேடை ஒரு பேச்சாளரை இழந்து விட்டது. நகைச் சுவை ததும்பப் பேசுவதில் அவருக்கு இணை அவரேதான். நகைச்சுவை என்பது, தரம் குறைந்து விட்டால் பிறர் மனத்தைப் புண்படுத்தக் கூடிய நையாண்டியாக மாறி விடும். ஆனால் இந்தக் குறைக்கு விதிவிலக்கானது கல்கியின் நகைச்சுவைப் பேச்சு.

தனிப்பட்டவர்களின் வளர்ச்சிக்கு உதவி புரிவதில், கல்கியைப் போன்று விசால மனம் படைத்த வேறொருவரைக் காண்பது அரிது. தம்மைப் பகைத்தவர்களுக்கும் உதவி புரியும் பண்பாளராக விளங்கினார். தமிழ் எழுத்தாளர்களைத் தமது இனத்தவராக, குலத்தவராக எண்ணினார். எழுத்தாளர்களின் துன்பங்களைப் போக்க வேண்டுமென்று அவருடைய உள்ளம் துடித்துக் கொண்டிருந்தது. வளர்ந்து விட்டவர்களுக்கே வாழ்த்துக் கூறிக் கொண்டிருப்பது சிலருடைய வழக்கம். கல்கி, வளர்ந்தோருக்கும் வாழ்த்துக் கூறினார். அதோடு நில்லாமல், வளரும் சக்தி படைத்த இளம் எழுத்தாளர்களையெல்லாம் ஊக்கி உற்சாகப்படுத்தி அவர்களுடைய முன்னேற்றத்திற்குப் பலவிதத்திலும் உதவி புரிந்து வந்தார்.

தமிழன்னை சங்க காலத்திலும், இடைக் காலத்திலும் தனக்கு அணிவிக்கப்பட்ட பழைய ஆபரணங்களோடு காலங் கழித்து வந்தாள். கல்கி தோன்றி, சிறு கதைகள், நாவல்கள் என்ற புதிய அணிகளையும் அழகுறத் தயாரித்துத் தமிழ் அன்னைக்கு அணிவித்து ஆனந்தப்பட்டார். கற்பனா சக்தியில் இசைத் தமிழில் கம்பன் எப்படியோ, அப்படி இயற்றமிழில் கல்கி பெருமை பெற்று விளங்கினார். அவருடைய எழுதுகோலில் பிறக்கும் பாத்திரங்கள் பண்பு குறைந்து காணப்பட்டதில்லை. சமூகத்திற்குப் பாதுகாப்பாகப் போடப் பட்டுள்ள பழைய வேலிகளைப் பாழாக்காமல், சமூக சீர்திருத்தப் புரட்சிக்குப் பாடுபட்டு வந்தார் கல்கி. அவருடைய கற்பனைகளில் புரட்சி வெள்ளம் அலை மோதும். ஆனால் ஒழுக்கம் என்ற கரைகளை உடைத்ததில்லை. தமது இளமைப் பருவம் முதற் கொண்டு இறுதிக் காலம் வரை காந்தீயத்தில் பற்றுக் கொண்டிருந்தார் கல்கி. உத்தமர் காந்தி எழுதிய 'சத்திய சோதனை' என்னும் புத்தகத்தைத் தமிழில் மொழி பெயர்த்துக் கொடுத்ததன் மூலம் தமிழ் மக்களின் உள்ளங்களைக் காந்திய நெறியின் உறைவிடங்களாக்கினார்.

தமிழகம் ஒரு மகத்தான அரசியல் மாறுதலை அடைய விருக்கும் தருணத்தில்,— கன்னித் தமிழ் அரியாசனம் ஏறும் காலம் நெருங்கி வரும் சந்தர்ப்பத்தில் அந்தக் காட்சிகளை எல்லாம் காண முடியாமல் கல்கி கிருஷ்ணமூர்த்தி கண்ணை மூடிவிட்டார். இனி, கல்கி நமது புறக் கண்களுக்குக் காட்சி அளிக்க மாட்டார். ஆனாலும் இறவா வரம் பெற்ற அவருடைய எழுத்தோவியங்கள் நமது கண்களுக்குக் காட்சி அளித்துக் கொண்டிருக்கின்றன. அவற்றின் மூலம் அன்பர் கல்கி தமிழ் மக்களின் உள்ளங்களில் உலாவி வருகின்றார்.

கல்கி கிருஷ்ணமூர்த்தி கன்னித் தமிழுக்குச் செய்துள்ள சேவை தமிழர் மறக்க முடியாதது. தமிழர் மறந்தாலும் நன்றியுள்ள தமிழ் என்றும் மறவாது.

வாழ்க, கல்கியின் புகழ்!

# தமிழ்த் தாயின் சேவை

ரசிகமணி டி.கே.சி.

மயிலாப்பூர் சாந்தோமில் 1931-ம் வருஷம் நான் இருந்தபோது "ஏட்டிக்குப் போட்டி!" "சாரதையின் தந்திரம்" என்ற புஸ்தகங்கள் ஒரு நண்பர் மூலமாக எனக்கு வாசிக்கக் கிடைத்தன. அவற்றின் ஆசிரியர் ரா. கிருஷ்ணமூர்த்தி என்பவர் திருச்செங்கோட்டு காந்தி ஆச்ரமத்தில் இருப்பதாக அந்த நண்பர் சொன்னார். புஸ்தகங்களை வாசித்துக் கொண்டிருந்தபோது, தமிழ் மகளுக்கு என்றும் இல்லாத நல்ல காலம் வந்ததாகவும், படுக்கையோடு படுக்கையாய்க் கிடந்திருந்த அவள் எழுந்து நிற்கவும் உல்லாசமாய் ஓடவும் ஆடவும் ஆரம்பித்தது போலவும் தோன்றிற்று. 'என்றுமுள தென் தமிழ் இயம்பி இசை கொண்டான்' அகத்தியன் என்றார் கம்பர். ஆம், கம்பர் வாக்குப் பொய்த்துப் போகாது. புலவர்கள் என்ன சித்திரவதை வேண்டுமானாலும் செய்யட்டும், மூர்ச மூட்டச் செய்தாலும் செய்யட்டும், தமிழ் ஒரு நாளும் சாகாது என்ற தைரியம் வந்து விட்டது. மறுநாள், பஞ்ச காவியங்கள் என்றும் சங்க நூல்கள் என்றும் சொல்லும் பழந் தமிழ் நூல்களைக் கற்றனுபவித்ததை விடத் தமிழ் மக்களையும் தமிழ் மக்களின் பாஷையையும் அதிகமாகக் கற்றனுபவித்த மகா மகோபாத்யாய சாமிநாத ஐயர் அவர்களிடம் நான் போய், "ஐயா, தமிழ் நாட்டில் ஒருவர் தமிழ் எழுதுகிறார்" என்றேன். "அவர் யார்?" என்று கேட்டார்கள். "ஆசிரியரைத் தெரியாது. அவர் திருச்செங்கோட்டில் இருக்கிறாராம். அவர் பெயர் ரா. கிருஷ்ணமூர்த்தியாம். 'ஏட்டிக்குப் போட்டி'யையும் 'சாரதையின் தந்திர'த்தையும் தாங்கள் வாசிக்க வேண்டும். அது தான் தமிழ். தமிழருக்குத் தனியான நடையுடை பாவனை. அவற்றைக் காட்டுவதற்கென்றே ஏற்பட்டது போன்ற தமிழ் மக்களுடைய பாஷை, இவற்றையெல்லாம் அனுபவித்து எழுதுவதே தமிழ் அல்லவா? அந்தப் புஸ்தகங்களில் அத்தகைய தமிழைக் காணலாம்" என்று சொன்னேன்.

****



ஆசிரியர் "கல்கி"க்குச் சொந்த ஊர் மாயவரம் பக்கத்திலுள்ள புத்தமங்கலம் என்னும் சிறு கிராமம். நானும் அங்கே போய்த் தான் இருக்கிறேன். மகுடபதியை வாசித்த பிறகு ஆசிரியர் கல்கி பிறந்து வளர்ந்து சுக துக்கங்களை அனுபவித்த இடம் கோயமுத்தூர் ஜில்லாதான் என்று சொல்லத் தோன்றுகிறது.

ஆசிரியர் ஏதோ சொற்ப காலந்தான் கவுண்டர்கள் நாடாகிய கொங்கு நாட்டில் வாழ்ந்திருக்கிறார். ஆனாலும் அங்குள்ள மக்களோடு இதயம் கலந்தவாறாக வாழ்ந்திருக்கிறார். மக்களோடு மாத்திரமல்ல, கொங்கு நாட்டு நிலத்திலும் புழுதியாடத் திளைத்திருக்கிறார்.

இந்த அபூர்வமான இதயப் பண்பு காரணமாக, கதையில் வருகிற பாத்திரங்களும், மரங்களும், செடிகளும், வீடுகளும் கொங்ந

நாட்டு மண்ணிலிருந்தே முளைத்துச் செழித்து வளர்கின்றன.

எந்த விதத்திலும் பாத்திரங்களையும் களங்களையும் கொங்கு நாட்டை விட்டுப் பெயர்த்து எடுக்கமுடியாது. வேறொரு ஜில்லாவில் நட்டு வைக்க முயன்றால் பயன் இராது.

உண்மையான இலக்கியத்துக்கு இதுதான் சரியான லக்ஷணம்.

தாமஸ் ஹார்டி என்ற நாவலாசிரியர் டஜன் கணக்கில் நாவல்கள் எழுதியிருக்கிறார். எல்லாவற்றிற்கும் களம் இங்கிலாந்திலுள்ள ஒரு ஜில்லாதான். அகல உழவில்லை அவர்; ஆழ உழுதார். நல்ல மேனி கண்டது.

கம்பரும் இந்த வர்க்கத்தைச் சேர்ந்தவர்தான். இமய மலையையும் போய்த் தொட்டுவிட்டு வந்தவர் கம்பர். ஆனாலும் அவருக்குக் களம் தமிழ் நாடுதான். பாத்திரங்களும் தமிழர்களே!

நம்முடைய 'கல்கி' ஆசிரியர் வட நாடெல்லாம் சுற்றித் திரிந்தவர். பம்பாய், பஞ்சாப், வங்காளம், எல்லாம் அவருக்குத் தெரியும். அங்குள்ள மக்களையும் இப்பேர்ப்பட்டவர்கள் என்று தெரியும். ஆனால் உணர்ச்சியோடு ஒட்டுவது தமிழ் நாட்டு மண்தான். அதிலிருந்து தான் உண்மையான தமிழ் இலக்கியப் பயிர் உண்டாகக் கூடும். அற்புதமான நல்ல பயிரும் உண்டாயிருக்கிறது!

* * *

தமிழுக்குக் "கல்கி" நல்ல சேவை செய்கிறார் என்று எல்லோரும் சொல்லுகிறார்கள். மகுடபதியை வாசித்ததும் என்ன தோன்றுகிறது என்றால், தமிழ்தான் அவருக்குச் சேவை செய்கிறது என்று சொல்லத் தோன்றுகிறது. நம்முடைய கண்ணுக்குத் தோன்றிய காட்சிகள் அனுபவிக்கக் கூடிய காட்சிகள் எல்லாம் தெள்ளத் தெளிந்த தமிழின் மூலமாக நம் முன் வந்து நிற்கின்றன. சாமான்யமாகத் தெருவில், திண்ணையில் அடுக்களையில் வழங்கும் சொல்லுக்கு என்ன என்ன சக்தியெல்லாம் இருக்கிறது என்று வியக்கத் தோன்றுகிறது. மனசில் தோன்றும் அபூர்வமான நிகழ்ச்சிகளைப் பளிங்குக் கூட்டில் வைத்துக் காட்டியது மாதிரிக் காட்டுகிறது ஆசிரியரது தமிழ்.

[கல்கி ஆசிரியர் எழுதிய 'கணையாழியின் கனவு', 'மகுடபதி' ஆகிய நூல்களுக்கு டி. கே. சி. எழுதியுள்ள முன்னுரைகளிலிருந்து எடுத்தவை.]

★ ★ ★ ★ ★ ★

# துணை நிற்கும்!

அருமை நண்பர் சதாசிவம் அவர்களுக்கு,

இப்பொழுதெல்லாம் பத்திரிகைகளில் மரணச் செய்தி வருவதே சகஜமாகி விட்டது. ஆயினும் கல்கி ஆசிரியர் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி காலமாவார் என்று யாரும் எதிர்பார்க்க வில்லை. அது ஒரு பேரிடி போல் அவருடைய நண்பர்களுக்கெல்லாம் வந்தது. நீங்கள் எத்தகைய துயரக் கடலில் ஆழ்ந்திருப்பீர்கள் என்பதை என்னால் கற்பனை செய்து பார்க்க முடிகிறது. நீங்கள் இருவரும் சுயராஜ்யப் போர் நிகழ்ந்த காலத்திலும், அதற்குப் பின்னரும் தோளோடு தோள் சேர்ந்து நின்று அரும்பணி புரிந்த நண்பர்கள். கல்கி பத்திரிகை உங்கள் இருவருடைய ஒருமித்த முயற்சியின் பயனாகும். அது இன்று கிருஷ்ணமூர்த்தியின் அற்புத நினைவுச் சின்னமாகவே விளங்குகிறது. இப்பொழுது முழுப் பொறுப்பும் உங்கள் மீது சார்ந்திருக்கிறது. இப்பொழுது நேர்ந்துள்ள பெரும் துயரம் உங்களுக்கு ஒரு சோதனையாகும். இந்தக் கஷ்ட நிலையில் எங்கள் மனமார்ந்த அனுதாபங்களை உங்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். உங்களுக்கு இயல்பாய் ஏற்பட்டுள்ள தைரியத்தோடு, இந்தத் துயர நிலையைச் சமாளித்து விடுவீர்கள் என்பதில் எனக்குப் பரிபூரண நம்பிக்கையுண்டு. 'கல்கி'யின் கொடி உச்சிவானில் என்றென்றும் வெற்றியோடு பறந்து கொண்டிருக்க வேண்டும். அது நிரந்தரக் "கல்கி"யாக நிற்குமாக!

பம்பாய்
6—12—54

கே. ஏ. சிதம்பரம்

["பம்பாய் கிரானிகள்" பத்திரிகையின் உதவி ஆசிரியர் ஸ்ரீ சிதம்பரம் அவர்களைப் போல் இன்னும் பல நண்பர்களும் இப்படித் தைரியமூட்டும் மொழிகளை அள்ளிச் சொரிந்திருக்கிறார்கள். பெரும் துயரத்தில் மூழ்கியிருக்கும் இந்தத் தருணத்தில், அன்பர்களின் ஆறுதல் மொழிகள் அவர்களுக்கு என்னிடமும் 'கல்கி' பத்திரிகையிடமும் உள்ள உண்மையான பேரன்பைக் காட்டுகின்றன. அவர்கள் அன்பின் சக்தி எனக்கு என்றும் துணை நிற்கும் என்பதில் சந்தேக மில்லை. மிக்க நன்றி.

— சதாசிவம் மானேஜிங் டைரக்டர், கல்கி, சென்னை.]




'தினம் தினம் பொழுது புலரத்தான் செய்கிறது. சூரியன் உதயமாகத்தான் செய்கிறான்.

ஆனாலும் நாளது டிசம்பர் மாதம் ஐந்தாம் தேதி ஞாயிற்றுக்கிழமை உதயமான சூரியன் கண்ணீருடன் வான வீதியில் தோன்றினான். இதை மற்ற இடங்களில் உள்ளவர்களை விட சென்னை நகரில் உள்ளவர்கள் நன்றாகக் கண்டார்கள். "இது தினந்தோறும் உதயமாகும் சூரியன் அல்ல; ஏதோ விபரீத சம்பவம்—நடக்கக்கூடாத சம்பவம் நடந்து விட்டது என்பதை அறிவிக்கும் துக்க மயமான சூரியன்!" என்பதை அறிந்து கொண்டார்கள்.

அன்று அதிகாலையிலேயே கல்கி மறைந்து விட்ட செய்தி கேட்டு மக்கள் காந்தி நகரில் உள்ள கல்கியின் இல்லத்தை நோக்கி, தாயை இழந்த கன்றைப் போலக் கதறிக் கொண்டு ஓடினார்கள். ஏழு மணிக்குள்ளாகவே நூற்றுக்கணக்கான அன்பர்கள் கூடி விட்டார்கள்.

செய்தி கேட்ட உடனேயே சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் அவர்கள் கல்கியின் வீட்டுக்கு வந்து விட்டார்கள். அவர்கள் முகத்தில் இது வரை யாருமே காணாத சோகம் குடிகொண்டிருந்தது. ஏற்கனவே, கல்கி மானேஜிங் டைரக்டர் ஸ்ரீ சதாசிவம் அவர்களும், ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களும், குடும்பத்தினரும் வந்திருந்தார்கள். ஸ்ரீ சதாசிவம், கல்கி அவர்கள் நோய்வாய்ப் பட்டிருக்கும்போது இரவென்றும் பகலென்றும் பாராமல் அன்னாரின் உடல் தேறுவதற்கு உரிய வழிகளையெல்லாம் முயன்று முயன்று பாடுபட்டார். தாம் பட்ட பாடெல்லாம் வீணாகி விட்டதே என்ற வேதனை அவர் முகத்திலே பொங்கித் ததும்பியது. களை பொருந்திய அவர் முகம் கறுத்து விட்டது. கண்ணீரும் கம்பலையுமாக நின்ற கணக்கற்ற மக்களைக் கண்கொண்டு பார்க்க இயலவில்லை.

** ** **

வந்தவர்களை வரவேற்றுச் சிரிக்கச் சிரிக்கப் பேசிவந்த கல்கி அவர்களின் புனித உடல் அவர் வீட்டின் முன் கூடத்தில் வைக்கப்பட்டிருந்தது! கண்களை மூடிக் கொண்டு உறங்குவது போன்றேதான் காட்சியளித்தார். உயிர் பிரிந்த உடல் போலவோ, உணர்வு இல்லாத முகம் போலவோ தோன்றவில்லை. அந்த முகத்திலே ஏதோ ஒரு ஒளி தவழ்ந்து கொண்டுதான் இருந்தது.

தம்மைச் சூழ்ந்து நின்றவர்களின் துயரைத் துடைக்கப் பாடுபட்டுவந்த 'கல்கி' அவர்கள் இப்பொழுது தமக்கு எதிரிலேயே கண்ணீருடன் நிற்பவர்களின் கண்ணீரைத் துடைக்காமல் கண்களை மூடிக் கொண்டு அமைதியாகப் படுத்திருந்த போதுதான், அவர் நம்மை விட்டுப் பிரிந்து விட்டார் என்று தோன்றியது. துக்கம் மேலும் மேலும் பொங்கிப் பரவ ஆரம்பித்தது!

அன்று காலையில் அமரரான கல்கிக்குத் தங்கள் இறுதி மரியாதையையும் வணக்கத்தையும் செலுத்தக் கூடியிருந்தவர்கள் பலரும் ரேடியோவில் செய்தி கேட்டு ஓடி வந்தவர்களே.

மதிப்புக்குரிய தலைவர் ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார், கனம் சி. சுப்பிரமணியம், கனம் பக்தவத்ஸலம், கனம் பரமேஸ்வரன், சபாநாயகர் ஸ்ரீ சிவஷண்முகம் பிள்ளை, ஆனந்த விகடன், ஜெமினி ஸ்தாபன அதிபர் ஸ்ரீ எஸ். எஸ். வாஸன், தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீ எல். எஸ். கரையாளர், இந்தியன் எக்ஸ்பிரஸ் அதிபர் ஸ்ரீ ராமநாத் கோயங்கா, தினமணி ஆசிரியர் ஸ்ரீ ஏ. என். சிவராமன். சென்னை கவர்னரின் மெய்காப்பாளர், ஸ்ரீ வி. எஸ். தியாகராஜ முதலியார், ஸ்ரீ ம. பொ. சிவஞானம், கம்யூனிஸ்டு ஸ்ரீ பி. ராமமூர்த்தி, சோஷலிஸ்ட் ராதாகிருஷ்ணன், ஸ்ரீமதி விஜயலட்சுமி, சென்னை அரசாங்க செய்தி அதிகாரி ஸ்ரீ ஆர். பார்த்தசாரதி, ஸ்ரீ சோமு, ஸ்ரீ துமிலன், நாரதர் ஸ்ரீனிவாச ராவ், ஸ்ரீ தேவன், ஸ்ரீ ஏ. ஜீ. வெங்கடாச்சாரி, பிரசண்ட விகடன் ஸ்ரீ நாரண துரைக்கண்ணன், குமுதம் ஸ்ரீ எஸ். ஏ. பி. அண்ணாமலை, ராயல் சைக்கிள் சுந்தரமய்யர், ஹிந்தி பிரசார சபை ஸ்ரீ சத்தியநாராயணா. ஆடிட்டர் சூரி, தமிழ் எழுத்தாளர் சங்கக் காரியதரிசி ஸ்ரீ பி. கோதண்டராமன், சகோதரி சுப்புலக்ஷ்மி அம்மாள், ஸ்ரீமதி முத்துலக்ஷ்மி ரெட்டி, கல்கி உதவி ஆசிரியர்கள், கல்கி காரியாலயச் சிப்பந்திகள், கல்கி அச்சக ஊழியர்கள் எல்லோரும் வந்திருந்தார்கள்.

இன்னும் சங்கீத வித்வான்கள், முசிரி ஸ்ரீ சுப்பிரமண்ய ஐயர், மாயூரம் கிருஷ்ணய்யர், ஸ்ரீ எம். கே. தியாகராஜ பாகவதர், ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாள். ஸ்ரீமதி ஜயம்மாள், ஸ்ரீமதி பால சரஸ்வதி, ஸ்ரீமதி எம். எல். வசந்தகுமாரி முதலியவர்களும், நாடகக் கலைஞர்கள், ஸ்ரீ டி. கே. ஷண்முகம் கோஷ்டியார், ராமகிருஷ்ணா அமெச்சூர் நாடகக் குழுவினர், ஹாஸ்ய நடிகர்கள் ஸ்ரீ சாரங்கபாணி, ஸ்ரீ டி. ஆர். ராமச்சந்திரன், ஸ்ரீ டி. எஸ். துரைராஜ், ஸ்ரீ சிவதாணு, பிரண்ட் ராமசாமி ஆகியவர்களும் இன்னும் எண்ணற்ற பிரமுகர்களும் எழுத்தாளர்களும் ரசிகர்களும் கூடியிருந்தனர்.

பதினோரு மணிக்குக் கல்கி அவர்களின் இறுதி யாத்திரையில் எல்லோரும் மௌனமே உருவமாகக் கலந்து கொண்டனர். கல்கி அவர்களின் திருமேனியை கல்கிப் பத்திரிகையின் மானேஜிங் டைரக்டர் ஸ்ரீ சதாசிவம் அவர்களும் இன்னும் சில அன்பர்களும் தோளில் சுமந்து சென்றனர்.

மயானத்தில் ஆசிரியர் கல்கி அவர்களின் தொண்டைப் பற்றிப் பலர் பேசினர். ராஜாஜி அவர்கள் துக்க மிகுதியால் ஒன்றுமே கூற முடியாமல் இருந்து விட்டார்கள். ஸ்ரீ ம. பொ. சிவஞானம். சித்தூர் தளபதி ஸ்ரீ கே. விநாயகம், திருவண்ணாமலை அண்ணாமலைப் பிள்ளை, ஸ்ரீ புத்தனேரி சுப்பிரமணியம், ஸ்ரீ நாரண துரைக்கண்ணன், ஸ்ரீ ஏ. ஜீ. வெங்கடாச்சாரி, ஸ்ரீ டி. கே. ஷண்முகம், ஸ்ரீ சச்சிதானந்தம் பிள்ளை, பெரம்பூர் இளைஞர்

காங்கிரஸ் காரியதரிசி, நடராஜா கல்விக் கழக அங்கத்தினர், ஸ்ரீ ந. சஞ்சீவி முதலியோர் உணர்ச்சிப் பெருக்கோடு தங்கள் நன்றியையும் மரியாதையையும் தெரிவித்துக் கொண்டு கல்கி அவர்களைப் பற்றி உணர்ச்சியோடு பேசினர்கள்.

பிற்பகல் கல்கியின் மறைவுச் செய்திகேட்டு நூற்றுக் கணக்கானவர்கள் கையில் மலர் மாலைகளுடனும், கண்ணீருடனும் வந்து கொண்டிருந்தனர். கல்கி அவர்களின் புனித உடலைக் காண முடியவில்லையே என்று ஏங்கித் தவித்தனர்.

நமது முதன் மந்திரி காமராஜ நாடார் அவர்கள் நாலு மணிக்கு வந்தார். அவரைத் தொடர்ந்து பல பிரமுகர்களும் கல்கி நண்பர்களும் ஒருவர் பின் ஒருவராகத் தொடர்ந்து வந்த வண்ணமிருந்தனர். அன்று முழுதும் கல்கி அவர்களின் இல்லத்தில் இந்தக் காட்சியின் சோகம் அளவு கடந்திருந்தது.

## அனுதாபத் தந்திகள்:

டிசம்பர் ஐந்தாம் தேதி யன்று கல்கி அவர்களின் வீட்டுக்கு நேரில் வந்திருந்தவர்களைத் தவிர இந்தியா முழுவதிலிருந்தும் மற்றும் இலங்கை முதலிய இடங்களில் இருந்தெல்லாம் தந்தி மூலம் அனுதாபச் செய்திகள் வந்துகொண்டிருக்கின்றன:

நண்பர் கிருஷ்ணமூர்த்தியின் திடீர் மரணம் கேட்டு மிகவும் துயரம் அடைந்தேன். இது தமிழ் மக்களுக்கே பெரிய துக்கம். சென்னை நகரம் ஒரு சிறந்த பிரமுகரை இழந்து விட்டது. அதன் இலக்கிய வாழ்வும், பொது சேவையும் வறுமையுற்றது. கடவுள் ஆறுதல் அளிப்பாராக. அவரது இலக்கிய வாழ்வும், பொதுநல வாழ்வும் என்றும் மறக்க முடியாதவை.

(முகாம்) கொச்சி — ஸ்ரீ பிரகாசா (சென்னை கவர்னர்)

●

"கல்கி" கிருஷ்ணமூர்த்தியின் எதிர்பாராத அகால மரணச் செய்தி கேட்டு மிகவும் அதிர்ச்சியுற்றேன். நண்பர்களுக்கும் சக ஊழியர்களுக்கும் எனது ஆழ்ந்த அநுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

க. சந்தானம்
(விந்தியப்பிரதேசக் கவர்னர்)

●

கல்கியின் மறைவு கேட்டு ஆழ்ந்த துயரமுற்றேன். — டி. டி. கிருஷ்ணமாச்சாரி
யூனியன் தொழில், வர்த்தக மந்திரி

●

செய்தி அறிந்து ஸ்தம்பித்துக் கல்லானேன். கல்கி தேசத்தின் நிதியாக இருந்தார், என்றும் இருப்பார். —தேவதாஸ் காந்தி

●

மதிப்புக்குரிய கல்கி அவர்களின் மறைவு கேட்டு மனத்துயருற்றேன். அவர் என் அருமை நண்பர், தலைசிறந்த தேசபக்தர்; என் தகப்பனருடன் பல துறைகளிலும் சேர்ந்து உற்சாகத்துடன் உழைத்தவர்; தேச விடுதலைப் போராட்டத்தில் பெரும் பங்கு கொண்டவர்; தமிழ், தமிழ் இசை, தமிழர் பண்பாடு, தமிழ்ப் பத்திரிகைத் தொழில் ஆகியவற்றின் உயர்வுக்கு அருந்தொண்டு ஆற்றி மக்கள் உள்ளத்தில் அழியா இடம் பெற்றவர்.

—ராஜாசர். முத்தையா செட்டியார்

●

அருமை நண்பர் கல்கியின் பிரிவுச் செய்தி எல்லை மீறிய சோகத்தை அளிக்கிறது. அவர் பிரிவினால் தமிழகம் அஞ்சா நெஞ்சம் படைத்த விமர்சகரையும், பெரிய அறிஞரையும், சீர்திருத்த வாதியையும் இழந்து விட்டது! —டாக்டர் அழகப்ப செட்டியார்

●

தமிழும் தமிழகமும் வாழும் வரையில் கல்கியின் நாமமும் வாழ்ந்திருக்கும்.

தருமபுரம் மகா சன்னிதானம்

●

கல்கியின் மறைவு தமிழகத்துக்கே ஈடுபடுத்த முடியாத பெரும் நஷ்டமாகும்; சிறந்த தமிழ் எழுத்தாளர்; அவர் கதைகள் பண்டைக் கலாச்சாரத்தையும் கலைகளையும் வெகு அழகாகச் சித்திரிப்பவை; புதுக் கருத்துக்களையும் புனைந்து கூறுபவை. உண்மையை அஞ்சாமல் உரைக்கும் உற்சாகம் மிகுந்த இலக்கிய மேதையைத் தமிழகம் இழந்து விட்டது. —குன்றக்குடி அடிகளார்

●

கல்கியின் மறைவு தமிழகத்துக்கு ஈடு செய்ய முடியாத நஷ்டம்.

டி. எஸ். அவினாசிலிங்கம்

●

சிறுகதை எழுத்தின் தந்தை, கலை விமர்சகர் மறைந்து விட்டார். எனது ஆழ்ந்த அனுதாபங்கள்.

—டாக்டர் சிதம்பரநாதச் செட்டியார்
அண்ணாமலை நகர்

●

திருவாங்கூர் தமிழகமே, 'கல்கி' ஆசிரியரின் அகால மறைவைக் கேட்டுத் திடுக்கிட்டுக் கண்ணீர் வடிக்கிறது.

ராமசிவராம பிள்ளை
தி. த. கா. தலைவர்

●

கல்கியின் அகாலப் பிரிவு தமிழ் இலக்கிய உலகிலே ஈடு செய்ய முடியாத நஷ்டம்.

மட்டக்களப்பு — தொண்டைமான்
தலைவர், இலங்கை டெமாக்ராடிக் காங்கிரஸ்

●

எனது உள்ளார்ந்த அனுதாபங்கள்.

—சுவாமி சகஜானந்த சரசுவதி

கல்கி மிகப் பெரிய ஆசிரியர், எழுத்தாளர் பத்திரிகையாளர். கல்கியின் அகால மறைவு குறித்துக் கும்பகோணம் பெரிதும் வருந்துகின்றது அவரின் தேசத் தொண்டு அபாரமானது.

கும்பகோணம் கந்தசுவாமி மூப்பனார்

●

கல்கியின் மறைவைக் கேட்டுத் துணுக்குற்றோம். தமிழகத்துக்கும் தமிழ் இலக்கியத்துக்கும் ஈடு செய்ய முடியாத பெரு நஷ்டமாகும்.

—பம்பாய் ஷண்முகானந்த சபா

●

கல்கி அவர்கள் இனி இல்லை. ஆயினும் அவருடைய அற்புத இலக்கியங்கள் அமரத்துவம் பெற்று என்றென்றும் நிலைக்கும். அவையே நமக்கு இன்று ஓரளவு ஆறுதல் அளிப்பவையாகும்.

—சர்க்கார் ஊழியர்களின் தமிழ்க் கலைக் கழகம்
இலங்கை

●

கல்கியின் திடீர் மறைவு என்னைப் பெரும் துயரத்தில் ஆழ்த்தி விட்டது!

எட்டயபுரம் மகாராஜா

●

இதயங் கலந்த அனுதாபங்கள். உங்கள் துயரத்தில் நாங்களும் பங்கு கொள்ளுகிறோம்.

—கடையநல்லூர் பாரதியார் சங்கம்

●

அருமை நண்பர் ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் மறைவு தமிழர்களுக்கு ஈடு செய்ய முடியாத நஷ்டம்.

நடேசன் பிள்ளை
இலங்கை, தபால் இலாகா மந்திரி

●

கல்கியின் அகால பிரிவைக் கேட்டு, திடுக்கிட்டோம். அநுதாபங்கள்.

தென்னிந்தியர் சங்கம், விஜயவாடா

●

மாபெரும் எழுத்தாளரின் பிரிவைக் கேட்டு ஆறாத் துயரமுற்றோம்.

பாரத இளைஞர் தேசிய கழகம், கொழும்பு

●

பின் கண்ட கல்கி அன்பர்களும் அனுதாபத் தந்திகள் அனுப்பி வைத்திருக்கின்றனர்:

ஸ்ரீமதி பாப்பா ராஜலக்ஷ்மி, டேராடூன். ஸ்ரீமதி நாராயண், சிப் ஹவுஸ், புது டில்லி. ஸ்ரீ கந்தசாமி, பம்பாய். கிருஷ்ணமூர்த்தி, பம்பாய். ராஜன், புது டில்லி. வெங்குசாமி, புது டில்லி. கஸ்தூரி சந்தானம், கல்கத்தா. பெரியநாயகம், கொக்குவில், இலங்கை. துளசி ஐயா வாண்டையார், பூண்டி, தஞ்சை ஜில்லா. டி. எஸ். ஆர்., கும்பகோணம். மகராஜன், சப் ஜட்ஜ், புதுக்கோட்டை. இக்னேஷியஸ். எர்ணாகுளம். வி. ஆர். நரசிம்மன், தீப. நடராஜன், திருக்குற்றாலம். ஏ. பி. வி. வீரபாகு, தூத்துக்குடி. ராஜ் அரியரத்தினம், ஈழகேசரி, சுன்னாகம். ராமய்யா, பாளையங் கோட்டை. பூர்ணம் விசுவநாதன், புது டில்லி. அமிருதசுவாமி, எட்டயபுரம். கி. ரா. கோபாலன், கும்பகோணம். அ. சீனிவாச ராகவன், தூத்துக்குடி. ஷண்முக சுந்தரம், மதுரை. மரியப்ப நாடார், எட்டயபுரம். சுவாமி அய்யங்கார், மாயூரம். மகாதேவன், குடாலை, திருச்செந்தூர். ராமன் தம்பதிகள், பம்பாய். ஜகந்நாதன், கும்பகோணம். செம்மங்குடி சீனிவாசய்யர் திருவனந்தபுரம். திருஞானம், மன்னார்குடி. சிவராம், பம்பாய். விசுவநாதன், சேலம். சுப்பராமன் — சுந்தரராமன், மதுரை. ராமலிங்கம், பம்பாய்.

●

மேலும் அனுதாபத் தந்திகள் அனுப்பிய நமது கல்கி ஏஜண்டுகள்:

ஷண்முக சுந்தரம், உடுமலைப் பேட்டை. அன்னமராஜா, ராஜபாளையம். வெங்கடேசுவரன், சோழவந்தான். ஜெயராமன், உசிலம்பட்டி. வைத்தியலிங்கம், பதுல்லா. சோமசுந்தரமய்யர். சக்தி நூல் நிலையம், பட்டிகோலா. கடைக்கார நாடார், சிவகாசி. கே. டி. பரமசிவம், கயத்தாறு. பாக்கியம் பிள்ளை, பனங்குடி. சிதம்பரம், ஜாம்நகர். டி. தம்பித் துரை, யாழ்ப்பாணம். சிவ சுப்பிரமண்யம், செய்யூர். எஸ். தங்கவேல், குன்னத்தூர். வீராம ரெட்டியார் அண்டு கம்பெனி ஹட்டன். ராகவன், செகந்திராபாத். பால சுப்பிரமணியம், பெல்லாரி. வைஸ், வெஸ்டன், கொழும்பு. வேதராமய்யர், ஜீயபுரம். மாசிலாமணி செட்டியார், அம்மாப்பேட்டை. கும்பலிங்கம், நாகர்கோயில். குருசுவாமி, சின்னமனூர். பழனியாண்டி, திரிகோணமலை. சுப்ரமணியன், தஞ்சாவூர். ஏ. ராமலிங்கம், வந்தவாசி. லக்ஷ்மணன், தேனி. ஆறுமுகம் பிள்ளை, குருநகலா. முருகேசம் பிள்ளை அன் ஸன்ஸ், நாவலப்பிட்டியா. ப்ரீஜலண்டு டிரேடிங் கம்பெனி, அனுராதபுரம். காசி முதலியார், திருவேத்திபுரம். கணேசன், செட்டி நாடு. முருகய்யா பிள்ளை, திருத்துறைப் பூண்டி. பரதன், திருப்பனந்தாள். ராமன், புது டில்லி. நடராஜன், விஜயபுரம். ராமலிங்கம், திண்டிவனம். பரமேசுவரய்யர், ராமேசுவரம். சி. தங்கய்யன், ஸ்ரீரங்கம். சீனிவாச நாயுடு, புதுக்கோட்டை. மணியம், ரக்வானை. ராமய்யா, பசுமலை. ராஜமாணிக்கம், திருவிடை மருதூர். ராஜாராம், நிலக்கோட்டை. நடேசன், தர்மபுரி. சுப்ரி, கோயமுத்தூர். சாரதி, கோல்மூரி. கே. டி. எம்., டிக்கோயா. இசைவநாடார், நுவாரா இலியா. ஹாஜி கே. பீர் முகம்மது, கண்டி. சுப்பய்யா நாயுடு, களக்காடு. கல்கி ஏஜண்டு, சித்தோடு. ராமசுவாமி அய்யர், பங்களூர். ஷண்முகம் பிள்ளை, கோவில்பட்டி. கஞ்சா கவுடர், கோத்தகிரி. ராதா கிருஷ்ணன், மூசிரி. சீனிவாசன், காரைக்குடி. கண்ணன், பம்பாய். ராமசாமி, வளவனூர். சந்துரு, சேலம்.

இன்னும் அனுதாபத் தந்திகளும் அனுதாபக் கடிதங்களும் வந்து கொண்டே இருக்கின்றன. அன்பர்கள் அனுப்பி வைத்த அனுதாபக் கடிதங்களையும், இன்னும் வந்து கொண்டிருக்கும் தந்திகளையும் அடுத்த 'கல்கி' இதழில் காணலாம். அளவு கடந்த அனுதாபத்துக்கு எங்கள் நன்றி.

★ ★ ★ தன்னைப் பற்றி ஒருவர் தன்னுரையாகச் சொல்லுவது கடினமான காரியம். ரச முரண்பாடும், பிறருக்குச் சலிப்பும் தோன்றாத விதத்தில் இந்தக் காரியத்தைச் செய்வது ஒரு பெரும் சாதனை. இந்தச் சாதனையுங்கூட, உண்மையும் அழகும் கலந்து அருமையான தமிழில் வெளிவரும் என்பதற்கு ஒரு உதாரணம், கல்கி எழுதிய 'பாங்கர் விநாயக ராவ்' என்ற நூலின் முன்னுரை. அதில் ஒரு பகுதியைக் கீழே கொடுத்திருக்கிறோம் :

# எனது பூர்வாசிரமம்

**கல்கி**

இருபத்திரண்டு வருஷங்களுக்கு முன்னால் ஈரோட்டு மாநகரின் வீதியில் ஒரு ஜட்கா வண்டியில் நமது முன்னுரை பின்நோக்கி ஆரம்பமாகிறது. இரவு சுமார் எட்டு மணி இருக்கும். வானத்தில் சந்திரனும் நட்சத்திரங்களும் கீழ் நோக்கியவண்ணம் இருந்தன. வீதியில் ஜனங்கள் அங்குமிங்கும் நோக்கியவண்ணம் நடமாடிக் கொண்டிருந்தார்கள். சில சமயம் அவர்களுடைய பார்வை நமது ஜட்கா வண்டியின் பேரிலும் விழுந்தது. அவ்விதம் எல்லாருடைய கவனத்தையும் கவர்ந்து இழுத்த ஜட்கா வண்டிக்குள்ளே அமர்ந்திருந்தது யார்! இயம்பவும் வேண்டுமோ! இந்த நூலின் ஆசிரியராகிய அடியேன் ராவன்னுதான். ஒரு பெட்டி, ஒரு படுக்கை சகிதமாக அந்த வண்டிக்குள் அமர்ந்திருந்தேன். எதற்காக அந்த நேரத்தில் அந்த ஜட்கா வண்டியில் நான் அமர்ந்திருந்தேன்! என் உள்ளத்தில் அச்சமயம் பொங்கித் ததும்பிய கவலைக் கடலுக்குக் காரணம் யாது!—என்று வாசகர்கள் கேட்கலாம். இதோ பதில் சொல்லுகிறேன்.

ஈரோட்டிலிருந்து சென்னை மாநகர் போவான் வேண்டி இரவு ஒன்பது மணிக்குச் செல்லும் நீராவித் தொடர் வண்டியைப் பிடிப்பதற்காக அந்தப் புரவி வண்டியில் பிரயாணம் செய்து கொண்டிருந்தேன்... என்ன சொல்கிறீர்கள்! முன்னுரை கொஞ்சம் முன்னேறட்டும் என்றுதானே! என்ன செய்யட்டும், ஐயா! ஜட்கா வண்டி முன்னேறினால்தானே கட்டுரையும் முன்னேறும். அந்த ஜட்கா வண்டியை இழுத்த குதிரை அன்று ஏனோ சண்டித்தனம் செய்தது. முன்னால் பத்தடி சென்றால் பின்னால் பதினைந்தடி சென்றது. வண்டிக்காரன் குதிரையை இருபது அடி அடித்தான். கொஞ்ச நேரம் இப்படி நடந்த பிறகு நான் ஒரே அடியாகப் பிடிவாதம் பிடித்து ஜட்கா வண்டியிலிருந்து கீழே இறங்கி விட்டேன். ரயில்வே ஸ்டேஷனுக்கு நடந்தே போக ஆரம்பித்தேன். ஆனாலும் ரயிலைப் பிடிக்க முடியவில்லை! ரயிலுக்கு என்னைப் பிடிக்க வில்லையோ, என்னமோ, அது எனக்காகக் காத்திராமல் போயே போய் விட்டது!

அன்று ரயிலைப் பிடிக்க முடியாமற் போன காரணத்தினால் என் வாழ்க்கையில் இணையில்லாத பாக்கியத்தை அடைந்தேன். இரவு ரயில் தவறிப் போய்விட்ட படியால் மறுநாள் காலை ரயிலுக்குப் போகும்படி ஆயிற்று. ரயில் நேரத்துக்கு ஒரு மணி முன்னாலேயே புறப்பட்டு ஒற்றை மாட்டு வண்டியில் சென்று ரயிலைப் பிடித்தேன். நான் ஏறிய மூன்றாம் வகுப்பு ரயில் வண்டியில் இருந்தது யார் என்று நினைக்கிறீர்கள்! ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியாரும் அவருடைய செல்வக் குமாரி லக்ஷ்மியும் இருந்தார்கள். இருவரும் கோயமுத்தூரிலிருந்து திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்துக்குப் போய்க் கொண்டிருந்ததாக அறிந்தேன். திருச்செங்கோடு போவதற்குச் சங்கரி துர்க்கம் ஸ்டேஷனில் இறங்க வேண்டும் என்றும் தெரிந்தது.

ராஜாஜி ரயிலிலிருந்து இறங்கும் சமயத்தில், "காந்தி ஆசிரமத்திலிருந்து மதுவிலக்குப் பத்திரிகை ஒன்று நடத்துவதாக உத்தேசம்; அதற்கு உன்னை அழைத்துக் கொள்ளலாமென்று எண்ணியிருந்தேன்" என்றார்கள். பாதாள லோகத்திலிருந்து திடீரென்று சொர்க்க லோகத்துக்குத் தூக்கி விட்டால் எப்படி இருக்கும்! அம்மாதிரி இருந்தது எனக்கு. இதற்குள் ரயில் நின்று விட்டது. ராஜாஜி இறங்கத் தொடங்கி விட்டார்கள். அவசர அவசரமாக, "தங்கள் பத்திரிகையை எப்போது ஆரம்பித்தாலும் என்னை அழைத்தால் உடனே வருகிறேன்!" என்று சொன்னேன். என்னுடைய பதில் அவர்களுடைய காதில் சரியாக விழுந்ததோ இல்லையோ என்ற கவலை சென்னைக்குப் போய்ச் சேரும் வரையில் என்னைப் பிடுங்கித் தின்று கொண்டிருந்தது.

* * *

ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் சென்னை மாநகருக்கு வந்திருப்பதாகப் பத்திரிகைகளில் படித்து அறிந்தேன். (தினப் பத்திரிகைகளில் போக்கு வரவுச் செய்திகளை வெளியிடுகிறார்களே, அவர்கள் அடியோடு வாழ்க!) திருச்செங்கோட்டிலிருந்து பம்பாய்க்குப் போகும் மார்க்கத்தில், சென்னையில் இறங்கி, ஒரு சிநேகிதர் வீட்டில் தங்கியிருப்பதாகத் தெரிந்தது. உடனே ஸ்ரீ ஆச்சாரியாரைப் பார்க்கப் போனேன். (அப்போதெல்லாம் ராஜாஜி என்னும் அருமையான மூன்று எழுத்துப் பெயர் வழக்கத்துக்கு வரவில்லை. அந்த நாளில் பாடப் பட்ட ஒரு தேசியப் பாட்டில் "சேலம் வக்கீல் ஸ்ரீமான் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி ஆர்" என்று தொகையறாவின் ஒரு வரி முழுவதையும் அவருடைய பெயர் அடைத்துக் கொண்டிருந்தது) ஸ்ரீ ஆச்சாரியார் என்னைப் பார்த்ததும், "முன்னொரு தடவை சொன்னேனே, நினைவிருக்கிறதா! மதுவிலக்குப் பத்திரிகையொன்று ஆசிரமத்தில் தொடங்கப் போகிறேன். மூன்று மாதத்திற்குள் வர முடியுமா!" என்று கேட்டார். "மூன்று மாதத்துக்குள் வர முடியாது, இன்றைக்கே வர முடியும்!" என்று பதில் சொன்னேன். "அதெப்படி!" என்று கேட்டார்.

"நவசக்தி"யை நான் விட்டுவிட்ட விவரத்தைச் சொன்னேன்.

ஆச்சாரியார் ஐந்து நிமிஷம் கோபமாயிருந்தார். பிறகு, "போனது போகட்டும்; பட்டணத்தில் வேலை இன்றிச் சும்மாத் திரியக் கூடாது; கெட்டுப் போவாய்; இரண்டு நாளைக்குள் ஆசிரமத்துக்குப் புறப்பட்டுவிடு! அங்கே சந்தானம் இருக்கிறார். உன்னைப் பார்த்துக் கொள்வார்.

நான் வடக்கே இருந்து திரும்பி வந்ததும் பத்திரிகையைப் பற்றி யோசிக்கலாம்!" என்று கூறினர்.

எனக்கு ஏற்பட்ட குதூகலத்தைச் சொல்லி முடியாது. ஆயினும் குதூகலத்தை அதிகமாகக் காட்டிக் கொள்ளாமல் "அதற்கென்ன! அப்படியே செய்கிறேன்!" என்று சொல்லி விடை பெற்றுக் கொண்டு கிளம்பினேன்.

காந்தி மகானிடம் எனக்கு இருந்த பக்தி அப்போது ராஜாஜியிடமும் இருந்தது. ராஜாஜியின் தோற்றம், பேச்சு, அவருடைய ஒழுக்கத்தையும் தியாக வாழ்க்கையையும் பற்றி நான் தெரிந்து கொண்டிருந்த விவரங்கள் எல்லாம் அத்தகைய பக்தியை எனக்கு உண்டாக்கி யிருந்தன.

சென்னை ராயப்பேட்டையில் நான் இருந்த போது ஒரு நாள் இரவு சந்திரக் கிரகணம் பிடித்தது. கிரகணம் பார்ப்பதற்கும் ஸ்நானம் செய்வதற்கும் திருவல்லிக்கேணிக் கடற் கரைக்குப் போயிருந்தேன். இரவு ஒரு மணிக்குக் கிரகணம் விட்டது. ஸ்நானமும் முடிந்தது. ராயப்பேட்டைக்குக் குறுக்கு வழியாகப் போக எண்ணித் திருவல்லிக்கேணி சந்து ஒன்றில் புகுந்தேன். போகப் போகப் புதிய புதிய சந்தும் பொந்தும் வந்து கொண்டிருந்தனவே தவிர, ராயப்பேட்டையைக் காணவேயில்லை. "ராயப்பேட்டை கெட்டுப் போய்விட்டதா! அல்லது நான்தான் காணமற் போய்விட்டேனு!" என்று யோசனை உண்டாகி விட்டது. கடைசியில் நான் வந்திருந்தது மயிலாப்பூர் மந்தைவெளி என்று தெரிந்தது. அங்கிருந்து டிராம் ரோட்டைப் பிடித்துக் கொண்டு காலை நாலு மணிக்கு ராயப்பேட்டை சேர்ந்தேன்!

எனவே, சென்னையில் இருந்தால், அதுவும் சும்மா வேலையின்றி இருந்தால், நான் கெட்டுப் போகக் கூடியவன்தான் என்பது எனக்கு முன்பே தெரிந்திருந்தது! ராஜாஜியும் இதையே சொல்லவே, ஒரு நிமிஷம் கூடத் தாமதிக்கக் கூடாது என்று மறுநாளே வீட்டைக் காலி செய்து விட்டுப் புறப்பட்டேன்.

சங்கரிதுர்க்கம் ஸ்டேஷனில் இறங்கித் திருச்செங்கோட்டுக்கு ஐந்து மைல் பஸ்ஸில் போக வேண்டும். திருச்செங்கோட்டிலிருந்து ஏழு மைல் குதிரை வண்டியிலோ மாட்டு வண்டியிலோ போக வேண்டும். பழைய குதிரை வண்டி அநுபவத்தை ஞாபகப்படுத்திக் கொண்டு, மாட்டு வண்டியிலே தான் போனேன். மாட்டு வண்டி அவசரப்படாமல் நிதானமாக ஆடி அசைந்துகொண்டு சென்றது. சாலையின் இரு பக்கமும் புன்செய் நிலக் காடுகள். சில இடங்களில் மொட்டைப் பாறைகள். ஒரு இடத்தில் ஒரு பெரிய பனந் தோப்பு. அதில் சுமார் ஆயிரம் பனை மரங்கள் இருக்கும். இப்போது நினைத்தாலும் அந்தப் பனந்தோப்பு என் கண்முன் நிற்கிறது!

மனசுக்கு அவ்வளவு உற்சாக மளிக்கக் கூடிய காட்சிகள் அல்ல; கண்ணுக்கினிய காட்சிகளுமல்ல. ஆனலும் மனசு என்னமோ பிரமாத குதூகலத்தை அநுபவித்துக் கொண்டிருந்தது. பனை மரங்களுக் கெல்லாம் மேலே பறந்து, பறந்து, பறந்து வான வெளியிலே உல்லாசமாக உலாவிற்று. ஆகா! இந்த மனசின் பொல்லாத் தனத்தை என்னவென்று சொல்ல! ஆகாச விமானத்தில் பதினயிரம் அடி உயரத்தில் மணிக்கு இருநூறு மைல் வேகத்தில் பிரயாணம் செய்யும் போது இந்த மனசு பூமியில் ஒரு சின்ன வீட்டில் சின்ன அறையில் குப்புறப் படுத்துக் கொண்டு அசைய மாட்டேன் என்கிறது! ஆனல் பட்டிக் காட்டுச் சாலையில் கட்டைவண்டியில் உட்கார்ந்து செல்லும்போது மனசு வான வெளியில் உயர உயரப் பறந்து நட்சத்திர மண்டலங்களை க்ஷேமம் விசாரித்து விட்டு வருகிறது! அடடா! நம்முடைய மனசே மனசுதான்!

"அதோ தெரிகிறதே தோப்பு! அதுதான் புதுப்பாளையம்! அந்தத் தோப்பிலேதான் ஆசிரமம் இருக்கிறுங்க!" என்றுன் வண்டிக்காரன். காந்தி ஆசிரமத்தைப் பற்றித்தான் அப்படி மரியாதையாகப் பேசினனே, அல்லது ஆச்சாரியாரை நினைத்துக் கொண்டுதான் சொன்னனே, எனக்கு ஒன்றும் தெரியாது.

ஆசிரமத்தை நெருங்க, நெருங்க உற்சாகம் அதிகமாயிற்று. என் வாழ்க்கையில் ஒரு புதிய அற்புதமான அத்தியாயம் ஆரம்பமாகப் போகிறது என்ற உணர்ச்சி உள்ளத்தில் ததும்பிக் கொண்டிருந்தது. வண்டியிலிருந்து குதித்து ஓடலாமா என்று தோன்றியது. அவ்விதமெல்லாம் மனசில் ஏற்பட்ட உற்சாகம் பொய்யாகப் போய் விட வில்லை. திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் நான் வசித்த மூன்று வருஷந்தான் என் வாழ்க்கையிலேயே உற்சாகம் நிறைந்திருந்த காலமாகும்.

# கலைச் செல்வம்

• "கல்கி" ஆசிரியரின் வியாசங்களையோ கதைகளையோ படிக்காதவர்கள் தமிழ் நாட்டில் அதிகம்பேர் இருக்கமாட்டார்கள்.

ஆங்கில பாஷையில் ஆங்கில நாட்டுச் சரித்திரத்தை யொட்டிப் பல பல கதைகள் வெளியாகி யிருக்கின்றன. ஸர் வால்டர் ஸ்காட்டின் ஆங்கில நாவல்களைப் படித்தவர்கள், பெரும்பாலும் ஆங்கில சரித்திரத்தை யொட்டி அவருடைய நாவல்கள் எழுதப்பட்டவை என்பதை அறிந்திருப்பார்கள்.

நமது தாய் மொழியில் எனக்குத் தெரிந்த அளவில் "கல்கி"தான் முதன் முதலாக நமது தமிழ் நாட்டின் சரித்திரத்தை அடிப்படையாகக் கொண்ட கதைகள் எழுதி யிருக்கிறுர். சில காலத்துக்கு முன்பு "பார்த்திபன் கனவு" வெளியாயிற்று. இப்போது "சிவகாமியின் சபதம்" வெளிவந்திருக்கிறது. இரண்டு கதைகளும் "கல்கி" பத்திரிகையில் தொடர் கதையாக வெளியாகிக் கொண்டிருந்தபோதே ஆர்வத்துடன் நான் படித்திருக்கிறேன். பழைய காலத்தில் தமிழர்களின் பண்பாடும் தமிழ் நாட்டின் கலைச் செல்வமும் எவ்வளவு மேல் நிலையில் இருந்ததென்பதை மேற்கூறிய இரு கதைகளின் மூலமாகவும் அறிந்து கொள்ளலாம்.

—டாக்டர் ப. சுப்பராயன்

# சுத்தமான முழு நறுமணமுள்ள காப்பி

நீங்கள் இலகுவாக வாங்கக் கூடிய விலையில்!









**Stanes**

ஸ்டேன்ஸ்
சிகப்பு லேபிள்
சுத்தமான காப்பி




சுத்தமான காப்பியை வாங்குவதே நல்லது. அது உங்களுக்கு சரியான நறுமணத்தையும், தரத்தையும், அதிக அளவு காப்பியையும் அளிக்கிறது!

ஆயிரக் கணக்கான ஜனங்கள் ஸ்டேன்ஸ் சிகப்பு லேபிள் சுத்தமான காப்பியையே வாங்குகிறார்கள். ஏனெனில் அதன் நறுமணம் கெடாமல் புத்தம் புதியதாக இருக்கிறது. அது காற்றுப் புகாமல் பாக்செய்யப்பட்டு, ½ பவுண்ட், 1 பவுண்ட், 3 பவுண்ட், 7 பவுண்ட் டின்களில் கிடைக்கிறது.

எல்லோரும்
வாங்கக் கூடிய
நல்ல காப்பி!

STC 4058

**தி யுனைடெட் காப்பி சப்ளை கம்பெனி லிமிடெட்,**
**கோயம்புத்தூர், தென் இந்தியா**

திண்டுக்கல் ஏஜண்ட்ஸ்:
மெஸர்ஸ் எம். எஸ். புகழகிரி நாடார் சன்ஸ், ஜெனரல் மர்ச்சண்ட்ஸ் & கமிஷன் ஏஜண்ட்ஸ்

திருநெல்வேலி ஏஜண்ட்:
ஸ்ரீ எஸ். சோமசுந்தரம் பிள்ளை, ஜெனரல் மர்ச்சண்ட், 150, ஹைரோடு

# இமயம் சாய்ந்ததோ?

✣ பகீரதன் ✣

இமயமலை எதிர்பாராமல் சாய்ந்து விட்டதோ! கங்கை நதி திடீரென்று வறண்டு விட்டதோ! பூரண சந்திரன் தேயாமல் குறையாமல் 'பொக்' கென்று மறைந்து விட்டானே என்று திடுக்கிடுகிறோம்.

எழுத்துலகத்தில் இமயம் போல் கம்பீரமாய் நின்று கொண்டிருந்த கல்கி அவர்கள் நம்மை விட்டுப் பிரிந்து விட்டார். கற்பனையில் வற்றாத கங்கை நதிபோல் பொங்கிப் பெருகி வந்த கர்நாடகம் மறைந்து விட்டார். எல்லாக் கலைகளிலும் இணையற்று பரிபூரண சந்திரனாய் ஜொலித்து வந்த ஆசிரியர் ரா. கி. அவர்கள் போய் விட்டார்.

தமிழ் நாட்டின் கற்பகத்தை-தமிழ் அன்னையின் வீரத்தை-அஞ்சாத நெஞ்சின் ஆணித்தரமான எழுத்தை - தியாகத்தின் உயர்வை-வறியோர்க்கு வழங்கிய வள்ளலை—பாவலருக்கும் நாவலருக்கும், தேச பக்தருக்கும் தியாகிக்கும் அழியா நினைவுச் சின்னம் கண்ட கல்கியை இனி என்றைக்குக் காணப் போகிறோம். தமிழ் அன்னையின் ஆறாத்துயரம் என்றைக்கு நீங்கும்?

நினைக்க நினைக்க நெஞ்சம் கலங்குகிறது. உன்ன, உன்ன, ஊன் உருகுகிறது; உள்ளம் நொந்து குழைகிறது.

தமிழகத்தின் உயர்வை எண்ணி ஓயாமல் எழுதி வந்த கல்கி அவர்களே! உங்கள் உயிரும் பிரிந்ததோ! தமிழ் மக்களை வாழ்விக்க வந்த பெரு வாழ்வே! உங்கள் பிரிவைத் தாங்க முடியவில்லையே!

மணி மண்டபம் கட்டிப் பெருமைப் படுத்திய கவியரசர் பாரதியைக்காண விருப்பமோ? ரஸிகமணியின் அருமையான பேச்சைக் கேட்க வேண்டுமென்று உள்ளம் துடித்ததோ? கவிமணியும் திரு. வி. க. வும் சென்ற விடத்தைத் தேடிச் சென்றீர்களோ? எதை நினைத்துக் கொண்டு சென்றீர்கள்? உங்கள் மறைவால் ஏற்பட்ட துயரத்தை மாற்றிக் கொள்ள முடியவில்லையே!

** ** **

கல்கி அவர்கள் உயிர் நீத்தார் என்ற செய்தி கேட்டதும் ஒரு மின்சார இடி, உச்சந் தலையில் விழுந்து உள்ளங்கால் வழியாக ஓடிப் பூமியில் பாய்ந்தது போலத் திடுக்கிடச் செய்தது. துக்கம் கொண்டல் கொண்டலாகக் கிளம்பிச் சூழ்ந்து கொண்டது.

பின்னர், கடந்த முப்பத்தைந்து ஆண்டுகளாக அவர் தமிழ் மொழிக்கும், தமிழ் நாட்டுக்கும், தமிழ் மக்களுக்கும் ஆற்றிய தொண்டுகள் ஒன்றன் பின் ஒன்றாகத் தோன்றி உள்ளத்தில் புகுந்து உள்ளத்தை உருக்கிக் கண்ணீர் பெருக்கின.

கல்கி அவர்களின் பிரிவு யாரைத்தான் கலக்கியிருக்காது? கல்கி என்ன சாதாரண மனிதரா? தமிழகத்தின் கலைகளை எல்லாம், சிறந்த பண்புகளை எல்லாம் தன்னகத்தே தாங்கி, அவைகளின் பயனை மக்களுக்கு வாரி வழங்கிவந்த களஞ்சியம் அல்லவா? எல்லாப் பேறும் பெற்ற அவர் நீண்ட ஆயுளைப் பெறாது போனது தமிழகத்தின் தவக்குறை என்றுதான் சொல்ல வேண்டும்.

தமிழகத்துக்குக் கல்கி அவர்களின் பிரிவு எத்தனை துறைகளில் ஈடுசெய்ய முடியாத நஷ்டத்தைக் கொடுத்திருக்கிறது? தமிழ் தன்னை வளர்த்த ஒரு தவப் புதல்வரை இழந்து விட்டது; சங்கீதம் ஒரு சிறந்த கலா ரஸிக சிகாமணியை இழந்து விட்டது; நாடகம் ஒரு நல்ல கலைஞரை இழந்து விட்டது; பரதநாட்டியம் ஒரு நாட்டிய ரஸிகரை இழந்து விட்டது; தியாகம் ஒரு தியாகியை இழந்து விட்டது; வீரம் ஒரு வீரரை இழந்து விட்டது; எழுத்துலகம் ஒரு எழுத்தாளச் சக்கரவர்த்தியை இழந்து விட்டது; அரசியல் ஒரு உண்மையான அரசியல் மேதையை இழந்து விட்டது; தமிழகம் ஒரு உணர்ச்சியுள்ள தமிழனை இழந்து விட்டது; தேசம் ஓர் உண்மை தேசபக்தரை இழந்து விட்டது.

எத்தகைய அறிஞரை, எத்தனை வயதில் இழந்து விட்டோம்?

ஐம்பத்தைந்து வயதே நிரம்பிய இளைஞரை. 'தமிழ் கூறும் நல்லுலகத்'துக்கு உயிராக இருந்து வந்த ஒப்பற்ற மாணிக்கத்தை அல்லவா இழந்து விட்டோம்!

என்ன சொல்லி என்ன! எத்தனை வித்தகமாக எழுதினால்தான் என்ன? கல்கி போய் விட்டார். அவர் மேனி அக்கினிக்கு இரையாகிப் பிடி சாம்பராகி விட்டது!

** ** **

கல்கி ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் விகாரி வருஷம் ஆவணித் திங்கள் 25-ம் நாள் சனிக்கிழமை அதாவது 1899-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் ஒன்பதாம் தேதி மாயூரத்துக்கு அருகில் உள்ள புத்தமங்கலம் என்னும் கிராமத்தில் பிறந்தார். கற்க வேண்டியதைக் கற்கக் கல்லூரிக்குச் சென்றார். கல்லூரிப் படிப்பை காந்திமகான் கட்டளைக்காக விட்டு 'நாடு, நாடு' என்று தேச பக்தி மூண்டு, நாட்டுப் பணியில் இறங்கினார்.

'நாட்டின் உரிமை' என்று கல்கி அவர்கள் அல்லும் பகலும் வெறும் மேடைப் பிரசங்கம் செய்து கொண்டிருக்கவில்லை. காந்திமகான் ஆரம்பித்த எல்லா இயக்கங்களிலும் கலந்து கொண்டு தொண்டாற்றினார். அன்

னிய ஏகாதிபத்தியத்தை எதிர்த்து மூன்று முறை சிறை சென்ருர்.

தீண்டாமை விலக்கிற்கும், மது ஒழிப்புக்கும், சாதி சமரசத்துக்கும், பெண்ணுரிமைப் பேற்றுக்கும், கைத் தொழில் வளர்ச்சிக்கும், கல்வியின் உயர்வுக்கும் கல்கி உழைத்த உழைப்பு நாடு அறியும்.

தாழ்ந்து நின்ற தமிழகத்தைத் தட்டியெழுப்ப, 'பயிற்றிப் பல கல்வி தந்து' இந்தப் பாரை உயர்த்தக் கல்கி கையில் பேனு எடுத்து எழுத ஆரம்பித்தார். பத்திரிகைத் தொழிலில் புகுந்து நாட்டின் நலத்துக்குத் தொண்டாற்ற ஆரம்பித்தார். பத்திரிகைத் தொழிலைப் பல வழிகளில் உயர்த்தினர். தமிழ் மொழியில் உலகில் உள்ள எந்த விஷயத்தைப் பற்றியும் படித்தவரும் பாமரரும் புரிந்து ரஸிக்கும்படி எழுதலாம் என்பதை உணர்த்தினர். இன்று தமிழ்ப் பத்திரிகைகளில் உள்ள ஒவ்வொரு துறையையும் முதன் முதலில் அவர்தான் துணிந்து ஆரம்பித்து அதில் வெற்றியும் கண்டார் என்ருல் அது சிறிதும் மிகையாகாது.

தமிழ் நாட்டில் கல்கி அவர்கள் செல்லாத ஊரே இல்லை. அவர் போய்ப் புகுந்து வராத இடமே இல்லை. எல்லா இடத்திலும் கல்கி; எந்தக் கூட்டத்திலும் கல்கி; எந்த நிகழ்ச்சியிலும் கல்கி; தமிழ் நாட்டின் ஒவ்வொரு துறையிலும் கல்கி அவர்களின் தொண்டு நுழைந்திருக்கிறது என்று சத்தியம் செய்யலாம்.

கல்கி அவர்களின் எழுத்தைத் தமிழ் மக்கள் ரஸித்துப் படித்தார்கள். கல்கி அவர்களின் எழுத்திலே சொற்களும், சொற்ருெடர்களும் எதுகைகளும், மோனைகளும் இடைஞ்சல் இல்லாமல் உல்லாச நடனமிடும். அவைகள் அவருக்குப் பணியாளர்கள் போலக் கைகட்டி ஏவல் செய்யும். அவர் எழுத்தை எப்படிப் புகழ்வது? குற்றாலத்து அருவி என்று சொல்வதா? பாபநாசத்தின் சாரல் என்று சொல்வதா? கோடை இடி என்று சொல்வதா? கடல் மடை என்று கூறுவதா? தென்றலின் சுகம் என்று இயம்புவதா? சுருதி சுத்தமான சங்கீதம் என்று சாற்றுவதா? துள்ளிவரும் பரதம் என்று பகர்வதா? இவை அத்தனையும் கல்கி அவர்கள் எழுத்திலே காணலாம்.

கடந்த பதினைந்து ஆண்டுகளுக்கு மேலாக அவரைப் பாடாய்ப் படுத்தி வந்த 'ஆஸ்துமா' என்னும் கொடிய நோயினல் அவர் எழுத்தை ஒன்றும் செய்ய முடியவில்லை! கல்கி அவர்கள் பேனவைக் கையில் எடுத்தவுடன் நோய் நடுங்கி ஒதுங்கும். பின்னர் நோய் அவரைப் பழிவாங்கும். இவ்வாறு நோயுடன் போராடி அகாலத்தில் இன்னுயிர் துறந்தார்.

தமிழ்நாடே! கல்கி அவர்களைப் போன்ற எல்லாப் பண்புகளையும் பெற்ற ஒரு சிறந்த எழுத்தாளரை நீ என்று காணப் போகிருய்?

** ** **

கல்கி அவர்களை இழந்துவிட்ட கல்கி ரஸிகர்களைச் சுற்றி ஏமாற்றமும் துக்கமும் சூழ்ந்து தானிருக்கும். எனினும் கல்கி அவர்கள் அப்படி அவருடைய ரஸிகர்களை ஏமாறும்படி செய்து விடவில்லை.

தம்மைப் போன்ற சக்தி படைத்த எத்தனை எத்தனையோ இளம் எழுத்தாளர்களைச் சிறந்த முறையில் உருவாக்கித் தமிழகத்துக்குத் தந்துவிட்டுப் போயிருக்கிருர்.

அவர் விட்டுச் சென்ற எழுத்தாளர்கள் மத்தியில் அவர் என்றும் இருப்பார். 'கல்கி'யின் பெயரை அழியாமல் காப்பாற்ற வேண்டியது தமிழ் மக்களின் பொறுப்பு.

கல்கி அவர்கள் தமிழகத்துக்கு ஆற்றி வந்த தொண்டைத் தொடர்ந்து செய்து வருவோம்! வாழ்க, கல்கியின் திருநாமம்!

## 'விமோசன'த் தொண்டு

● 'எழுத்துலகுக்குத் தன்னை அறிமுகப் படுத்தியவர்' என்று டாக்டர் தி. சே. சௌ. ராஜன் அவர்களைக் குறிப்பிடுவார் 'கல்கி'யவர்கள். கல்கியின் 'பாங்கர் விநாயக ராவ்' என்ற கதைத் தொகுதிக்கு டாக்டர் ராஜன் எழுதியுள்ள முன்னுரையில் குறிப்பிடுகிருர்:

கல்கி ஆசிரியர் எனது பழைய நண்பர்களில் ஒருவர். தமிழுக்கும், நாட்டுக்கும் அரிய தொண்டாற்றி வரும் உண்மை தேசபக்தர். தமிழ் உலகம் அவரைக் கல்கி, ரா. கி. கர்நாடகம், முதலிய புனை பெயர்களின் மூலமாகவும் தமிழ் நாட்டின் அரிய சரித்திரக் கதைகள் மூலமாகவும் நன்கு அறியும். ஆனல் பல வருஷங்களுக்கு முன்பாகத் திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் குடிசையில் உட்கார்ந்து கொண்டு ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் நடத்திய 'விமோசனம்' என்னும் பத்திரிகையில் அவர் எழுதிய மதுவிலக்கு சம்பந்தமான கதைகள் அவருடைய தொண்டுகளுக்குள் சிறந்தது என்று சொல்லலாம்.

தமிழ் நாட்டில் மதுவிலக்குப் பிரசாரம் காந்தி அடிகளின் ஒத்துழையாமை இயக்கத்தின் பொழுது தீவிரமாக நடந்தது. கள்ளுக் கடை மறியல் புயல் காற்றைப்போல் தமிழ்நாடு பூராவும் நடந்தது. எனக்குக் கிடைத்த முதல் சிறைவாசமும் அப்பொழுதுதான் ஜஸ்டிஸ் கட்சிக்காரர்கள் அரைகுறைச் சுய ஆட்சி புரிந்த காலமும் அதுவே. நூற்றுக்கணக்கான சிறுவர்கள் அடிபட்டதும், முஸ்லிம்களும் சுதந்திர இயக்கத்தில் ஈடுபட்டுச் சிறை சென்றதும் அக்காலத்தின்தான். அடியோடு குடியை ஒழிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் "விமோசனம்" பத்திரிகையை ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் ஆரம்பித்து நடத்தினர். அதில் உழைத்ததன் பயனுக இந்நூலாசிரியர் பக்குவமடைந்து பெயரும் புகழும் பெற்று இன்று அரிய தொண்டு புரிகிருர். —தி. சே. சௌ. ராஜன்

# நல்ல தீர்ப்பு

**ரஜனி**

கொழும்பு, டிஸம்பர் மீ 6வ.

சுப்ரீம் கோர்ட் நீதியரசர் ஸ்ரீ வி. நாகலிங்கம் இவ்வாரம் பிரஜாவுரிமை வழக்கு ஒன்றில் அளித்திருக்கும் தீர்ப்பு, எவ்விதம் பதிவு அதிகாரிகள் இலங்கை இந்திய மக்களின் உரிமைகளை மறுப்பதையே குறிக்கோளாகக் கொண்டு காரியம் செய்கிறார்கள் என்பதை மறுபடியும் உணர்த்திக் காட்ட உதவியிருக்கிறது. ஜனாப் ஸாஹுல் ஹமீது என்ற ஒரு இந்தியர் 1941-ம் ஆண்டில் இந்தியாவில் கல்யாணம் செய்து கொண்டார். 1942-ம் வருடம் தமது மனைவியை இலங்கைக்கு அழைத்து வந்தார். கல்யாணமாகிய பன்னிரண்டு மாதங்களுக்குள் மனைவியை இலங்கைக்கு அழைத்து வந்து விடாமல் மேலும் ஐந்தாறு மாதம் தாமதித்து அழைத்து வந்ததைப் பிரஜா பதிவு அதிகாரி பாரதூரமான குற்றமாக மதித்து இம்மனிதருக்கு இலங்கைப் பிரஜையாக யோக்கியதையில்லை யென்று தீர்மானித்து மனுவை நிராகரித்து விட்டார்.

பிரஜாவுரிமைச் சட்ட திருத்தச் சட்டத்தில் மனுதாரர்கள் கல்யாணமாகிய முதல் வருட பூர்த்திக்குள் மனைவியை இலங்கைக்கு அழைத்து வந்திருக்க வேண்டுமெனச் சொல்லி யிருப்பது மெய்தான். அதே சட்டத்தில் ஒரு மனுதாரர் யுத்த காரணத்துக்காக 1941-ம் வருடம் முதல் 1945 ம் வருடம் வரை மனைவியை வெளி நாட்டில் வைத்திருந்தால் அது தவறாக மாட்டாது என்றும் குறிப்பிடப் பட்டிருக்கிறது.

கொழும்பிலும் திருகோணமலையிலும் ஜப்பான் குண்டு வீசியதையும் கரையோரப் பிரதேசங்களை விட்டுப் பொதுஜனங்கள் வெளியேறிவிட வேண்டுமென்று அதிகாரிகள் தம்பட்ட மடித்து எச்சரித்ததையும் ஜனாப் ஸாஹுல் ஹமீது பல சாட்சியங்களோடு எடுத்துச் சொல்லி யுத்தத்துக்குப் பயந்தே மனைவியைத் தாமதித்து இலங்கைக்கு அழைத்து வந்ததாய் விவாதித்தார். மனுதார் உண்மையில் யுத்தத்துக்குப் பயந்திருந்தால் தமது மனைவியை யுத்த ஆபத்து நீங்கிய 1945ம் வருட முடிவில் அல்லவா இலங்கைக்கு அழைத்து வந்திருக்க வேண்டும்! 1942ல் ஏன் அழைத்து வந்தார்! இதிலிருந்து மனுதாருக்கு யுத்த பயம் இல்லை யென்பது நிச்சயமாகிறது. யுத்தபயம் இருந்தால்தான் மனைவியைத் தாமதித்து அழைத்து வரச் சட்டம் அனுமதிக்கிறது. ஆகையால் திருத்தச் சட்டம் வழங்கியுள்ள சலுகை மனுதாருக்கு இல்லை. இது சர்க்கார் கட்சியின் வாதம்! எப்படியிருக்கிறது பிரஜாபதிவு அதிகாரிகளின் செய்கை!

இந்த விஷயம் சுப்ரீம் கோர்ட்டுக்கு அப்பீலாக வந்தபொழுது நீதியரசர் ஸ்ரீ நாகலிங்கம் மனிதப் பண்பையும் கணவன்-மனைவி தாம்பத்திய பாசத்தையும் அற்புதமாக வர்ணித்து, "குண்டு விழும் இடத்தில் கணவன் இருக்கிறான். வாழ்ந்தாலும் வீழ்ந்தாலும் கரம் பிடித்த கணவன் பக்கத்தில் இருக்க வேண்டும் என்று நினைத்து ஒரு உத்தம பத்தினி யுத்த ஆபத்தையும் பொருட்படுத்தாமல் இலங்கைக்கு வந்திருக்கிறாள். பெரும்பாலான கடைக்காரர்கள் யுத்தத்துக்குப் பயந்து ஓடிப் போன காலத்தில் மனுதார் தொடர்ந்து தொழில் நடத்திப் பொதுஜன சேவை செய்திருக்கிறார். இத் தம்பதிகளைப் பாராட்டுவதற்குப் பதிலாகப் பிரஜாவுரிமை மறுத்துத் தண்டிப்பது தகாது" என்று நீதியரசர் கூறிப் பிரஜா பதிவுக் கமிஷனரின் உத்தரவை ரத்து செய்து மனுதாரரையும் அவரது குடும்பத்தையும் இலங்கைப் பிரஜைகளாகப் பதிவு செய்து கொள்ள உத்தரவிட்டார்.

இது போல இதற்கு முன் பிரஜாவுரிமை மறுக்கப்பட்டவர்கள் எவ்வளவு ஆயிரம் பேர்களோ! கமிஷனரிடம் நியாயம் கிடைக்கவில்லை யென்று தோன்றினால் சுப்ரீம் கோர்ட்டுக்கு அப்பீல் செய்யலாமே என்று சொல்லிவிடுவது சுலபம். ஆனால் எவ்வளவு பேர்களால் பல ஆயிரம் ரூபாய் செலவிட்டு வழக்குப் போட்டு வாதாட முடியும்! பிரஜா பதிவு அதிகாரிகள் மனிதாபிமானத்துடன் நடக்காத பட்சத்தில் சட்டங்களும் கோர்ட்டுகளும் எளிய இந்திய மக்களுக்கு ஒருபோதும் நிவாரணம் அளிக்க முடியாது.

• • •

சென்ற ஜனவரி மாதம் இலங்கைக்கும் இந்தியாவுக்கு மிடையில் ஓர் ஒப்பந்தம் ஏற்பட்ட பொழுது அதை அமுல் நடத்துவதற்காக ஸ்ரீ ஆர். ஜி. சேனநாயகா தலைமையில் ஒரு உப கமிட்டியை மந்திரி சபை நியமித்தது. அந்த உபகமிட்டி பல உருப்படாத யோசனைகளைச் சொல்லியதின் பயனாகச் சென்ற அக்டோபர் மாதம் ஒரு புதிய ஒப்பந்தம் செய்ய வேண்டியதாயிற்று. இந்தப் புதிய ஒப்பந்தத்தை அமல் நடத்துவதற்கு நியமித்திருக்கும் புதிய கமிட்டியின் முதல் கூட்டம் இவ்வாரம் நடந்தது. பத்திரிகைகளுக்கு ஏதும் சொல்லக் கூடாதென்று தீர்மானித்துக் கொண்டு பரம ரகசியமாக இந்தக் கூட்டம் நடந்தது பலருக்கும் பலத்த சந்தேகத்தை உண்டுபண்ணியிருக்கிறது.

பல லட்சம் ஜனங்கள் சம்பந்தப்பட்ட விஷயங்களில் மூடுமந்திரம் ஏன்! பாதிக்கப்பட்ட ஜனங்களின் பிரதிநிதிகளையும் இலங்கை ஜனநாயக காங்கிரஸ் தலைவர்களையும் அழைத்துப் பேசிப் பிரச்னையைத் தீர்க்க நல்ல வழி வகைகளைச் செய்வதற்குப் பதிலாக மீண்டும் முன்போலவே ரகசியக் கூட்டங்கள் நடத்திச் சந்தேகாஸ்பதமான காரியங்கள் செய்வது நல்ல காலத்திற்கல்ல.

* * *

இலங்கையில் பணம் படைத்தவர்கள் பெரிய பெரிய தோட்டங்களை விலைக்கு வாங்கி அவற்றைப் பல கூறுகளாகப் பிரித்து, பலரிடமும் கொள்ளை லாபத்துக்கு விற்பதை ஒரு தொழிலாகக் கொள்ள ஆரம்பித்திருக்கிறார்கள். இதனால் தோட்டத் தொழில் நசித்துப் போவதுடன் பல ஆயிரம் தொழிலாளருக்கும் வேலையில்லாமற் போகிறது. இந்த ஆபத்தை ஸ்ரீ கே. ஜி. எஸ். நாயர் தலைமையில் நடைபெற்ற ஒரு பொதுக் கூட்டம் அரசாங்கத்துக்கு எடுத்துக் காட்டித் தோட்டங்கள் துண்டு போடப்படுவதைத் தடுக்க உடன் சட்டமியற்ற வேண்டுமென்று கோரியிருக்கிறது. இதேபோலத் தோட்ட முதலாளிமார்களும் அரசாங்கத்தை வற்புறுத்தி யிருக்கிறார்கள்.




அகில உலகச் சிறுகதைப் போட்டி

அகில இந்திய முதல் பரிசுக் கதை

ஆங்கிலக் கதை :

மொழிபெயர்ப்பு : ஜெயமணி

"பேரிகை முழக்கம்" என்ற இந்தக் கதை, அகில உலகச் சிறு கதைப் போட்டியை நடத்தும் பிரபல அமெரிக்கப் பத்திரிகையான "நியூயார்க் ஹெரால்டு ட்ரிப்யூன்"க்கு அனுப்பப்பட்ட நாலு கதைகளில் ஒன்று என்ற விவரம் ஏற்கெனவே அறிவிக்கப்பட் டிருக்கிறது. ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் முதல் பரிசு பெற்ற இந்தக் கதையை எழுதியவர் இந்தியா உதவி சர்வேயர் ஜெனரல் மேஜர் ஜே. ஏ. எப். தலாலின் மனைவி ஸ்ரீமதி நெர்கிஸ் தலால் என்பதைக் "கல்கி" நேயர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறோம். ★★★

மோட்டார் கரடு முரடான அந்த மணல் ரஸ்தாவில் மெதுவாகப் போய்க் கொண்டிருந்தது. எனவே, மிகப் பளபளப்பான அந்த மோட்டார் மீதெல்லாம் படை படையாகப் புழுதி படிந்து, அதன் அழகையே மறைத்திருந்தது.

அது போய்க் கொண்டிருந்த பிரதேசத்தில் நாற்புறங்களிலும் வயல்கள் தரிசாக வறண்டு கிடந்தன. வெகு தூரத்தில் உள்ள குன்றுகள் வரையில் பரந்து கிடந்த வயல்களின் கரைகள், அனல் திட்டுகளாகக் காட்சியளித்தன. தாங்க முடியாத அந்த உஷ்ணத்தில் குன்றுகளும் நீல நிறமான மெல்லிய புகை மண்டலங்களால் மறைக்கப் பட்டிருப்பதுபோல் தோன்றின.

ட்ரியானு துரை மோட்டாரிலிருந்து வெளியே ஆவலுடன் எட்டிப் பார்த்தார். இந்தியாவைச் சுற்றிப் பார்ப்பதற்காக அவர் இங்கிலாந்திலிருந்து வந்தவர் அல்லவா! இந்தியாவின் சகல பாகங்களையும் விடாமல் சுற்றிப் பார்த்து விட வேண்டும் என்று அவர் உறுதி கொண்டிருந்தார்.

ஏற்கெனவே அவர் நெடிய வயல்களையும் செழுமையான பசும்புல் பிரதேசங்களையும் பார்த்தாகி விட்டது. பச்சைப் போர்வையுடன் காட்சியளிக்




ளும் மலைத் தொடர்களையும் ட்ரியானா பார்க்கத் தவறவில்லை. வளம் பொருந்திய தேயிலைத் தோட்டங்களையும் அவர் பார்வையிட்டார். மற்றும் அவர், காலத்தினால் அழிக்கப்பட்டுக் கிடந்த பண்டைய நகரங்களையும் கட்டிடங்களையும் காணத் தவறவில்லை. பிறகு பல கோவில்களையும் சென்று பரிசீலனை செய்தார். புதிதாகக் கட்டப்பட்டுள்ள அணைக்கட்டுகளையும் நுணுக்கமாகக் கவனித்தார்.

கடைசியாக, பஞ்சப் பிரதேசங்களையும் பார்த்து விடவேண்டும் என்று அவர் தீர்மானித்தார். பட்டினி கிடந்து எலும்பும் தோலுமாக நடமாடும் பெண்கள், வயிறு வீங்கி எலும்புக்கூடாக இருக்கும் குழந்தைகள் இவர்களைப் புகைப் படங்கள் எடுக்க வேண்டும் என்ற ஆர்வ மிகுதியால்தான் அவர் இப்போது மோட்டாரில் சென்றார். இங்கிலாந்துக்குத் திரும்பிச் சென்றதும் அந்தப் படங்களைத் தமது பத்திரிகையில் பிரசுரிக்க வேண்டும் என்பது அவரது அவா.

மோட்டாரில் சென்ற மற்றவர்களுக்கு, பஞ்சத்தினால் அடிபட்ட மக்களைப் புகைப்படம் எடுப்

பதில் உற்சாகம் இல்லை. எனினும் அதற்காக இந்தியாவில் சுற்றுப் பிரயாணம் செய்த ட்ரியானு தமது நோக்கத்தைக் கைவிட விரும்பவில்லை.

வெய்யில் கடுமையாக இருந்ததுடன், புழுதி மோட்டாருக்கு உள்ளே கூட எல்லா இடங்களிலும் லேசாகப் படிந்திருந்தது.

மோட்டாரில் உட்கார்ந்திருந்த இரண்டு பெண்களில் ஒருத்திக்கு இருபது இருபத்திரண்டு வயது இருக்கும். அவள் தன் அழகான முகத்தை அடிக்கடி துடைத்துக் கொண்டாள். களைப்பு மேலீட்டால் பின்புறமாகச் சாய்ந்துகொண்டாள். அவளைக் காட்டிலும் சிறிது அதிக வயதான மற்றொருத்தி ட்ரியானுவின் சகோதரிதான். மோட்டாரைப் போலவே அவளுடைய தேகம் முழுவதும், தலை, முகம், கண்கள், புருவங்கள் எங்கும் புழுதி படிந்திருந்தது. ஆனால், அதை அவள் பொருட்படுத்தவே இல்லை. கண்களை மூடிக்கொண்டு, வாயைப் பாதி திறந்த வண்ணம் அரைகுறைத் தூக்கத்தில் ஆழ்ந்திருந்தாள்.

மோட்டாரில் இருந்தவர்களில் டிரைவர் பிரிதம் சிங் ஒருவர்தான் அந்த உக்ரமான வெய்யிலைச் சிறிதும் லட்சியம் செய்யாமல், வெகு லாகவமாகவும் சிறிதும் களைப்பில்லாமலும் மோட்டாரை ஓட்டிச் சென்றார்.

மோட்டாரில் இருந்தவர்களில் டிரைவர் ஒருவர்தான் இந்தியர். யௌவன வயதுள்ள அவர் ஓர் இராணுவ அதிகாரி. ட்ரியானுவுக்கு உதவியாகவும் வழிகாட்டியாகவும் அதிகாரிகள் அவரை அனுப்பியிருந்தார்கள். அவர் முக்கியமாக ஏதாவது சொல்லவேண்டியிருந்தாலொழிய மற்றப்படி வாயையே திறக்காமல் மௌனமாக மோட்டாரை ஓட்டிச் சென்றார்.

“பிரிதம் சிங், நாங்கள் சாப்பிடுவதற்குத் தகுதியான ஓரிடத்தில் மோட்டாரை நிறுத்துங்கள்” என்றார் ட்ரியானு பிரிதம் சிங்கிடம்.

இதற்கு, பிரிதம் சிங் பதில் எதுவும் கூறவில்லை. எனினும் ட்ரியானு கூறிய வார்த்தைகள் தமது காதில் விழுந்தன என்பதற்கு அறிகுறியாக அவர் தலையை மெதுவாக அசைத்தார்.

இதைப் பார்த்த ட்ரியானு தமது முகத்தைச் சுளித்துக் கொண்டார். அவருக்கு இந்தியர்களைக் கண்டாலே பிடிக்காது. அதிலும் அதிகமாகப் பேசாமல் மௌனமாக இருக்கும் இந்தியர்களை அவர் அறவே வெறுத்தார்.

ட்ரியானு பெரிய வாயாடி. குட்டையாக இருப்பார். ஸ்தூலமான தேகம் படைத்தவர். அவரது தோல் கருப்பு நிறமாகத்தான் இருந்தது. எனினும் அவர் தம்மை பிரிட்டிஷ்காரர் என்றே சொல்லிக் கொண்டார்! அவரது நிறத்திலிருந்து அவரை ஆங்கிலேயர் என்று யாரும் கூறமுடியாது.

சந்தேகத்துக்கு இடமான தமது வம்சாவளியைப் பற்றி அவர் மௌனமாகவும் இருக்க மாட்டார். உலகத்தில் உள்ள மற்றெந்த நாட்டைக் காட்டிலும் தம்முடைய தேசம்தான், அதாவது இங்கிலாந்துதான் உயர்ந்தது என்று பெருமையடித்துக் கொள்வார். இந்தியர்களை ‘நீக்ரோக்கள்’ என்று ஏளனம் செய்வார். இந்தியாவில் எதைப் பார்த்தாலும் அவர் குற்றம் குறை சொல்லாமல் விடுவதில்லை. இந்தியாவில் உள்ள வறண்ட பிரதேசங்களைக் கண்ட ட்ரியானுவின் குரூரமான மனம் மிகவும் ஆனந்தப்பட்டது!

ட்ரியானுவின் மமதையும் திமிரும் பிரிதம் சிங்கிற்கு மிகுந்த ஆத்திரத்தை உண்டாக்கின.

“என் தோலைவிட உன் தோல் கருப்பாக இருக்கிறதே; நீ எங்கே அப்பா பிறந்தாய்!” என்று கேட்க வேண்டும் போலிருந்தது பிரிதம் சிங்குக்கு!

எனினும் பிரிதம் சிங் கண்ணியம் வாய்ந்தவராதலால், தமது கோபத்தை அடக்கிக் கொண்டார். அற்ப புத்தி படைத்த ட்ரியானுவின் அர்த்தமற்ற நடபுடல் பிரிதம் சிங்குக்கு ஒரு விதத்தில் வேடிக்கையாகவும் இருந்தது.

* * *

கடைசியாக அந்தப் பெரிய மோட்டார் ரஸ்தாவிலிருந்து இறங்கி, இடிந்து பாழாகக் கிடந்த ஒரு கட்டிடத்துக்கு அருகில் போய் நின்றது. அது யாருடைய உபயோகத்திலும் இல்லாத ஒரு பழைய கோட்டையாகும். அந்தக் கோட்டையில் ஓரிடம் வெய்யிலுக்குப் பாதுகாப்பாகவும் குளிர்ச்சியாகவும் இருந்தது.

அவர்கள் எல்லோரும் கீழே இறங்கினார்கள். யுவதி கீழே இறங்கியதும் கொட்டாவி விட்டு, இரு கைகளையும் மேலே தூக்கிச் சோம்பல் முறித்தாள். நல்ல தேகக்கட்டும் வனப்பும் வாய்ந்த அந்த யுவதியை விழுங்கி விடுவது போல் பார்த்த ட்ரியானு, அவளுடைய மிருதுவான கையை மெதுவாகப் பிடித்தார்.

“நிழலுக்குப் போய் இளைப்பாறு, ஹெலன்!” என்று அவள் கையைப் பிடித்த வண்ணம் பரிவுடன் கூறினார் ட்ரியானு.

அந்தப் பெண் அவரிடமிருந்து மெதுவாகக் கையைத் திமிறிக் கொண்டு அப்பால் சென்றுவிட்டாள். ட்ரியானுவின் சகோதரிக்குப் பேச்சுத் துணையாக வந்த அவளுக்கு ட்ரியானுவின் போக்கும் விஷமப் பார்வையும் பிடிக்கவில்லை. தான் ட்ரியானுவுடன் வந்தது பெரும் தவறு என்பதையும் அவள் உணர்ந்தாள். எனினும் அவ்வளவு தூரம் வந்த பின் என்ன செய்வது!

அந்த மோட்டாருக்குப் பின்னால் வந்து கொண்டிருந்த ‘வாகன்’ மோட்டாரும் சில அடி தூரத்தில் நின்றது. அதில் வந்த இரண்டு வேலைக்காரர்கள் வாகனிலிருந்த கம்பளங்களையும் உணவுக் கூடைகளையும் கீழே இறக்கினர். கம்பளங்களை ஒழுங்காகத் தரையில் விரித்து, அவற்றின் மீது உணவுக் கூடைகளை வைத்தனர்.

இதுவரையில் வாயையே திறக்காமல் மௌனமாக இருந்த ட்ரியானுவின் சகோதரி ஸ்ரீமதி ஜார்டனுக்கு உணவுக் கூடைகளைக் கண்டதும் நாக்கில் ஜலம் ஊறத் தொடங்கியது. அவள் அவசரம் அவசரமாக ரொட்டித் துண்டுகளை எடுத்து வாய் கொள்ளாமல் திணித்துக் கொண்டாள்.

* * *

ட்ரியானு வழி நெடுகப் பிரிதம் சிங்கை வம்புக்கு இழுக்க முயன்றதை ஹெலன் கவனிக்கத் தவறவில்லை. இந்தியர்களையும் அவர்களுடைய பழக்க வழக்கங்களையும் ட்ரியானு எள்ளி நகையாடியதைப் பிரிதம் சிங் லட்சியம் செய்யவே இல்லை. ட்ரியானு ஆத்திரமூட்டத்தக்க விதத்தில் வம்புக்கு இழுத்தும் கூட, பிரிதம் சிங் மிகவும் அமைதியாகவும் நிதானமாகவும் மோட்டாரை ஓட்டிச் சென்றது ஹெலனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

அத்தகைய ஏளன வார்த்தைகளை ஒருவர் அவ்வளவு நேரம் பொறுத்துக் கொண்டு பேசாமல் இருக்க முடியுமா? அல்லது பிரிதம் சிங்கின் கம்பீரமான முகத்தோற்றம் உள்ளூறப் பொங்கும் ஆத்திரத்தை வெளிக்குத் தெரியாமல் மறைத்துக் கொண்டிருக்கிறதா! என்றெல்லாம் ஹெலன் தனக்குள் எண்ணமிட்டாள்.

தாம் இந்தியர்களை எவ்வளவு தூரம் ஏளனம் செய்தும் பிரிதம் சிங் மௌனமாகவும் மரியாதையாகவும் இருந்தது ட்ரியானுவுக்கு மேன்

உயர்ந்த ரக

# சாம்பியன்

## பேனாவையே

எப்பொழுதும்
வற்புறுத்தி
வாங்குங்கள்




எங்கும்
கிடைக்கும்

விலை
ரூ 3-8-0

**CHAMPION**
*CHOICE OF ALL*

## குஜரத் இன்டஸ்ட்ரீஸ்

பம்பாய் - 2

R Pc



டயபெப்ஸின்
சாப்பிட ஆரம்பிக்கு
முன் இம்மாதிரி
வயிற்று வலியால்
கஷ்டப்படுகிருர்

# DIAPEPSIN






டயபெப்ஸின்
சாப்பிட்டபிறகு
இம்மாதிரி
சந்தோஷமாக
தோற்ற
மளிக்கிருர்

உங்கள் டாக்டரை கலந்தாலோசியுங்கள் :
யூனியன் டிரக் கம்பெனி லிமிடெட்
மதராஸ் டிப்போ: 2, ஜோன்ஸ்லேன், மதராஸ்-1

# *Pearline*
## FRENCH LAVENDER BRILLIANTINE

Keeps your hair looking smart all day. You will like its pleasant refreshing perfume made from real French Lavender.

★ PEARLINE SNOW makes your skin soft and fair

★ PEARLINE EAU DE COLOGNE will keep you fresh throughout the day.

PEARLINE-PARIS LTD.
P. O. BOX 493 BOMBAY. I.



DANA ANDREWS in Warner Bros' - "STRANGE LADY IN TOWN"

# B. I. S. N. கம்பெனி லிமிடெட்



# S. S. ரஜூலா

**சென்னை - நாகப்பட்டினம் - பினங்கு - சிங்கப்பூர்**

மேற்படி கப்பல் கீழ்க்கண்ட தேதி வாக்கில் புறப்படும்

**சென்னையிலிருந்து 28-12-1954 - நாகப்பட்டினத்திலிருந்து 29-12-1954**

மாறுதலுக்கு உட்பட்டது

ஸலூன் இடவசதி முழுவதும் புக் ஆகிவிட்டது. ஆனால் கம்பெனியின் ஏஜண்டுகளிடமிருந்து உணவுடனோ அல்லது உணவு இன்றியோ பர்த் வசதி இல்லாத பிரயாண டிக்கெட்டுகள் கிடைக்கும்.

கீழ்க்கண்ட பிரயாண மற்றும் ஆரோக்கிய பத்திரங்கள் தேவையாகும்.

1. மலேயா அல்லது சிங்கப்பூரில் உள்ள குடியேற்ற அதிகாரிகளால் கையெழுத்திடப்பட்ட அனுமதி பர்மிட்டுடன் கூடியதும் செல்லக் கூடியதுமான ஒரு பாஸ்போர்ட். பாஸ்போர்ட்டில் கையெழுத்திடப்படா விட்டால், ஒரு தனி அனுமதி பர்மிட்டோ அல்லது குடியேற்ற அதிகாரிகளால் அளிக்கப்பட்ட விஸிட்டர்ஸ் பாஸை பாஸ்போர்ட்டுடன் கொடுக்க வேண்டும். அல்லது மலேயா அல்லது சிங்கப்பூரில் உள்ள குடியேற்ற அதிகாரிகளால் அளிக்கப்பட்ட ரீ-என்ட்ரி பர்மிட். (பாரம் 1-D-64 அல்லது 65)

2. எல்லா ஸலூன், பர்த் வசதி இல்லாத பிரயாணிகளும் வருமான வரி ஆபீஸர்கள் ஒருவரிடமிருந்து (வெளி நாட்டுப் பிரிவு) முழு வருமான வரி செலுத்தியதற்கான அல்லது வரி விலக்கு சர்ட்டிபிகேட்டை, அவர்கள் வசிக்கும் வட்டாரத்து வருமான வரி ஆபீசரிடமிருந்து "ஏ" பாரம் வாங்கிக் கொண்ட பிற்பாடு பெற்றுக் கொண்டு வரவேண்டும்.

3. சுகாதார சர்டிபிகேட்டுகள்: 1-7-54 தேதி முதல் எல்லா ஸலூன் மற்றும் பர்த் வசதியற்ற பிரயாணிகள் காலரா தடுப்பு ஊசியும் வைசூரி அம்மை வராமலிருப்பதற்காக ஊசியும் போட்டுக் கொண்டதற்கு இந்திய அரசாங்கத்தினரால் வெளியிடப்பட்டுள்ள புதிய பாரங்களில் சர்டிபிகேட் வைத்திருக்க வேண்டும். டெ சர்டிபிகேட்டுகள் அங்கீகரிக்கப்பட்ட சுகாதார அதிகாரிகளில் யாராவது ஒருவரின் அந்நாட்டு முத்திரையுடன் கூடியதாக இருக்க வேண்டும்.

இந்திய அரசாங்கத்தாரின் அங்கீகரிக்கப்பட்ட முத்திரை வைத்த சர்டிபிகேட்டுகளே பிரயாண டிக்கட்டுகள் வழங்குவதற்கு உரியது என ஒப்புக் கொள்ளப்படும்.

பினங், போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலான இடங்களுக்கு நேரடியாக சரக்குகளின் ஏற்றுமதி ஏற்றுக் கொள்ளப்படும். சிங்கப்பூரில் மாற்றி பாங்காக்கிற்கு அனுப்புவதற்கான சரக்குகளும் ஏற்றுக் கொள்ளப்படும்.

○●○

பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றுமதி விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதுக:

| | |
|---|---|
| **பின்னி & கோ., (மதராஸ்) லிட்.** | **மதுரா கம்பெனி லிமிடெட்** |
| 7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1 | முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம் |



மேலும் ஆத்திரத்தை உண்டு பண்ணியது. பிரிதம் சிங்கின் பொறுமையும் கண்ணியமும் தம்மை அவமதிப்பது போல் அவருக்குத் தோன்றியது. உணவு அருந்த உட்கார்ந்த இடத்திலும் ட்ரியானா குத்தலான தமது பேச்சை விடவில்லை. கடைசியாக, பாணம் போன்ற வார்த்தைகளைப் பிரயோகித்துப் பிரிதம் சிங்கைத் திக்குமுக்காடச் செய்து விடவேண்டும் என்று எண்ணினார் ட்ரியானா.

"உங்கள் நாடு மிக மிகச் சிறந்த நாடு தான்! சுதந்திரத்துக்கு மிகவும் தகுதியான தேசம் தான்! இப்போது உங்களுக்குச் சுதந்திரம் கிடைத்து விட்டதால், நீங்கள் யாவரும் உங்கள் இஷ்டப்படி பட்டினி கிடக்கலாம். அன்னியரின் தலையீடின்றி இனிமேல் அமைதியாகச் சாகலாம் அல்லவா!" என்றார் ட்ரியானா ஆத்திரச் சிரிப்புடன்.

இதற்கும் பிரிதம் சிங் பதில் எதுவும் கூறாதது, ட்ரியானாவுக்குக் கோபாவேசத்தை உண்டாக்கியது. தமது பரிகாச வார்த்தைகளைக் கேட்டதும் பிரிதம் சிங் துள்ளி எழுவார்; அவரது முகம் சிவந்து விடும்; கண்களில் கோபக் கனல் வீசும் என்றெல்லாம் ட்ரியானா எதிர்பார்த்தார்.

ஆனால், அதற்கும் பிரிதம் சிங் மசியவில்லை. அத்துடன் ட்ரியானாவும் அவரை விட்டுவிட விரும்பவில்லை.

"சுதந்திரம் அடைந்தும் நீங்கள் கண்ட பலன் என்ன! வெள்ளக் கொடுமை, வஞ்சம், லஞ்ச ஊழல், பேராசை, அமிதமான ஜன உற்பத்தி இவைதான்! நாங்கள் இந்தியாவை விட்டுச் சென்றதிலிருந்து இங்கு ஒழுங்கா, முறையா ஒன்றுமில்லை. அதிகார மமதை கொண்ட அரசியல்வாதிகள் அர்த்த மற்ற, பலனில்லாத தடபுடல் பிரசங்கங்களில் ஈடுபட்டிருக்கிறார்களே, அது தான் நீங்கள் கண்ட பலன். இவ்வளவு கேவலமான நிலையில் உள்ள நீங்கள் ஐக்கிய நாடுகள் பாதுகாப்புச் சபையில் (Security Council) ஸ்தானம் வேண்டும் என்று கேட்கிறீர்களே! உங்கள் துணிச்சலை என்னவென்று சொல்வது? ஊழலும் அசுத்தமும் ஆபாசமும் நிறைந்த இடங்களில் வாழும் நீங்கள் உலகத்துக்கு உபதேசிக்கத் துணிவது கர்வம் பிடித்த செய்கை அல்லவா! உலகர் என்ன செய்ய வேண்டும், எப்படிச் செய்ய வேண்டும், என்றெல்லாம் யோசனை கூற உங்களுக்கு என்ன யோக்கியதை இருக்கிறது!"

ட்ரியானாவின் சரமாரியான இந்த வார்த்தைகளைக் கேட்டதும் பிரிதம் சிங்கின் தோற்றம் பயங்கரமாக இருந்தது. அவரது கைகள் இறுகின. அவர் தமது இரு கைகளாலும் அப்படியே ட்ரியானாவின் குரல்வளையை இறுகப் பிடித்து விடுவாரோ என்று தோன்றியது. எனினும் சில விநாடி நேரத்தில் பிரிதம் சிங் தம்மை ஒருவாறு சமாளித்துக் கொண்டார்.

ட்ரியானா கூறியதைச் சிறிதும் லட்சியம் செய்யாதவர்போல், "இரவுக்கு முன் நாம் பங்களா முகாமுக்குச் செல்ல வேண்டுமாயின், இப்போதே இங்கிருந்து புறப்பட வேண்டும்" என்று அமைதியாகக் கூறிப் பேச்சை மாற்றினார்.

ட்ரியானா வசைமாரியில் ஈடுபட்டிருந்தபோது ஸ்ரீமதி ஜார்டன் கலக்கத்துடன் இருவருடைய முகங்களையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தாள். கடைசியாக, பிரிதம் சிங்கைச் சமாதானப் படுத்துவதற்காக ஏதாவது சொல்ல வேண்டும் என்று அவளுக்குத் தோன்றியது.

"இந்தக் கோட்டையைப் பற்றிய வரலாறு மிகவும் விசேஷமாக இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. அவ்விஷயமாக நீங்கள் ஏதாவது கூற முடியுமா, பிரிதம் சிங்!" என்று இனிமையாகக் கேட்டாள் ஸ்ரீமதி ஜார்டன்.

அவளது அந்தரங்க நோக்கத்தை அறிந்து கொண்ட பிரிதம் சிங் அவளைப் பார்த்துப் புன்முறுவலுடன் சொன்னார்:

"இது ஒரு பண்டைய காலத்துக் கோட்டை, அவ்வளவுதான். ஆனால், இங்கு சுற்றியுள்ள கிராமங்களைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டிய விசேஷங்கள் இருக்கின்றன. சுற்று வட்டாரத்தில் உள்ள கிராம மக்கள் முன்பெல்லாம் வருண பகவானுக்காக நரபலிகள் கொடுப்பது வழக்கம். ஆனால் இப்போது அவ் வழக்கம் சட்டபூர்வமாகத் தடுக்கப் பட்டிருக்கிறது. எனினும், தங்கள் வழக்கம் போல் நரபலி கொடுத்து வந்திருந்தால், இந்தப் பிராந்தியத்தில் இவ்வளவு கொடிய பஞ்சம் ஏற்பட்டிராது என்று கிராம மக்களில் பலர் இன்றும் நம்புகின்றனர்!" என்று கூறினார் பிரிதம் சிங்.

இவ் விவரங்களைக் கேட்டதும் ஸ்ரீமதி ஜார்டன் அலறி விட்டாள். அவள் மனத்தில் மிகுந்த பரபரப்பும் பீதியும் உண்டாயின.

"உண்மையில் அவர்கள் மனிதர்களைப் பலி கொடுத்தார்கள் என்று சொல்கிறீர்கள்!" என்று கேட்டாள் ஸ்ரீமதி ஜார்டன்.

"அவர்கள் எப்படி நரபலி கொடுத்திருக்க முடியும்!" என்று ஹெலன் பயத்துடன் வாய்க்குள் முணுமுணுத்துக் கொண்டாள்.

எல்லோரும் மறுபடியும் மோட்டாரில் ஏறிக்கொண்டு, தங்கள் யாத்திரையைத் துவங்கினர்.



"நரபலி என்றதும் ஏன் இவ்வளவு பீதியடைய வேண்டும்! நூற்றுக்கணக்கானவர்களின் உயிர்களைக் காப்பாற்றுவதற்காக ஒருவருடைய உயிரைப் பலி கொடுக்கலாம் என்பதே இந்தக் கிராம வாசிகளின் சித்தாந்தம். தங்களுக்கு ஒரு விதத்திலும் தீங்கு செய்யாதவர்களைக் கொன்று குவிப்பதற்காக இந்தியாவிலிருந்து வெளிநாடுகளுக்குப் படைகளை அனுப்புவதை இங்குள்ள ஜனங்கள் காட்டு மிராண்டித்தனம் என்று கருதுகிறார்கள். அத்துடன் ஒப்பிடும்போது ஒருவரைப் பலி கொடுப்பது அவ்வளவு கோரமான காரியம் அல்ல என்றே தோன்றுகிறது.... அதை யெல்லாம் பற்றி இப்போது பேசுவானேன்! இங்கு நரபலி நின்று வெகு காலமாகி விட்டது."

இவ்விதம் பிரீதம் சிங் மோட்டாரை ஓட்டிய வண்ணம் அந்தப் பெண்களின் கேள்விகளுக்குப் பதிலளித்து வந்தார்.

பிரீதம் சிங் அவ்வாறு கூறியதைக் கேட்டதும் ட்ரியானுவுக்குக் கோப வெறி உண்டாகி விட்டது.

"எழுதப் படிக்கத் தெரியாத மூடர்கள் கூட்டம் செய்யும் காட்டுமிராண்டித் தனமான நரபலிச் சடங்கையும், புத்திசாலித்தனமாகத் தீர்க்காலோசனையுடன் திட்டம் வகுத்து நடத்தும் நவீன யுத்தங்களையும் ஒப்பிட்டுப் பேசுகிறீர்களா!" என்று ஆத்திரத்துடன் கேட்டார் ட்ரியானு.

இதற்கும் பிரீதம் சிங் பதில் அளிக்கவில்லை.

எனினும் பிரீதம் சிங்குக்கு ஒரு விஷயம் ஆறுதலைக் கொடுத்தது. புத்தம் புதிதான அந்தச் சிறந்த மோட்டாரை ஓட்டிச் செல்லும் வாய்ப்புக் கிடைத்ததே, அதுதான் அப்போது அவர் மனத்துக்குத் திருப்தியாக இருந்தது!

அதே சமயம் "இந்தத் தடியன் தன் பத்திரிகையில் என்ன வெல்லாம் எழுதப் போகிறானோ!" என்றும் பிரீதம் சிங் சிந்திக்கலானார்.

*
* *

அவர்கள் போய்க் கொண்டிருந்த இடம் ஓரே பொட்டலாக இருந்தது. கண்ணுக்கு எட்டிய தூரம் பசுமையான செடி, கொடி, எதுவுமே காணக் கிடைக்கவில்லை. இரண்டொரு இடங்களில தனியாக நின்று கொண்டிருந்த மரங்களும் காய்ந்து கருகிக் கிடந்தன. ஆங்காங்கு பாழடைந்த சில குடிசைகளும் தென்பட்டன. அப்பிரதேசம் மனித சஞ்சாரமற்ற வனாந்திரத்தைப் போல் காட்சி அளித்தது.

கடைசியாக அவர்கள் பங்களாவுக்குப் போய்ச் சேர்ந்தனர். பங்களாவின் வராந்தாவிலே அரைத் தூக்கத்துடன் நின்று கொண்டிருந்த கிழவன், அந்தப் புதிய மோட்டாரையும் அதில் இருந்தவர்களையும் ஆச்சரியத்துடன் பார்த்தான். அந்தப் பங்களாவில் எப்போதாவது தான் யாராவது வந்து தங்குவது வழக்கம். எனவே, அதிலிருந்த நாற்காலி, மேஜைகளெல்லாம் புழுதி மயமாக இருந்தன. கட்டில்கள் மீது யாராவது உட்கார்ந்தால், அவை 'கிரீச்' என்ற சப்தத்துடன் தள்ளாடித் தன் வயோதிகத்தைப் பறைசாற்றின! சிலந்திப் பூச்சிகளின் வலைகளும் ஏராளமாக இருந்ததிலிருந்து அங்கு வெகு காலமாக எவரும் வந்து தங்கவில்லை என்பது தெரிந்தது.

பின்புறமாக மோட்டார் வாகனும் வந்து சேர்ந்தது. உடனே அதிலிருந்த வேலைக்காரர்கள் கீழே இறங்கி, புழுதியைத் தட்டிவிட்டு, கம்பளங்களை விரித்தனர். உணவுப் பொருள்களையும் தயாராக எடுத்து வைத்தனர்.

பங்களாவில் ஒருநாளு மில்லாமல் விளக்கு எரிவதைக் கண்ட கிராம ஜனங்களில் சிலர் பங்களாவுக்கு அருகில் வந்து வேடிக்கை பார்க்கத் தொடங்கினர். அவர்களுடைய குழி விழுந்த கண்களையும், ஒட்டிய வயிறுகளையும், மிகவும் அசுத்தமான கந்தல் உடைகளையும் பார்த்தபோது, இறந்த ஏழைகளின் ஆவிகள்தான் அப்படி வந்து நிற்கின்றனவோ என்று தோன்றியது.

அவர்களை முதலில் பார்த்த ஹெலன் பயந்து கூக்குரலிட்டு விட்டாள். உடனே மற்றவர்களும் அவள் பார்த்த திசையை நோக்கினர்.

ஆவிகளைப் போல் நின்று கொண்டிருந்த கிராம வாசிகளிடையே சில குழந்தைகளும் இருந்தன. குச்சிகள் போன்ற அவர்களுடைய கை கால்களையும், சோர்ந்த முகங்களையும், வீங்கிச் சரிந்திருந்த அவர்களுடைய தொந்திகளையும் பார்க்கவே சகிக்க முடியவில்லை.

அவர்களைப் பார்த்த ஹெலன், "ஐயோ, பாவம்" என்று அனுதாபப்பட்டாள்.

அவர்களைப் பார்த்த ட்ரியானுவுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை.

"இவர்களை நான் நாளைக்குப் புகைப்படமெடுக்கப் போகிறேன். அந்தப் படங்கள் அபூர்வமானவையாக இருக்கும் என்பதில் சந்தேகம் இல்லை."

இவ்விதம் சொல்லிய வண்ணம் ட்ரியானு பிரீதம் சிங்கைப் பார்த்தார்.

"பிரீதம் சிங், நாளைக்கு இவர்களை நான் படம் எடுக்கப் போவதாகச் சொல்லுங்கள். எல்லோரையும் விட அதிகமாக ஒட்டி உலர்ந்த பெண்களையும் குழந்தைகளையும் கொண்டு வரச் சொல்லுங்கள். அவர்களுக்கு நிறைய 'இனம்' கொடுக்கிறேன் என்றும் தெரிவியுங்கள்" என்று சொன்னார் ட்ரியானு குதூகலத்துடன்.

இதைக் கேட்டதும், அங்கு நின்று கொண்டிருந்தவர்களில் வயதான ஒருவனிடம் பிரீதம் சிங் ஏதோ சொன்னார். உடனே அந்தக் கிழவன் ட்ரியானுவை வெறிக்கப் பார்த்தான். அந்தப் பார்வை ட்ரியானு துரையை என்னவோ செய்தது. எனவே, அவர் தமது முகத்தை அப்பால் திருப்பிக் கொண்டார்.

கிழவனும் பதிலுக்குப் பிரீதம் சிங்கிடம் ஏதோ முணுமுணுத்தான்.

உடனே பிரீதம் சிங் ட்ரியானுவைப் பார்த்துப் பின்வருமாறு சொன்னார்:

"நாளை சூரியோதயத்துக்குப் பிறகு நீங்கள் அவர்களுடைய குடிசைகள் இருக்குமிடத்துக்குச் சென்றால், நீங்கள் கேட்கும் நபர்களைக் காட்டுவதாக அவன் சொல்லுகிறான். நீங்கள் இன்னும் வேறு எதையாவது பார்க்க விரும்புகிறீர்களா என்று அவன் கேட்கிறான்."

"ஆமாம், ஆமாம். நான் ஒரு நரபலியைப் பார்க்க விரும்புகிறேன் என்று அவனிடம் சொல்லுங்கள்" என்று கூறிவிட்டு ட்ரியானு இடி இடியென்று சிரித்தார்.

எனினும், அப்போது பிரீதம் சிங் மௌனமாகப் பார்த்த பார்வையைக் கண்டதும் ட்ரியானுவின் சிரிப்பு நின்று விட்டது.

ஆவிகள் மறைவது போல் கிராமவாசிகள் ஒவ்வொருவராக இருளில் சென்று மறைந்தார்கள்.

அவர்கள் சென்றதும் ட்ரியானு கோஷ்டியினர் சாப்பிட உட்கார்ந்தார்கள்.

அந்தச் சூழ்நிலையில் ஹெலனுக்குச் சாப்பாடு இறங்கவில்லை. அவள் பிரீதம் சிங்கைப் பார்த்தாள். பிரீதம் சிங் காப்பியைத் தவிர வேறு எதையும் தொடவில்லை. ஸ்ரீமதி ஜார்ட்னும் சரியாகச் சாப்பிடவில்லை. ஏழைக் கிராமவாசிகள் சென்ற திசையில் சூழ்ந்திருந்த இருளையே அவள் மன அமைதி யின்றிக் கலக்கத்துடன் கவனித்துக் கொண்டிருந்தாள்.

அப்போது அவர்களில் உணவை ருசித்து வயிறு புடைக்கச் சாப்பிட்டவர் ட்ரியானு ஒருவர்தான்.

மறுநாள் பொழுது விடிந்தது. அன்று சூரியோதயம் ஆகும்போதே உஷ்ணம் சகிக்கவில்லை.

காலை ஆகாரம் முடிந்ததும் ட்ரியானு 'காமிரா'வைத் தோளில் மாட்டிக் கொண்டு புறப்பட ஆயத்தமானார்.

"வாருங்கள் பிரீதம் சிங், படம் பிடிக்கப் போகலாம்" என்றார்.

"நான் வரவில்லை."

இவ்விதம் பிரீதம் சிங் சாவதானமாகக் கூறியதைக் கேட்ட ட்ரியானுவுக்கு ஆத்திரம் பொங்கியது; முகம் சிவந்தது; நரம்புகள் புடைத்துக் கொண்டன; இரத்தக் குழாய்கள் திடீரென்று வெடித்து விடும்போல் தோன்றின.

"டாம் இட்" என்று கத்தினார். "என்னுடன் கூட வருவதற்குத்தானே உங்களுக்குச் சம்பளம் கொடுக்கிறார்கள்!" என்று கூக்குரலிட்டார்.

"இல்லை, இல்லை. இப் பிரதேசத்தைச் சுற்றிக் காட்டுவதுதான் என் வேலையேயன்றி, துர்ப்பாக்கியசாலிகளான ஏழைகளைப் படம் பிடிப்பதற்காக நான் உங்களுடன் வருவது முடியாத காரியம்" என்றார் பிரீதம் சிங்.

இவ்விதம் பிரீதம் சிங் கோபமின்றியும் நிதானமாகவும் கூறியது ட்ரியானுவின் ஆத்திரத்துக்குத் தூபம் போட்டது போலாகியது. ட்ரியானு மிகவும் கஷ்டப்பட்டுத் தம் ஆத்திரத்தை அடக்கிக் கொண்டார். அந் நிலைமையில் அவர் வேறு என்ன செய்ய முடியும்!

உடனே அவர் மறுபேச்சு எதுவும் பேசாமல் தொப்பியை எடுத்துப் போட்டுக் கொண்டு, வெகு வேகமாகப் புறப்பட்டார். 'சுள்' என்று எரிக்க ஆரம்பித்துவிட்ட வெய்யிலைக்கூட அவர் லட்சியம் செய்யவில்லை. அவரது மனதில் கோபமும் துவேஷமும் பொங்கிக் கொண்டிருந்ததால், அவர் தேகத்தில் வெகு நேரம் வரையில் வெய்யில் உறைக்கவில்லை.

அவர் சென்ற பாதை மேடும் பள்ளமாகவும் கரடு முரடாகவும் இருந்தது. மழையின்றி வயல்களில் பயிர்களெல்லாம் காய்ந்து கருகிக் கிடந்தன. மணல் பாங்கான ஆற்றங்கரையின் வறட்சி உஷ்ணத்தை அதிகப்படுத்தியது. அடிக்கடி அவருக்குத் தடுக்கி விட்டது. வியர்வையினால் அவரது சட்டைகள் நனையத் தொடங்கின. வெய்யிலின் உக்ரத்தை மறைத்துக் கொள்வதற்காக அவர் தமது கைக் குட்டையை எடுத்து முகத்தின் மீது போட்டுக் கொண்டார்.

அவர் குடிசைகளுக்கு அருகில் சென்றபோது ஆடவர்களும் பெண்களும் அசைவற்றுப் படுத்துக் கொண்டிருந்தார்கள். அவர்களின் தேகங்கள் எலும்பும் தோலுமாக இருந்ததால், அவர்களில் யார் இளமையானவர்கள், யார் வயோதிகர்கள் என்பதையே தெரிந்து கொள்ள முடியவில்லை. ட்ரியானு வந்ததைப் பார்த்த பின்னரும்கூட அவர்கள் எழுந்திருக்கவில்லை. ஏக காலத்தில் அவர்கள் எல்லோருடைய கண்களும் ட்ரியானுவையே ஊடுருவிப் பார்த்தன.

ட்ரியானுவுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. அவர் வெகு காலமாக எதிர்பார்த்த அற்புதமான காட்சிகளைப் படங்கள் எடுக்கச் சந்தர்ப்பம் கிடைக்கப் போகிறது அல்லவா!

அங்கே படுத்துக் கொண்டிருந்த ஓர் இளம் பெண்ணை ட்ரியானு தட்டி யெழுப்ப விரும்பினர். ஒட்டி உலர்ந்திருந்த அவள் உடல் முழுவதையும் மறைத்துக் கொள்வதற்கும் போதிய கந்தல் துணி கூட இல்லாமல் அவள் படுத்துக் கொண்டிருந்தாள். அவள் தன் குழந்தைக்குப் பால் கொடுத்துக்கொண் டிருப்பது போல் தோன்றியது.

ட்ரியானு குனிந்து பார்த்தார். அக்குழந்தை உயிரற்று அவனுக்கு அருகில் கிடப்பது அப்போது தான் அவருக்குத் தெரிந்தது. தோலாகக் கிடந்த அவன் தோளில் கை வைத்தார் ட்ரியானு.

அவ்வளவுதான்! உடனே அந்தஜனங்களிடையே ஏதோ மின்சார சக்தி பாய்ந்தது போன்றிருந்தது. அவர் கையைச் சட்டென எடுத்துவிட்டு, சுற்று முற்றும் பார்த்தார். அவ்விடத்தில் அவ்வளவு ஜனங்கள் இருந்தும் அங்கு நிலவிய பயங்கரமான அமைதி ட்ரியானுவை என்னவோ செய்தது.

அதேசமயம் அங்கு படுத்திருந்த ஆடவர்களும் பெண்களும் ஏக காலத்தில் எழுந்தனர். அவர்கள் யாதொரு சந்தடியுமின்றி ஆவி உருவங்களைப் போல் ட்ரியானுவை நெருங்கி வந்தனர்.

அவர்களுடைய கண்கள் தம்மை ஊடுருவிப் பார்த்துக் கொண்டே நெருங்குவதைக் கண்ட ட்ரியானு கதிகலங்கிப் போனார். பயத்தினால் அவரது தேகம் முழுதும் நடுங்கியது. மூன்று புறங்களில் குடிசைகள் தடையாக இருந்தன. எதிர்ப்புறத்தில் அவர்கள் நிமிஷத்துக்கு நிமிஷம் நெருங்கி வந்து கொண்டிருந்தனர். எனவே, ட்ரியானு ஓடித் தப்புவதற்கும் வழியில்லை.

ட்ரியானு பின் தாங்கிக் கொண்டே வந்தார். ஏக காலத்தில் அத்தனை பேருடைய கண்களும் ட்ரியானு மீது நிலைத்திருந்தன. அந்த நிலைமையை அவரால் சகிக்க முடியவில்லை.

தமக்கு முடிவு காலம் வந்து விட்டதாக அவருக்குத் தோன்றியது. அவர்களை எதிர்த்து நிற்பதற்குக் கையைத் தூக்கவும் அவருக்குச் சக்தியிராமற் போயிற்று.

திடீரென்று ட்ரியானுவுக்கு ஒரு யோசனை தோன்றியது. உடனே அவர் தமது பையை எடுத்தார். அதிலிருந்த கரன்ஸி நோட்டுக்களைக் கிராம வாசிகளின் முன்னிலையில் வாரி இறைத்தார். "இந்தாருங்கள், இதையெல்லாம் எடுத்துக் கொள்ளுங்கள்" என்று கத்தினார்.

ஆனால், அந்த ஏழைகள் அவ்வளவு பெரிய தொகையையும் லட்சியம் செய்யவில்லை. எனவே, ட்ரியானுவை நோக்கி முன்னேறி வந்து கொண்டிருந்த அக் கிராம வாசிகளின் காலடிகளில் பெரும் தொகை பெறுமானமுள்ள அந்த நோட்டுகள் கேட்பாரற்றுக் கசங்கிச் சின்னா பின்னமாகக் கிடந்தன.

நம்ப முடியாத அந்தக் காட்சியைக் கண்ட ட்ரியானுவுக்குப் பாதி உயிர் போய்விட்டது.

'ஆபத்து, ஆபத்து! யாராவது உதவிக்கு வாருங்கள். உதவிக்கு வாருங்கள்" என்று பரிதாபகரமாக அலறினார்.

அந்தக் குரல் அவரது காதுக்குக் கூடச் சரியாகக் கேட்கவில்லை! அவர் வாயிலிருந்து கிளம்பிய வார்த்தைகள் வாய்க்குள்ளேயே மறைந்து விட்டன.

அதே சமயம் கிராம வாசிகளின் முகங்கள் ட்ரியானுவுக்கு வெகு அருகில் வந்தன. திடீரென்று அவர்களுடைய கைகளில் கத்திகள் பளபளவென்று மின்னின.

'ஆ'வென்று அலறியவண்ணம் ட்ரியானு கீழே சாய்ந்தார்.

உடனே ஆகாயத்தில் நாற்புறமும் கழுகுகள் வட்டமிடத் தொடங்கின.

* * *

ட்ரியானு மத்தியானம் சாப்பாட்டுக்கு வரவில்லை. அவர் வாராததைக் குறித்துப் பங்களாவில் இருந்தவர்கள் கவலைப்படவில்லை. எனினும் எங்கிருந்தோ தம்பட்டங்களின் பயங்கரமான சத்தம் கேட்டபோது தான் அவர்களுடைய மனத்தில் கலக்கம் ஏற்பட்டது.

அவர்கள் ட்ரியானுவைத் தேடிச் சென்றபோது, அவரது உடல் அடையாளம் தெரியாமல் சின்னா பின்னமாகிக் கழுகுகளுக்கும் காக்கைகளுக்கும் இரையாகிக் கொண்டிருந்தது.

அவர்கள் அந்த உடலைப் போர்த்தித் தூக்கிக் கொண்டு வந்து வாகன் மோட்டாரில் கிடத்தினார்கள்.

ட்ரியானுவுக்கு நேர்ந்த கதியைப் பார்த்த ஸ்ரீமதி ஜார்டன் அழுது புலம்பினாள். பீதிதோய்ந்த ஹெலனின் முகத்தைப் பார்க்கவே பரிதாபமாக இருந்தது. பிரீதம் சிங் மாத்திரம் அமைதியாக மோட்டாரை ஓட்டிக் கொண்டிருந்தார்.

ஹெலன் அடிக்கடி பிரீதம் சிங்கைப் பார்த்தாள். ட்ரியானு மரணத்தைப் பற்றிய மர்மத்தைப் பிரீதம் சிங்கிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும் போலிருந்தது ஹெலனுக்கு.

எனினும் அவரைக் கேட்கும் துணிச்சல் அவளுக்கு ஏற்படவில்லை.

அவர்கள் மோட்டார் புறப்பட்ட சிறிது நேரத்துக் கெல்லாம் அந்தப் பிராந்தியத்தில் பல வருஷங்களாகப் பெய்து யாரும் கண்டறியாத பெருமழை பிடித்துக் கொண்டது.

மோட்டாரில் இருந்த மூவரும் ஒருவர் முகத்தை ஒருவர் மௌனமாகப் பார்த்தனர். நரபலியைப் பறைசாற்றும் பயங்கரமான பேரிகை முழக்கத்தைப் போல் அந்தப் பெருமழையின் சத்தம் அவர்களுக்கு இருந்தது.

நூற்றுக்கணக்கான மக்களுக்கு நல் வாழ்வு அளிக்கும் மழைக்காக ஒரு நரபலி கொடுக்கலாம் என்று, வரும்போது பிரீதம் சிங் சொன்ன வார்த்தைகள் ஹெலனின் காதுகளில் இடைவிடாது ஒலித்துக் கொண்டிருந்தன.

# சக்கரவர்த்தித் திருமகன்

## 42. விராதன் தீர்ந்தான்.

மூவரும் தண்டகாரணியப் பெருங் காட்டுக்குள் நடந்து சென்று ரிஷிகள் பலர் வாசம் செய்து கொண்டிருந்த பிரதேசத்தை யடைந்தார்கள். போகும் போதே அங்கே வேள்விக்கான பொருள்களும் முனிவர்கள் உடுத்தும் மரவுரி ஆசனத்துக்குரிய தோல் முதலியன இங்குமங்கும் இருப்பதைக் கண்டார்கள். அந்த இடமே பார்ப்பதற்கு மிக லக்ஷணமாக இருந்தது. பறவைகளும் மிருகங்களும் பயமின்றிச் சஞ்சாரம் செய்து கொண்டிருந்தன. பழங்கள் நிறைந்து தொங்கும் பல மரங்களைக் கண்டார்கள். வேத மந்திர சப்தம் காதுக்கு இனிமையாக இருந்தது. அருகில் சென்றதும் வயோதிக முனிவர்களுடைய ஒளி வீசும் முகங்களைக் கண்டார்கள்.

ரிஷிகள் மூவரையும் கண்டு அளவு கடந்த மகிழ்ச்சி யடைந்தார்கள். "அரசனே! நீ எங்களைக் காப்பவன். வனத்தி லிருந்தாலும் நகரத்திலிருந்தாலும் நீ எங்களுடைய அரசன்" என்றெல்லாம் சொல்லி உபசரித்து அவர்களுக்கு வேண்டியதைச் செய்து தங்க இடமும் காட்டினார்கள்.

மறுநாள் காலையில் எழுந்து, ரிஷிகளிடம் விடை பெற்றுக் கொண்டு காட்டுக்குள் சென்றார்கள். பெருங் காடு. புலி, சிங்கம், ஓநாய் முதலிய மிருகங்களும் பலவித பறவைகளும் நிறைந்த காடு. சுற்றும் முற்றும் பார்த்துக் கொண்டே மெதுவாகச் சென்றார்கள்.

திடீர் என்று மலைபோன்ற ஒரு பெரிய உருவம் எதிர்ப்பட்டது. நர மாமிசம் தின்னும் ராக்ஷசன் இடிபோல் கர்ஜனை செய்தான். அவன் வடிவம் சகிக்க முடியாத கோர சொரூபமாக விருந்தது. மாமிசமும் ரத்தமும் படர்ந்த புலியின் தோல், இன்னும் நன்றாக உலரவில்லை, அதைப் போர்த்திருந்தான். கையில் ஒரு பெரிய சூலாயுதம். அதில் அப்பொழுது குத்திக் கொன்ற மூன்று சிங்கங்கள், ஒரு யானைத் தலை முதலியவை தொங்கிக் கொண்டிருந்தன.

ராக்ஷசன் ஆயுதத்தைத் தூக்கி, பயங்கரக் கூப்பாடு போட்டுப் பாய்ந்து சீதையை அப்படியே பிடித்துத் தூக்கிக் கொண்டு, "யாரடா நீங்கள் இந்தக் காட்டுக்கு வந்திருக்கிறீர்கள்? நீங்கள் யார்? பார்ப்பதற்குப் பாலர்கள் போல் இருக்கிறீர்கள், வேஷமோ ஜடையும் மரவுரியும் தரித்து முனிவர்கள்போல் நடிக்கிறீர்கள்! கையில் வில்லும் அம்பும், பக்கத்தில் ஒரு பெண்! ஏன் இப்படிப் பொய் வேஷம் போட்டுத் திரிகிறீர்கள்? வெட்கம் இல்லையா? நீங்கள் ரிஷிகளின் சம்பிரதாயத்துக்கும் விரத உடைக்குமே அபகீர்த்தி கொண்டு வருகிறீர்கள். ஏமாற்றித் திரியும் வஞ்சகர்களே! நான் யார் தெரியுமா? நான்தான் விராதன். ரிஷிகளைத் தின்று வருபவன். இந்த அழகி என் பாரியையாக இருக்கட்டும், தெரிந்ததா? உங்கள் ரத்தத்தைக் குடிக்கப் போகிறேன், பாவிகளே!" என்று கர்ஜனை செய்தான்.

சீதை அவன் கையில் பிடிபட்டு நடுங்கித் துடித்துக் கொண்டிருந்தாள். மனைவியை அரக்கன் பிடித்து எடுத்திருப்பதைக் கண்ட ராமன் தன் அமைதியை இழந்து, "ஐயோ லக்ஷ்மணா, பார்த்தாயா? எதையும் பொறுக்கும் என்னால் இதைப் பொறுக்க முடியவில்லையே! இதைத் தெரிந்தே பாவி கைகேயி நம்மைக் காட்டுக்கு அனுப்பினாளோ!" என்று கதறினான்.

ராஜாஜி

சீதையைத் தூக்கி நின்ற அரக்கனை எந்த விதத்தில் எதிர்ப்பது

என்று தோன்றாமல் இந்தச் சந்தர்ப்பத்தில் ராமன் தைரியமும் அமைதியும் இழந்து போய்ப் பேசினதைக் கேட்ட லக்ஷ்மணன் குழப்ப மடையாமல், பாம்பைப்போல்சீறி, "ராம! இந்திர னுடைய பலம் பெற்றவன் நீ. உன் பக்கத்தில் நானும் இருக்க ஏன் இப்படிப் பேசுகிறாய்? பார், இப்போது என் வில்லும் அம்பும் என்ன செய்யப் போகிறது என் பதை! இவன் மடிந்து கீழே விழுந்து, இவன் ரத்தத்தை மண் குடிக்கப் போகிறது. அயோத்தியையில் என் ரோஷத்தை நீ அடக்கினாயே அந்த ரோஷம் இவன் மேல் இப்போது பாயப்போகிறது! சிறகு கொண்ட மலைகளை இந்திரன் தாக்கியது போல், இவனைத் தாக்கி இவன் உயிரை வாங்கப் போகிறேன்" என்றான்.

* * *

விராதன் அச்சமயம் மறுபடியும் கர்ஜித்து, "ஏ! வாலிபர்களே! யார் நீங்கள்? உடனே சொல்லுங்கள்!" என்றான்.

ராமன் அதற்குள் தெளிந்துவிட்டான். கலவரம் தீர்ந்து முகத்தில் வீரம் ஜொலிக்க ஆரம்பித்தது.

"நாங்கள் இக்ஷ்வாகு வம்சத்து ராஜ குமாரர்கள். வனவாசம் செய்ய வந்திருக்கிறோம். நீ யார் சொல்லுவாய்?" என்றான் ராமன்.

"அப்படியா? தசரத குமாரனே, கேள், சொல்லுகிறேன். என் தகப்பனார் பெயர் ஜயன், தாயார் சதஹ்ரதை. விராதன் என்று என்னை ராக்ஷசர்கள் அறிவார்கள். ஆயுதம் தரிக்கும் க்ஷத்திரியப் பயல்களே, உங்களுடைய ஆயுதங்களால் என்னை ஒன்றும் செய்ய முடியாது. பிரம்மாவிடம் வரம் பெற்றிருக்கிறேன். இந்தப் பெண்ணை விட்டு விட்டு ஓடிப் போங்கள். உயிருடன் தப்புங்கள்!" என்றான் ராக்ஷசன்.

இதைக் கேட்டதும் ராமனுடைய கண்கள் சிவந்து கோபம் மேலிட்டு, "யமனிடம் நீ போகும் சமயம் நெருங்கி விட்டது!" என்று சொல்லி வில்லை வளைத்து, கூரிய அம்பொன்றை அரக்கன் மேல் விடுத்தான். அம்பும் அவன் உடலைத் துளைத்து விட்டு ரத்தத் தோடு நெருப்பைப் போல் பிரகாசித்துக்கொண்டு பூமியை அடைந்தது. ஆனால் அரக்கன் அப்படியே நின்றான்.



அவன் வலியினால் கோபங் கொண்டு சீதையைக் கீழே வைத்து விட்டுச் சூலத்தைத் தூக்கி வாயைத் திறந்து கொண்டு ராமலக்ஷ்மணர்கள் மேல் பாய்ந்தான். உடனே ராஜ குமாரர்கள் இருவரும் அவன் மேல் அம்பு மாரி பெய்தார்கள். அம்புகள் பாய்ந்து அவன் உடலில் குத்தி நின்றன. பெரியதொரு முள்ளம் பன்றியைப் போல் காட்சி தந்தான். அரக்கன் சிரித்து விட்டு, ஒரு முறை நெட்டி முறித்து உடலை ஒரு சிலுப்புச் சிலுப்பினான். குத்தி நின்ற அம்புகள் எல்லாம் பலபல வென்று கீழே உதிர்ந்தன. அதன் பிறகு சூலாயுதத்தைத் தூக்கி நின்றான். ராம லக்ஷ்மணர்கள் இரண்டு அம்புகளை விட்டுச் சூலத்தைத் துண்டு படுத்தி விட்டு, கத்திகளை எடுத்துக் கொண்டு அரக்கன் மேல் பாய்ந்தார்கள். அவனோ இருவரையும் இரண்டு கைகளில் தூக்கி எடுத்துத் தோளின்மேல் வைத்துக் கொண்டு, வனத்துக்குள் குதித்துச் சென்றான். அடர்ந்து இருள் மூடிய வனத்துக்குள் ராம லக்ஷ்மணர்கள் மறைந்து போனதைக் கீழே நின்ற சீதை கண்டு உரக்கப் புலம்பினாள்.

அரக்கனுடைய தோளின் மேலிருந்த ராமனும் லக்ஷ்மணனும் அவனுடைய இரு கரங்களையும் ஒடித்துப் பிய்த்து எறிந்தார்கள். ராக்ஷசன் கீழே விழுந்தான். ஆயுதத்தால் இவனுக்குச் சாவில்லை என்பதை யறிந்து கைகளால் அவனை நொறுக்கியும் காலால் மிதித்தும் பிண்டமாக்கினார்கள். அப்படியும் அவன் சாகவில்லை. வரத்தின் பலத்தால் உயிர் போகவில்லை. ஆனால் இம்சையைப் பொறுக்க முடியாமல் கதறினான். கேட்டு அடைந்த வரத்தில் இது விட்டுப் போன அம்சம்! மரணம் வந்து அவனுக்குச் சாந்தி தரவில்லை ஒரு பெருங் குழி வெட்டி அவனை அதில் போட்டு மூடிவிட நிச்சயித்தார்கள்.

அவனே ராமனை இவ்வாறு செய்யும்படி கேட்டுக் கொண்டான். அவன் கழுத்தின்மேல் கால் வைத்து மிதித்துக் கொண்டு நிற்கையில் அரக்கன் சொன்னான் :

"பகவானே! உன் பாதம் என்மேல் பட்டது. எனக்கு அறிவு வந்தது. என் சாபம் உன்னால்தான் தீர வேண்டும். நான் பிறப்பில் அரக்கன் அல்ல. நான் ஒரு கந்தர்வன். நான் பெற்ற வரமே என் விமோசனத்துக்குத் தடையாக இருக்கிறது. எப்படியாவது என் உயிரை மாய்த்தாயானால் நான் மறுபடி என் சொரூபத்தை யடைந்து மேலுலகம் செல்வேன்" என்றான்.

அவ்வாறே ராம லக்ஷ்மணர்கள் ஆயுதமின்றி அவன் உடலை நொறுக்கிப் பிண்டமாக்கிப் பெருங் குழியில் போட்டுப் புதைத்து விட்டார்கள். அரக்கனும் கந்தர்வர்களுக்குரிய மேலுலகம் எய்தினான்.

பிறகு ராஜகுமாரர்கள் தனியே நின்ற சீதையை அடைந்து அவளுக்கு விஷயத்தைச் சொல்லி, மூவரும் சரபங்க ரிஷியின் ஆசிரமத்துக்குச் சென்றார்கள்.

* * *

அவ்விடம் இந்திரன் தன் தேவகணங்களுடன் வந்து முனிவருடன் பேசிக் கொண்டிருந்தான். ராமன் வந்ததை இந்திரன் அறிந்து தன் பேச்சைச் சீக்கிரம் முடித்துக் கொண்டு மறைந்தான். பிறகு ராமனும் தம்பியும் சீதையும் சரபங்க ரிஷியை வணங்கினார்கள்.

வயோதிக ரிஷியானவர் "உனக்காகத்தான் காத்திருக்கிறேன். நான் என் உடலை நீத்து மேலுலகம் செல்ல வேண்டிய காலம் வந்த போதிலும் உன்னைக் காணாமல் போக விரும்பவில்லை. அதனால் காத்திருந்தேன். இப்போது என் விருப்பம் பூர்த்தியாயிற்று. என் புண்ணிய பலன்களை உனக்குத் தந்தேன்" என்றார்.

ரிஷி சொன்னதைக் கேட்ட ராமன், "பகவானே, என் புண்ணியத்தை நானே செய்து பெற வேண்டும். எனக்குத் தாங்கள் கொடுத்து நான் பெறுவதில் என்ன இருக்கிறது? நான் எல்லாவற்றையும் விட்டு விட்டுக் காட்டில் வசிக்க வந்திருக்கிறேன்" என்றான்.

* * *

ரிஷி அவதார விஷயத்தை யறிந்தவரானபடியால், "சுதீக்ஷண ரிஷியைக் கேட்டு இந்த வனத்தில் நீ எங்கே வசிக்க வேண்டும் என்பதைத் தெரிந்து கொள்வாய்" என்றார்.

அதன்மேல் சரபங்க ரிஷி தீ வளர்த்து அதில் பிரவேசித்தார். நெருப்பில் உடல் எரிந்து போய், அதனின்று ஒரு திவ்விய குமார உருவத்தோடு கிளம்பி மேல் உலகம் சென்றார்.

* *

விராதன் மாண்ட செய்தி ரிஷி கூட்டங்களில் பரவியதும் ராமனைப் பார்க்க அந்தப் பிரதேசத்துத் தபஸ்விகள் எல்

லோரும் வந்து கூடிவிட்டார்கள். ராக்ஷசர்களால் தாங்கள் அனுபவித்து வரும் உபத்திரவங்களை யெடுத்துச் சொல்லி, "அரசனே, நீ இங்கே வாசம் செய்ய வந்தது நம்முடைய பாக்கியம். இனி நம்முடைய தவங்களும் விரதங்களும் இடையூறின்றி நடைபெறும். வனத்தில் விழுந்து கிடக்கும் எலும்புகளைப் பார்! அவை யெல்லாம் ராக்ஷசர்களால் கொல்லப்பட்ட தபஸ்விகளுடைய அஸ்திகள் என்று அறிவாயாக. ராக்ஷசர்களின் உபத்திரவத்தால் பம்பை நதிக் கரையிலும் மந்தாகினி நதிக்கரையிலும் உள்ள ரிஷிகள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். அரசனுடைய கடமை பிரஜைகளைக் காப்பாற்றுவதாகும். இந்தக் கடமையைச் செய்யாத அரசன் அதருமம் செய்தவனாவான். குடும்பங்களுடன் இருப்பவர்கள் வரி செலுத்துவது போல் ரிஷிகளுடைய தவத்தின் பயனில் நான்கில் ஒரு பங்கு சொல்லாமலே அரசனுக்குப் போகும். தேவராஜனுடைய தேஜஸுக்குச் சமானமான தேஜஸ் பெற்றவனாய் இருக்கிறாய். எங்களைக் காப்பாற்றுவாயாக. எங்கள் கஷ்டம் மிகப்பெரிது. சொல்லுக்கு அடங்காது. நீயே சரணம்!" என்று மிகவும் வருந்திக் கேட்டுக் கொண்டார்கள்.

"பெரியோர்களே! ஏன் வருந்துகிறீர்கள்? நீங்கள் இட்ட ஆணையைச் செய்யக் கடமைப் பட்டவன் நான். அயோத்தியில் என் ஸ்தானத்தை நீத்துத் தந்தையின் ஆணையை நடத்த நான் வனம் வந்தேன். தந்தையின் ஆணைப்படி நடந்து கடன் தீர்ப்பதில் இத்தகைய நன்மையும் என்னால் உங்களுக்கு உண்டாவது என் பாக்கியமல்லவா? நான் வனத்திலிருந்து கொண்டு ராக்ஷசர்களை ஒழித்து உங்களுடைய உபத்திரவத்தை நீக்குவேன். தைரியமாக இருங்கள்" என்று ராமன் மிக வினயமாகச் சொன்னதைக் கேட்டு ரிஷிகளுக்கு அளவு கடந்த மகிழ்ச்சி யுண்டாயிற்று. ராம லக்ஷ்மணர்கள் சீதையுடன் சுதீக்ஷ்ண முனிவர் ஆசிரமத்தை நோக்கிச் சென்றார்கள்.

சமீபத்தில் ஒரு பெரிய மலையும் நல்ல அடர்த்தியான வனமும் காணப்பட்டன. அதுவே சுதீக்ஷ்ணருடைய ஆசிரமம் இருக்கும் பிரதேசம் என்று அறிந்து அதை நோக்கி ஆசிரம வனத்துக்குள் சென்றார்கள். மரவுரிகள் காயப்போட்டிருந்ததைக் கண்டார்கள். பிறகு வயோதிக ரிஷியையும் தெரிசித்தார்கள். அவரை நமஸ்கரித்துச் சக்கரவர்த்தித் திருமகன், "என் பெயர் ராமன். தங்களை தெரிசிக்க வந்தேன். அடியேனை ஆசீர்வதிக்க வேண்டும்" என்றான்.

வீரனைப் பார்த்ததும் முனிவர் எழுந்து கட்டியணைத்துக் கொண்டார்.

"தருமத்தைக் காக்கும் சிரேஷ்டனே! உனக்கு நல் வரவு. நீ வந்து இந்த ஆசிரமம் ஒளி பெற்று விளங்குகிறது. நீயே இதற்கு எஜமானன். நான் உன் வரவுக்காகக் காத்திருந்தேன். இல்லையேல் இதற்கு முன்னமே நான் இந்த உடலை நீத்திருப்பேன். நீ ராஜ்யத்திலிருந்து நீக்கப்பட்டு, சித்திரகூடம் வந்திருப்பதைப் பற்றி நான் கேள்விப் பட்டேன். நான் சம்பாதித்திருக்கும் புண்ணியம் உனதாகும். வீரனே! நீயும் உன் பாரியையும் லக்ஷ்மணனோடு அதைப் பெற்றுக் கொண்டு அனுபவிப்பீர்களாக" என்றார் சுதீக்ஷ்ண முனிவர்.

இவ்வாறு ஆசீர்வதிப்பது முனிவர்களுடைய வழக்கம். ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் சொல்ல வேண்டிய மறுமொழியும் ராமன் சொன்னதிலிருந்து பார்த்துக் கொள்ளலாம். இவையெல்லாம் அந்தக் காலத்தில் வழங்கிவந்தஅழகிய பண்பாடு.

உக்கிர தவம் செய்து பொலிவடைந்த முகத்தைப் பெற்ற முனிவரை வணங்கி ராமன் சொன்னான்:

"முனிவரே! என் புண்ணியத்தை நானே செய்து அடைய வேண்டும். தங்களுடைய ஆசீர்வாதத்தால் நான் அவ்வாறே செய்வேன். காட்டிலிருந்து கொண்டு வனவாசம் செய்ய நான் விரும்புகிறேன். மகாத்மா சரபங்கர் ஆணையின் பேரில் எல்லாம் அறிந்த தங்களுடைய ஆசீர்வாதத்தைப் பெற வந்தேன்" என்றான்.

முனிவருடைய முகம் மகிழ்ச்சியால் மலர்ந்தது. குறிப்பாகப் பேசினார்:

"இந்த ஆசிரமத்தையே நீ உன் இருப்பிடமாக வைத்துக் கொள்ளலாம். ரிஷிகள் பலர் அருகே வாசம் செய்கிறார்கள். நல்ல பழமும் கிழங்குகளும் நிறைந்த வனம். ஆனால் ரிஷிகளுடைய தவங்களைக் கெடுக்க துஷ்ட மிருகங்கள் அநேகம் இந்தப் பிரதேசத்தில் திரிந்து கொண்டிருக்கின்றன. அவைகளின் தொந்தரவை ரிஷிகள் சகிக்க முடியவில்லை. இந்தத் துஷ்ட மிருகங்களைத் தவிர இவ்விடம் ஒரு குறையுமில்லை" என்றார்.

ரிஷியினுடைய சொல்லின் பொருளைச் சக்கரவர்த்தித் திருமகன் தெரிந்து

கொண்டான். தன்னுடைய கோதண்டத்தை வளைத்து நாண் பூட்டி:

"பகவான் முனிவரே! இந்தத் துஷ்ட மிருகங்களை அடியோடு ஒழிப்பது என் பணியாகும். என் வில்லும் கூர்மையான பாணங்களும் வீண் போகாது. இந்த ஆசிரமத்திலேயே நாங்கள் இருப்பது அவ்வளவு உசிதமல்ல. தங்களுடைய தவத்துக்குத் தடையாகும். அருகில் ஓரிடம் பார்த்துக் கொள்ள வேண்டும். அனுக்கிரகிப்பீராக!" என்று சொன்னான்.

அன்றிரவு முனிவருடைய ஆசிரமத்திலேயே அதிதிகளாகத் தங்கினார்கள்.

அதிகாலையில் மூவரும் எழுந்திருந்து கருங்குவளை வாசனையோடு சுகமாகக் குளிர்ந்திருந்த ஜலத்தில் ஸ்நானம் செய்து, ஹோமம் செய்து விட்டு முனிவரை வணங்கி நின்றார்கள்.

"தங்களுடைய அருளினால் இரவு நன்றாகக் கழிந்தது. இந்தப் பிரதேசத்திலுள்ள பல ரிஷி சிரேஷ்டர்களையும் தெரிசித்து ஆசிபெற விரும்புகிறோம். எங்களுடன் வந்திருக்கும் இந்த மகான்கள் அழைத்துப் போவார்கள். வெய்யிலுக்கு முன் புறப்பட்டுப் போவது நலமான படியால் விடை கொடுக்க வேண்டும்" என்று ராமன் சொல்ல மூவரும் முனிவருடைய பாதங்கள் தொட்டு நமஸ்கரித்தார்கள்.

ராஜகுமாரர்களை முனிவர் அன்புடன் ஆலிங்கனம் செய்து, "க்ஷேமமாகப் போய் வாருங்கள். தண்டகாரணியத்து ரிஷி சிரேஷ்டர்களைப் பார்த்து ஆசி பெறுங்கள். அனைவரும் தவம் செய்து சித்தி யடைந்தவர்கள். மிக ரம்மியமான வனம். மான்களும், பறவைகளும், புஷ்பங்கள் நிறைந்த தடாகங்களும், மலையருவிகளும், மயில்களும்—எல்லாம் மிக அழகாக இருக்கும். லக்ஷ்மணா, அண்ணனும் நீயும் சீதா தேவியுடன் போய் வாருங்கள். இஷ்டமானபோது ஆசிரமத்துக்குத் திரும்ப வாருங்கள்" என்றார்.

மூவரும் முனிவரை வலம் செய்து விட்டுப் புறப்பட்டார்கள். இருவருடைய கத்தி, வில், அம்பறாத் தூணி முதலியவற்றைச் சீதை எடுத்துத் தர அவர்களும் அவற்றைத் தரித்து ஆயுதபாணிகளாகப் புறப்பட்டார்கள். முனிவருடைய ஆசியைப் பெற்று ராஜகுமாரர்களுடைய அழகும் காந்தியும் முன்னைவிட அதிகமாகப் பிரகாசித்தன.

## படித்துப் பாருங்கள்!

### ஸ்ரீ ஆண்டாள் அருளிய திருப்பாவை
(சங்கீத வர்ண மெட்டுகள்)

ஓங்கி உலகளந்த உத்தமன் பேர் பாடி, உலகத்து மக்களை அஞ்ஞானத் துயிலிலிருந்து எழுப்பும் திருப்பாவை யென்னும் ஒப்பு உயர்வற்ற நூல் தமிழ் கூறும் நல்லுலகமெல்லாம் மிகப் பிரசித்தமானது. அப் பாசுரங்களுக்கு மிகவும் சுலபமான வர்ணமெட்டுகள் அமைத்திருக்கின்றார் ஸ்ரீ வில்லிபுத்தூர் டாக்டர் கே. கங்கா நாராயணன் அவர்கள். தஞ்சை சங்கீத வித்வான் எம். தியாகராஜன் மேற்படி பாசுரங்களுக்கு ஸ்வரம் அமைத்திருக்கிறார்.

வெளியிட்டோர்: ஸ்ரீ நாச்சியார் தேவஸ்தானம், ஸ்ரீ வில்லிபுத்தூர்.

### திருவுந்தியார் தெளிவுக் கட்டுரை

சிவஞானச் செல்வம் பெற்று, பரமஞானியாக விளங்கிய திருவியலூர் உய்ய வந்த தேவநாயனார் மக்கட் குலம் பாரமார்த்திகத் துறையிலும், நன்னெறியிலும் உய்ய வேண்டும் என்னும் பெருநோக்கோடு திருவுந்தியார் என்னும் ஞான நூலை இயற்றி யருளினார்.

"வித்தினைத் தேடி முளையைக் கை விட்டவர்
பித்தேறி னார்களென் றுந்தீபற;
பெறுவதங் கென்பெணே உந்தீபற"

இம்மாதிரி வேதாந்தப் பாதையில் ஞான முழக்கம் செய்து கொண்டு செல்லும் பழம் பாடல்களுக்கு விரிவுரை செய்வதென்பது சாத்தியமன்று. அந்தக் காரியம் இந் நூலில் வியக்கத்தக்க விதத்தில் நிறைவேற்றப் பட்டிருக்கிறது.

எழுதியவர்: ஆதீனத்து வித்துவான் தே. ஆ. ஸ்ரீநிவாசாச்சாரியார்; பிரசுரம்: திருவாவடுதுறை ஆதீனம், திருவாவடுதுறை, தஞ்சை ஜில்லா.

### முஸ்லிம் முரசு ('மீலாத்' மலர்)

"பெருமை மிகுந்திடும் பெண்ணினத்தை மண்ணில்
பேதைமையாற்புதைத் தழித்து வந்தோர்
அருமையோ டன்னவர் உரிமைகளைக் காக்கும்
ஆற்றலைப் பெறச் செய்தவரார்?"

என்று கேட்டு இஸ்லாம் மதத்தின் பெருமைகளையும் அதில் உள்ள உரிமைகளையும் பற்றி விரிவாகக் கூறி முழங்குகிறது, "முஸ்லிம் முரசு" மாதப் பத்திரிகையின் 'மீலாத்' மலர்.

இஸ்லாம் மதத்தின் தந்தையான நபிகள் நாயகத்தின் பிறந்த தின விழாவை யொட்டி வெளியிடப்படும் ஆண்டு மலர் இது. திருக் குர் ஆனின் அரிய போதனைகளையும், இஸ்லாம் மதத்தின் சிறந்த கோட்பாடுகளையும், தீர்க்கதரிசியும் கடவுளின் தூதருமான நபிகள் நாயகத்தின் புனித வரலாற்றையும், கவிஞரும் தத்துவ ஞானியுமான அல்லாமா இக்பாலின் வாழ்க்கை வரலாற்றையும் இம் மலரின் 'முரசொலி'யின் மூலம் நன்கு பரப்பியிருக்கின்றனர். விலாசம்: "முஸ்லிம் முரசு" 18, ராமசாமித் தெரு, சென்னை – 1.

# ஹாஸ்யக் களஞ்சியம்



"வாயில் ஈ புகுந்தது தெரியாமல் உங்களோடு பேசிக் கொண்டிருந்து விட்டேன்!"
"அது ஈ இல்லே, குளவி!"



"நான் சினிமாவிலே சேர மாட்டேன் என்று சொல்வதற்கு, இப்பொழுது உனக்குக் காரணம் புரிந்ததா?"

"பிரசங்கத்திலே ஒரு அலசு அலசி வெளு வெளுன்னு வெளுத்து விட்டேன்!"



"அப்படியா? இந்தத் தடவை துணிகளை யெல்லாம் உங்களிடம் போட்டுப் பார்க்கட்டுமா?"



"சிரசாசனம் செய்ய ஆரம்பித்த பிறகுதான் தெரிகிறது, கட்டிலுக்கடியில் ஏகக் குப்பை சேர்ந்து கிடக்கிறது என்று!"





# சாமா



"என் பெட்டி, சாமான், பர்ஸ் எல்லாம் திடீரென்று மாயமாக மறைந்து விட்டது! கண்டு பிடித்துக் கொடுங்கள்!"

"அது சரி! உமக்கு என்ன உத்தியோகம்?"

"மந்திரவாதியுங்க!"




அவன் ஊருக்குப் போய் ஒரு வரி கடிதம் எழுதினானா, பார்த்தாயா?"




"உங்களுக்குக் குனிந்து பார்க்க முடியாது என்பதற்காகக் காலுக்குக் கண்ணாடி காட்டுகிறேன்! பார்த்து நன்றா யிருக்கிறதா என்று சொல்லுங்கள்!"



"போண்டா ரப்பர் மாதிரி இருக்குன்னு சொன்னால், அதற்காக அதைப் பந்தாடிப் பார்க்க வேண்டுமா?"









# வயிற்றுக்கோளாறு தினம் உங்கள் சந்தோஷத்தைக் கெடுக்க விடாதீர்கள்!



உங்களுக்கு அஜீர்ணமோ, நெஞ்செரிச்சலோ அல்லது பித்தமயக்கமோ ஏதாவது ஏற்பட்டால், ஒரு கிளாஸ் ஈனோஸ் 'ப்ரூட் ஸால்ட்' சாப்பிடுங்கள்—கட்டாயம் நிவர்த்தி பெறுவீர்கள். ஈனோஸ் புளிப்பை அகற்றும் குணமுள்ளதாகையால் அது வயிற்றிலுள்ள 'கன உணர்ச்சியை' சீக்கிரம் நீக்கி, நீங்கள் சந்துஷ்டியும் சுருசுருப்பும் பெற உதவுகிறது. ஈனோஸ் பித்தப்பை மந்தத்தைத் தடுத்து, மலக்கழிவை ஒழுங்குபடுத்துகிறது. ஈனோஸ் மூலம் சந்தோஷமாக வாழுங்கள்

# ஈனோஸ் 'ப்ரூட் ஸால்ட்'

உங்களை தெம்பாகவும் சுருசுருப்பாகவும் வைத்திருக்கிறது




புதுமை கெடாமலிருக்க புட்டிகளில் விற்கப்படுகிறது.

'ஈனோ' மற்றும் 'ப்ரூட் ஸால்ட்' என்ற பதங்கள் ரிஜிஸ்டர் செய்யப்பட்ட டிரேட் மார்க்குகள்

ENO. 8163




# தங்க மாம்பழம்



ராஜி

### 11. வீரப்பனின் வேதனை

பிரபாகரனும் உமாவும் வெகு வேகமாக அந்தக் குதிரையின் மீது சவாரி செய்து கொண்டு போனார்கள். அவர்கள் போகும் வழியில் ஒரு கடை வீதி வந்தது. பிரபாகரன் குதிரையைக் கொஞ்சம் மெதுவாகச் செலுத்த ஆரம்பித்தான். வழியில் நின்று கொண்டிருந்த ஒரு பையனைப் பார்த்ததும் குதிரையைச் சற்று நிறுத்தினான். "தம்பி, மாயா மகேந்திரபுரம் இங்கிருந்து இன்னும் எவ்வளவு தூரம் இருக்கிறது? உனக்குத் தெரியுமா?" என்று அவனை விசாரித்தான்.

"ஐயா, இந்தக் கடைவீதி மாயா மகேந்திரபுரத்தின் எல்லையைச் சேர்ந்ததுதான். இன்னும் ஐந்து மைல் தூரம் இதே ரஸ்தாவில் பிரயாணம் செய்தால் நகர எல்லையை அடைந்து விடலாம்" என்றான் பையன்.

உடனே பிரபாகரன் குதிரையை ஒருதட்டுத் தட்டி வேகமாக ஓட்டினான்.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் பிரபாகரன் மிகவும் உற்சாகத்துடன், "உமா, நாம் நகரத்தின் எல்லையை அடைந்து விட்டோம். பார்த்தாயா, பெரிய பெரிய மாட மாளிகைகளும் கூட கோபுரங்களும் வானத்தைத் தொட்டுக் கொண்டு நிற்கின்றன. உமா, அந்தக் கோவிலையும் அதைச் சேர்ந்த மண்டபத்தையும் பார்! எவ்வளவு நன்றாயிருக்கின்றன!" என்று அதிசயித்துக் கொண்டே குதிரையைச் செலுத்திக் கொண்டு போனான்.

அப்பொழுது உமா திடீரென்று, "அண்ணா, ஐயோ! பயமாயிருக்கிறதே! கொஞ்சம் பின்னால் திரும்பிப் பாரேன்!" என்று அலறினாள்.

பிரபாகரன் ஒன்றும் புரியாமல் திகைத்துப் போய்த் திரும்பிப் பார்த்தான்.

"உமா, உமா! நம்மை ஆபத்து நெருங்கிவருகிறது. நம்மை இரும்புக் கூண்டில் அடைத்து வைத்தானே, அவன்தான் குதிரையில் ஏறி நம்மைத் தேடிக் கொண்டு வருகிறான்! நல்லவேளையாக நீ பார்த்தாயே! நாம் இருவரும் அவன் கண்ணில் படாமல் தப்ப வேண்டும். இந்த வீட்டு வாசலில் குதிரைகள் இரண்டையும் கட்டிவிட்டு, நாம் கோவிலுக்குள் சென்று ஒளிந்து கொள்ளலாம்!" என்று கூறிக் குதிரையை விட்டு அவசரமாகக் கீழே இறங்கினான் பிரபாகரன். பிறகு உமாவையும்



வீரப்பதேவனும் சிரித்துக்கொண்டே, "ஏன் அப்பா, இந்தவீட்டில், ஒரு பையனையும் பெண்ணையும் அழைத்துக்கொண்டு வந்து அரண்மனைச் சேவகர்கள் பூட்டி வைத்தார்களா?" என்று சொல்லி முடியாத ஆவலோடு கேட்டான்.

இளைஞன் "ஆமாம், ஆமாம்" என்னும் பாவனையில் தலையை அசைத்தான்.

"அந்தப் பையன் பைஜாமாவும் ஜிப்பாவும் அணிந்திருப்பான். அவன் கூட இருந்த பெண் பட்டுப் பைஜாமாவும் சட்டையும் அணிந்து மேலே நீலப்பட்டு ஒன்றைப் போட்டுக் கொண்டிருப்பாள்" என்றான் வீரப்ப தேவன்.

உள்ளே யிருந்த வாலிபன், "ஆமாம், ஆமாம்" என்றான்.

"அப்படிச் சொல்லு. அகப்பட்டுக் கொண்டார்களா! உள்ளே போய் அவர்களை என்ன மிரட்டு மிரட்டுகிறேன், பார்!" என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டான். உடனே உள்ளே இருந்த வாலிபனிடம், "இந்தப் பூட்டுக்குச் சாவி உன்னிடம் இருக்கிறதா?" என்று வாசற் கதவுப் பூட்டைச் சுட்டிக் காண்பித்தான் வீரப்பதேவன்.

"இருக்கு, இருக்கு, இதோ இருக்கு. இங்கே வா!" என்று பலமாகக் கத்தினான் அந்த வாலிபன்.

வீரப்பதேவனுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. "சாவியைக் கொடு" என்று தனது வலது கையை ஜன்னல் கம்பிகளின் வழியாக நீட்டினான் வீரப்ப தேவன். உள்ளே இருந்த வாலிபன் வீரப்பதேவனின் கையைப் பிடித்து உள்ளே நன்றாக இழுத்தான். மற்றொரு கையினால் வீரப்ப தேவனின் மூக்கைத் தன் முழு பலத்துடன் கிள்ளினான்.

"ஐயோ, ஐயோ! என் மூக்குப் போய் விட்டதே? யாராவது வாருங்களேன்!" என்று பலத்த குரலுடன் கத்தினான் வீரப்பதேவன். அவன் மூக்கில் இருந்து இரத்தம் வர ஆரம்பித்தது.

வீரப்பதேவனின் குரலைக் கேட்டு ஒரு குடியானவன் ஓடோடியும் வந்தான். "யார் ஐயா, நீர் எங்கே வந்தீர்? இந்த வீட்டில் உமக்கு என்ன வேலை? காக்கி உடுப்பைப் போட்டுக் கொண்டால் என்ன வேணுமென்றாலும் செய்யலாம் என்பது உம் நினைவா?" என்று கத்தினான்.

"ஐயா, கோபித்துக் கொள்ளாதீர். என் சிநேகிதர்களுடைய குதிரைகள் வாசற் பக்கம் கட்டி யிருந்தன. அவர்கள் உள்ளே இருக்கிறார்களா என்ற சந்தேகம் எனக்கு

இறக்கி விட்டான். "உமா, நாம் இந்தக் கோயிலேயே சற்று நேரம் தங்கி இளைப் பாறுவோம். அவன் போன பிறகு, நாம் மறுபடியும் நம் பிரயாணத்தைத் தொடங்கலாம்!" என்று சொல்லிப் பிரபாகரன் குதிரைகள் இரண்டையும் அந்த வீட்டு வாசலிலிருந்த மரத்தில் கட்டினான். பிறகு உமாவின் கையைப் பிடித்துக் கொண்டு கோயிலை நோக்கி விரைந்து ஓடினான்.

குதிரை மீது வந்து கொண்டிருந்தவன் வீரப்ப தேவன் தான். பிரபாகரனையும் உமாவையும் பிடித்துக் கொண்டு வருவதாகச் சொல்லிச் சென்ற குதிரை வீரர்கள் இருவரையும் தான் தேடிக்கொண்டு அவன் அங்குமிங்கும் பார்த்தவண்ணம் மெதுவாக வந்து கொண்டிருந்தான்.

கோவில் அருகில் வந்ததும், அந்தக் கோவில் மதில் புறமாக அமைந்திருந்த அந்த வீட்டு வாசலில் கட்டி யிருந்த இரண்டு குதிரைகளையும் பார்த்ததும் வீரப்பதேவன் திடுக்கிட்டு நின்றான். அந்தக் குதிரைகளின் நிறமும் அடையாளங்களும் அவை அரண்மனையைச் சேர்ந்தவை என்பதைத் தெளிவாக்கின.

வீரப்பதேவன் தன் குதிரையிலிருந்து இறங்கி அதை ஒருபுறமாகக் கட்டி விட்டு, வீட்டு வாசற்படி ஏறினான். அந்த வீட்டு வாசற் கதவு பூட்டப் பட்டிருந்தது. வீரப்பனுக்குச் 'சட்'டென்று ஒரு எண்ணம் உதித்தது. 'அந்தக் குதிரை வீரர்கள் இருவரும் பிரபாகரனையும் உமாவையும் இந்த வீட்டுக்குள் விட்டுப் பூட்டிக் கொண்டு எங்கேயாவது போயிருப்பார்கள்' என்று நினைத்தான்.

அந்த வீட்டின் வாசற்புறத்து அறையின் ஜன்னல் கதவுகள் திறந்து வைக்கப் பட்டிருந்தன. ஜன்னலுக்கு அருகில் ஒரு வாலிபன் உட்கார்ந்திருந்தான். அவன் வீரப்ப தேவனைப் பார்த்ததும் சிரித்தான்.






Trade Mark

*Verily the ideal films for picturising ideal subjects on FUJEX quality paper.*

FUJI

| | |
|---|---|
| NEOPAN SS 120 .... | Rs. 2. 1. 0 |
| NEOPAN SS 620 .... | Rs. 2. 1. 0 |
| NEOPAN SS 127 .... | Rs. 1. 14. 0 |
| NEOPAN SS 35 mm. 20exp. Cartridge ... | Rs. 2. 13. 0 |

32° Sch.




**The Best From Modern Japan!**

SOLE DISTRIBUTORS:

**CHOWGULE & CO., (HIND) LTD.**

Bombay P.O. Box 1478 New Delhi P.O. Box 486 Calcutta P.O. Box 8943 Madras P.O. Box 1743

FZY-34 TAM.

# உலகின்
# மகோன்னத
# சமன
# ஔஷதம்




**வெட்டுப்புண், தீப்புண், சிராய்ப்பு,**

**காயங்களுக்கு மிகுந்த பாதுகாப்புள்ள மிக நிச்சயமான சிகிச்சை**

விபத்துகளை முன்னிட்டு ஜாம்-பெக்கை எப்பொழுதும் கைவசம் வைத்திருங்கள். ஜாம்-பெக் இதமளிப்பது விஷத்தடுப்பு குணமுள்ளது காயங்களில் அபாயகரமான கிருமிகள் பரவாமல் தடுக்கும் ஜாம்-பெக் சீக்கிரத்தில் காயங்களை ஆற்றும். இதர மதிப்புவாய்ந்த ஔஷதப் பொருள்களைத் தவிர ஜாம்-பெக்கில் க்ளோரோபில் சேர்ந்திருப்பதால் அதன் சமனகுணம். தசை நார் போஷாக்கு மற்றும் இதர பயன்களும் கிடைக்கும். ஜாம்-பெக்கை எக்ஸிமா முதலிய சரும நோய்களின் நிவாரணத்திற்கும் வலியுடன் சோர்வுற்று ரணமடைந்த கால்களுக்கு சமனமூட்டி குணமாக்கவும் மூலநோயின் வலியையும் அரிப்பையும் நிறுத்தவும் உபயோகிக்கலாம். ஜாம்-பெக்கில் மிருகக் கொழுப்பு சேரவில்லை என்பதற்கு உத்திரவாதம்.

**ஜாம்-பெக்—எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.**

மதராஸிற்கு ஸோல் ஏஜெண்டுகள்: தாதா & கம்பெனி, பார்க் டவுன்

உண்டாகவே வந்தேன். வாசற்கதவு பூட்டப்பட்டு இருந்ததால் இந்தப் பூட்டுக்குச் சாவி இருக்கிறதா என்று அதோ அறையில் உட்கார்ந்திருக்கிறாரே அவரை விசாரித்தேன். அவர் சாவி கொடுப்பதாக என்னை ஏமாற்றிக் கூப்பிட்டு நான் ஜன்னல் கம்பியிடம் போனவுடன் என் கையைப் பிடித்து இழுத்தது மல்லாமல் என் மூக்கையும் நன்றாகக் கிள்ளிவிட்டார்!'' என்று தன் மூக்கைக் காண்பித்தான் வீரப்ப தேவன்.

வீரப்பதேவன் சொல்லியதைக் கேட்ட குடியானவன் பெரிதாகச் சிரித்தான். கோபம் கொண்ட வீரப்பதேவன், ''என்ன ஐயா சிரிக்கிறீர்கள்? என்னை அவமானப் படுத்தியதற்கு உம்மை என்ன செய்கிறேன் பாரும். நான் அரண்மனை முக்கியச் சேவகன், தெரியுமா? நான் அவஸ்தைப் படுகிறேன். என்னைப் பார்த்துச் சிரித்தபடியே இருக்கிறீரே! உமக்கு என்ன பைத்தியமா?'' என்று கேட்டான்.

''ஐயா, எனக்குப் பைத்தியமில்லை. நான் வருவதற்கு முன் நீங்கள் யாருடன் பேசிக் கொண்டிருந்தீர்களோ அவருக்குத்தான் பைத்தியம்! அவருக்குப் புத்தி சுவாதீனத்தில் இல்லை என்பதற்காகத்தான் பூட்டி வைத்திருக்கிறார்கள். இந்த வீட்டு எஜமானன் வெளியே போயிருப்பதனால் வீட்டைப் பூட்டிக் கொண்டு போயிருக்கிறார்!'' என்றான்.

வீரப்பதேவனுக்கு வெட்கமாய்ப் போய் விட்டது. 'ஒரு பைத்தியத்தினிடமா இவ்வளவு நேரம் பேசிக் கொண்டிருந்தேன்!' என்று நினைத்து வருந்தினான். வாய் திறவாமல் கீழே இறங்கிக் குதிரைகளை அவிழ்த்துக் கொண்டு, தன் குதிரையின் மீது ஏறி மற்றக் குதிரைகளைக் கையில் பிடித்துக் கொண்டு புறப்பட்டான்.

வீரப்பதேவன் மைதானத்தை அடையும் பொழுது இருட்டுகிற சமயம். தன் குதிரையை விட்டு இறங்கினான். கிணற்றுக்குச் சமீபத்தில் சென்றான். அங்கே மண் கூஜா உடைந்து கிடப்பதைக் கண்டான். 'எங்கே குதிரைச் சேவகர்களைக் காணவில்லை? பிரபாகரனையும், உமாவையும்கூடக் காணவில்லையே' என்று மைதானத்தை ஒரு முறை சுற்றிப் பார்த்தான். பனைமரத்தடியில் ஏதோ பேச்சுக்குரல் கேட்பதுபோலத் தோன்றிற்று. 'அது யாராக இருக்கும்?' என்று எண்ணியபடியே பனைமரத்தை நெருங்கினான். அப்பொழுது ஒரு குதிரைச் சேவகன் பனைமரத்தைக் கட்டிக் கொண்டபடி நின்று கொண்டிருந்தான். வீரப்பதேவன் அவனைப் பார்த்ததும் சந்தோஷத்துடன், '' அண்ணே, இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய்?'' என்று அவன் முதுகில் ஒரு தட்டுத் தட்டினான். அந்தச் சேவகன் தனது இரண்டு கைகளையும் மேலும் கீழுமாக ஆட்டிக் கொண்டு 'காகா, காகா' என்று கத்த ஆரம்பித்தான். வீரப்பதேவன் அவனை அடித்தான், உதைத்தான், ஒன்றும் பிரயோஜனப் படவில்லை. அவன், 'கா, கா, கா' என்று கத்திய வண்ணமாகவே இருந்தான்.

வீரர்களில் மற்றொருவன் எங்கே காணோம் என்று வீரப்பதேவன் தேடிப் பார்த்தான். கொஞ்ச தூரத்துக்கு அப்பால் அந்தச் சேவகன் தவழ்ந்து இங்கு மங்கும் போய்க் கொண்டிருந்தான். வீரப்பதேவன் அவனிடம் போய், ''என்ன, அண்ணே! குழந்தை மாதிரி விளையாடுகிறாய்?'' என்றான். 'ஹி, ஹி, ஹி' என்று குதிரையைப் போல் அந்தச் சேவகன் கனைத்தான்.

வீரப்பதேவன் சற்று நேரம் திகைத்து நின்றான். 'ஓகோ, எனக்கு இப்பொழுது தான் விஷயம் ஞாபகத்துக்கு வருகிறது. அந்த மந்திர ஜலத்தை இவர்களும் குடித்திருக்க வேண்டும். அதனால்தான் இவர்கள் இப்படி நடந்து கொள்ளுகிறார்கள். அடாடா, நான் ஒரு தப்பு செய்து விட்டேன். இவர்களை இங்கே அனுப்பிய பொழுது இந்த மந்திர ஜலத்தைப் பற்றிச் சொல்லி அனுப்பி யிருந்தால், இப்படி நேர்ந்திருக்காது. உம், இனிமேல் அதைப் பற்றி நினைப்பதில் என்ன பிரயோஜனம்! சேவகர்கள் இங்கு இருக்கிறார்கள். ஆனால் பிரபாகரனும், உமாவும் எங்கே? சேவகர்கள் இங்கு இருக்கும் பொழுது குதிரைகள் மாத்திரம் அங்கு கட்டப்பட்டிருந்ததின் காரணம்? ஒருகால் பிரபாகரனும் உமாவும் அந்தக் குதிரைகளில் சவாரி செய்து கொண்டு போயிருப்பார்களோ! அவர்களால் எப்படிப் போக முடியும்? அவர்கள்தான் கிணற்றிலிருந்து மந்திர ஜலத்தைக் குடித்ததாக அந்தக் கிழவி சொன்னாளே, எதற்கும் சற்றுப் பொறுத்துப் பார்க்கலாம். மந்திர ஜலத்தின் சக்தி தீர்ந்து இந்தச் சேவகர்களுக்கும் அவர்கள் சுய நினைவு வரட்டும்' என்று இது மாதிரியான பல யோசனைகளுடன் வீரப்பதேவன் ஆவலோடு காத்துக் கொண்டிருந்தான்.

சிறிது நேரத்துக்கெல்லாம், அங்கே ஒரு அதிசயம் நிகழ்ந்தது. தங்கள் சுய புத்தியை இழந்து தவித்துக் கொண்டிருந்த இரண்டு சேவகர்களும் சட்டென்று எழுந்து நின்று ஒரே திகைப்புடன் சுற்று முற்றும் பார்த்தார்கள். மந்திர சக்தி தீர்ந்து விட்டபடியினால் அவர்களுக்கு அங்கே நடந்த நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றாக நினைவுக்கு வந்தன. இருவரும் மைதானத்தைச் சுற்றிப் பார்த்தனர்.

''ஆகா! அந்தப் பையனும் பெண்ணும் தப்பி ஓடி விட்டார்களா?'' என்று வீரர்களில் ஒருவன் திகிலுடன் கேட்டான்.

உடனே மற்றவனும் உணர்வு பெற்று, ''ஆமாம், தப்பி விட்டார்கள். நம்

குதிரைகள் எங்கே? ஹா! அதோ வீரப்ப தேவர் உட்கார்ந்திருக்கிறாரே! நாம் அந்தப் பையனைக் கட்டிப் போட்டோமே! எப்படித் தப்பினான்?" என்று கேட்டுக் குழப்பத்துடன் தலையைப் பலமாகச் சொறிந்து கொண்டான்.

வயற்காட்டுக் கிழவியின் மந்திர சக்தியைப் பற்றி அவர்களுக்கு எதுவும் தெரியாதாகையினால் இரண்டு வீரர்களும் நடந்த நிகழ்ச்சிகள் எதுவும் புரியாமல், தாங்கள் எப்படி அவர்களைத் தப்ப விட்டோம் என்றும் தெரியாமல் தவித்துப் போனார்கள். இவர்கள் இருவரும் தவிப்பதை வீரப்ப தேவன் சாவதானமாக இருந்து பார்த்துக் கொண்டிருந்தான்.

வீரப்பதேவன் முகத்தைப் பார்ப்பதற்கே அவர்கள் நாணி நின்றார்கள். மேலும் அவனிடம் என்ன சொல்லுவதென்றே அவர்களுக்குத் தெரியவில்லை.

"என்ன, இரண்டு பேரும் அயர்ந்து போய் விட்டீர்களே, பிரபாகரனும் உமாவும் எங்கே? இந்தக் கயிற்றினால்தானே அவர்களைக் கட்டினீர்கள்?" என்று வீரப்பதேவன் கேட்டு அவர்களிடம் கயிற்றைக் காண்பித்தான்.

இருவரும் ஏககாலத்தில், "ஆமாம், ஆமாம்! நாங்கள் அவனைக் கட்டியது இதே கயிறுதான். இது எப்படி உங்களுக்குக் கிடைத்தது?" என்று கேட்டார்கள்.

"இங்கே தான் கிடந்தது. அந்தப் பெண்ணை நீங்கள் கட்டிப் போடவில்லையாக்கும். அவள் அவனை அவிழ்த்து விட்டிருக்கிறாள். நீங்கள் இருவரும் அவர்களைத் தொடர்ந்து வந்து பிடித்ததும் என்ன செய்தீர்கள்?"

சேவகர்கள் இருவரும் தாங்கள் புறப்பட்டது முதல் நடந்த விஷயங்களையெல்லாம் விவரமாகச் சொன்னார்கள்.

"நாங்கள் இருவரும் அந்தப் பயலைக் கட்டிப் போட்டு விட்டு, தோசை தின்ன உட்கார்ந்தோம். அந்தப் பெண்ணைப் பார்த்தால் பாவமாயிருந்தது. ஆகவே, அவளைக் கட்டிப் போடவில்லை. தோசை தின்று விட்டுத் தண்ணீருக்காகத் தவித்தோம். அப்போது அவர்கள் கொண்டு வந்திருந்த மண் கூஜாவில் தண்ணீர் இருப்பது தெரிந்தது. இருவரும் குடித்தோம். அவ்வளவுதான் எங்களுக்கு நினைவு இருக்கிறது" என்றான் சேவகர்களில் ஒருவன்.

உடனே வீரப்பன், "அவர்களை மயக்கச் செய்த மாய ஜாலம் உங்களை மயக்கி விட்டது. அவர்கள் சாமர்த்தியமாகத் தப்பி விட்டார்கள். தோழர்களே, நாளைக்கு அவர்கள் இருவரையும் மடக்குவதற்கு ஏற்பாடு செய்கிறேன். வாருங்கள் அரண்மனைக்குப் போகலாம்" என்று கூறிக் குதிரையில் ஏறினான். அவர்களும் குதிரைமீது ஏறி அவனைத் தொடர்ந்தார்கள். (தொடரும்)

## அவர் யுக்தி!



# உலகத்தின் உச்சியில்

அழகிய டிசைனும் உறுதியும் வாய்ந்த பலவிதவர்ணங்களில் ரேமாண்ட்ஸ் ஜேகே ஒர்ஸ்டட் சூட்டிங்ஸ்-வேலை நேரத்திலும் ஓய்விலும் பெருமையுடன் அணியத்தக்க உடைகள்.

எல்லா ரக நெசவுகளிலும் கிடைக்கும்

ரேமாண்ட்ஸ் Jaykay




ஜேகே கம்பள உடைகள்

சிறந்த உழைப்புக்காக உறுதியான நெசவு

தி ரேமாண்ட்ஸ் உல்லன் மில்ஸ் லிட்., பம்பாய்




அன்று துரைசிங்கத்தின் வழக்குத் தீர்ப்பு நாள். கண்டோர், கேட்டோர் உள்ளம் நடுங்கும் துணிகரப் பகற் கொள்ளைக்காரனை துரைசிங்கத்தைப் பார்க்க நீதி மன்றத்தில் ஜனங்கள் ஒரே கூட்டமாகக் கூடி நின்றார்கள். சட்டத்தையும் ஒழுங்கையும் கண்காணிக்கும் சர்க்கார் உயர்தர அதிகாரிகள் அங்குமிங்குமாகப் போய்க்கொண்டிருந்தார்கள். மூடப்பட்ட போலீஸ் மோட்டார் வாகனம் நீதி மன்றத்துக்குள் வேகமாக வந்து நின்றது. ஆயுதம் தாங்கிய போலீசார் இரும்புச் சங்கிலிகளால் பிணைக்கப்பட்ட துரைசிங்கத்தை அதனின்று இறக்கி, ஒரு கொடிய வன விலங்கைப் போல் நீதிமன்றத்துக்கு இழுத்து வந்தனர்.

நீதிமன்றம் கூடுவதற்கு இன்னும் கொஞ்சம் நேரமிருந்தது. வழக்கு விசாரணைப் பிரதம குமாஸ்தா கைலாசநாதர் தற்செயலாக வெளியே வந்தார். போலீசார் மத்தியில் வெளியே நின்று கொண்டிருந்த அந்தக் கைதியைப் பார்த்தார். வெகு காலமாகப் போலீசார் கையில் அகப்படாத பயங்கரக் கைதியல்லவா! கொஞ்ச நேரம் அவனை உற்றுப் பார்த்தார். அவன் மிகவும் களைத்துச் சோர்ந்து போயிருந்தான். புகை பிடித்துக் கொண்டு நிற்கும் ஒரு போலீஸ்காரரையே அவன் பார்த்துக்கொண்டிருந்தான். தான் குற்றவாளி, சுதந்திர மற்றவன் என்பதையும் அதனால் தன்னுடைய அதிவிருப்பமான புகை பிடிப்பது கூடத் தடுக்கப்பட்டிருப்பதையும் எண்ணி, ஏக்கமடைந்தவன் போல் காணப்பட்டான். அவனுக்கு அந்தச் சமயத்தில் ஒரு சுருட்டுத்தான் தேவையாக இருந்தது. இதை கொடிப்பொழுதில் அறிந்து கொண்டார் கைலாசநாதர்.

அவருடைய மனித உள்ளம் இளகியது. துரைசிங்கமும் ஒரு மனிதன்தானே! கைலாசநாதர் அந்தக் கைதியினருகில் வந்தார். பக்கத்தில் காவல் புரிந்த போலீஸ்காரர் அவருக்கு நிமிர்ந்து நின்று சலாம் செய்தார்.

"உனக்கு ஏதாவது தேவையாக உள்ளதா!" என்று கைதியைப் பார்த்துக் கேட்டார்.

துரைசிங்கம் அவரை ஏறிட்டு ஆச்சரியத்துடன் பார்த்தான். இவ்வுலகில் அவன்மீது இரக்கம் கொண்டவர் அந்தச் சமயத்தில் அவர் ஒருவர் தான் என்று அறிந்து புன்னகையோடு "எனக்கு ஒரு சுருட்டு வேண்டும்" என்றான்.

உடன் ஒரு போலீஸ்காரரைக் கடைக்கனுப்பி, ஒரு சுருட்டு வாங்கி வந்து துரைசிங்கத்தினிடம் கொடுத்து அதை அவன் குடிப்பதற்கும் அனுமதி கொடுத்தார். துரைசிங்கம் அந்த மனிதரின் மனிதத் தன்மையை நன்றியறிதலோடு எண்ணி, அந்தச் சின்ன விஷயத்தை அவன் உள்ளத்தின் ஆழத்தில் எழுதி வைத்ததை யாரும் அறியார்.

★

சிறைக் கம்பிகள் துரைசிங்கத்தைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. அவன் சிறையினின்று தப்பி ஓடி விட்டான். மேலூருக்குச் செல்லும் சாலையில் வந்துகொண்டிருந்தான். அந்தி நேரம். சாலையோரமாக நின்றுகொண்டிருந்த ஒரு கிழவி அவனைக் கண்டதும் உரக்க, "அப்பா! புண்ணியவானே! அதோ தெரிகிறதே மேலூர், அங்கே நான் போக வேண்டும். என் பேரன் அங்கே யிருக்கிறான். என்னால் நடக்க முடியவில்லை. என்னை எப்படியாவது அங்கு கொண்டு போய்ச் சேர்த்து விட்டால் உனக்கு ரொம்பப் புண்ணியம் உண்டு" என்று கெஞ்சினாள். துரைசிங்கத்தின் நிலையையும் அவனுடைய அவசரத்தையும் பற்றி அவளுக்கு என்ன தெரியும்! திரும்பத் திரும்பக் கெஞ்சினாள்.

துரைசிங்கம் கொஞ்சம் மூர்க்க குணமும் முரட்டுச் சுபாவமும் உள்ளவனானாலும் மனித உள்ளம் படைத்தவன். கிழவியின் நிலையைக் கவனித்தான். ஏதாவது வண்டிகள் அந்த மார்க்கம் வருவதாகவும் காணோம். நேரமோ அந்தி மயங்கும் சமயம். யோசித்து ஒரு முடிவுக்கு வந்தான். தன் முதுகில் அவளைச் சுமந்து மேலூர் கொண்டு போய்ச் சேர்த்தான். கிழவி மிகவும் நன்றியறிதலோடு அவனைப் பார்த்து, "அப்பா, உன் பெயர் என்ன?" என்று கேட்டாள்.

"பாட்டி! என் பெயரென்ன வென்று நீ அறிந்து ஆக வேண்டியது ஒன்றுமில்லை. நீ உன் பேரன் வீட்டுக்குப் போய் வா" என்று சொல்லி அங்கிருந்து புறப்பட்டு விட்டான்.




## எஸ். சாமுவேல்

"அப்பா புண்ணியவான்! நீ மகாராஜனுயிரு! நீ யார் என்று சொல்லக் கூடாதா!" என்று மீண்டும் கேட்டாள் கிழவி.

துரைசிங்கம் வேறு ஏதோ ஒரு பெயரைச் சொல்ல எண்ணினன். பின் சின்ன விஷயமானலும் பொய் எதற்கு! உண்மையே பேசுவது. அதனல் என்ன கேடு வந்தாலும் ஏற்றுக் கொள்வது என்று முடிவு செய்து, "பாட்டி! என் பெயர் துரைசிங்கம்" என்ருன். 'துரைசிங்கமா!' என்று கிழவி தன் பொக்கை வாயைத் திறந்து ஆச்சரியத்துடன் பார்க்கு முன், துரைசிங்கம் மாயமாய் மறைந்து போய் விட்டான்.

கிழவிக்கு வெடவெடத்தது. கைகால்களெல்லாம் பதறின! வீட்டுக்குச் சென்று போலீஸ் உத்தியோகம் பார்த்த தன் பேரனிடம் நடந்ததைக் கூறினள். அவள் பேரன் ரகசியமாகத் தன் அதிகாரிகளிடம் துரைசிங்கம் அந்தப் பக்கத்தில் வந்துள்ள விவரத்தைத் தெரியப் படுத்தினன். துரைசிங்கம் தப்பிச் சென்ற செய்தி எல்லாப் போலீஸ் நிலையங்களுக்கும் தந்தி மூலம் அறிவித்திருந்தபடியால்—அவனைப் பிடிக்கப் போலீஸார் தீவிரமாக முனைந்தனர்.

நன்ருக இருட்டியதும் தன் சொந்தக் கிராமமாகிய வயலூரை அடைந்தான் துரைசிங்கம். தென்னந் தோப்பை அடுத்திருந்த தன் சிறிய வீட்டை நோக்கி விரைந்து வந்தான். வீட்டுக்குள் வெளிச்சம் தெரிந்தது. ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தான். அவன் மனைவி அன்னம் அவன் இரண்டு குழந்தைகளுக்கும் சோறு போட்டுக் கொண்டிருந்தாள். கதவைத் தட்டினன்.

"யாரது!" என்று கேட்டுக் கொண்டே கதவைத் திறந்தாள் அன்னம். துரைசிங்கம்

வீட்டினுள் நுழைந்தான். அன்னம் ஆச்சரியமும் பீதியும் அடைந்தாள். அவன் பிள்ளைகள்சோற்றை வைத்து விட்டு ஓடி வந்து கட்டிக் கொண்டனர். அன்னம் அவனுக்குப் பசியடங்கப் பரிவோடு சோறு போட்டாள். அவன் சாப்பிட்டு முடிந்ததும் அவனிடம் கொஞ்ச நேரத்துக்கு முன் போலீஸ்காரர்கள் வந்து விட்டுப் போனதைத் தெரிவித்தாள். துரைசிங்கம் சற்றுச் சிந்தித்தான். கொடியில் ஒரு முடிவுக்கு வந்தான்.

"அன்னம், இனி நான் ஒரு விநாடிகூடத் தாமதிக்கக் கூடாது. இரவோடு இரவாக நான் மேல மலைக்குச் சென்று விடுகிறேன். நீ கவலைப் படாதே! தைரியமாகப் பிள்ளைகளை நல்ல முறையில் வளர்த்து வா. உனக்கு வேண்டிய பொருள் தோட்டத்து மாமரத்தடியில் உள்ளது. மேல மலைக்காடுதான் இனி என் இருப்பிடம். அங்கே தான் என் வாழ்வும் முடிவும்" என்று சொன்னான். அன்னம் கண்ணீர் விட்டுக் கலங்கினாள்.

துரைசிங்கம் அவளை அன்பு கனியத் தேற்றித் தன் நிலையை விளக்கி விட்டு, இருட்டில் வெளியேறி ஆற்றுப் பக்கம் சென்றான். ஆற்றங்கரை மண்டபத்தில் 'டார்ச்' வெளிச்சம் அடிக்கப்படுவதைக் கண்டான். போலீஸார் தன்னை அங்கே தேடுவதாக அறிந்து கொண்டு மாந்தோப்புக்குள் மறைந்து ஒரு மரத்தின் மீது ஏறி யாரும் அறியா வண்ணம் ஒளிந்து கொண்டான்.

இரவு நடுச் சாமம் கழிந்ததும் மரத்திலிருந்து கீழே இறங்கி ஆற்றை யடைந்தான். ஆற்றில் வெள்ளம் போய்க் கொண்டிருந்தது. இரவே ஆற்றைக் கடக்க எண்ணினான்.

தோணிக்கார முத்துவின் குடிசைக்கு வந்து சேர்ந்து, கதவைத் தட்டினான். முத்து விழித்துக் கொண்டு, "இதென்னடா இந்தப் போலீஸ் தொல்லை!" என்று முனகிக் கொண்டே எழுந்து வந்து கதவைத் திறந்து, கை விளக்கை உயரத் தூக்கிப் பார்த்தான். அவ்வளவுதான். 'துரைசிங்கம்' என்று அலறிப் புடைத்து விளக்கைக் கீழே போட்டு விட்டு நடுங்கினான்.



துரைசிங்கம் சிரித்துக் கொண்டே, "முத்து! நீ ஏன் இப்படிப் பயந்து சாகிறாய்! நான் என்ன ஆள் விழுங்கி பூதமா! நான் உன்னை என்ன செய்து விடுவேன்!" என்றான்.

முத்து கீழே குனிந்து விளக்கை யெடுத்தான்.

"முத்து! நான் ஆற்றின் அக்கரைக்கு உடனே செல்ல வேண்டும். இப்போது தோணி விடுவாயா!" என்று கேட்டான்.

முத்து உடனே ஒப்புக் கொண்டு, அவனைத் தோணியில் ஏற்றிக் கொண்டு வந்து சேர்ந்தான்.

"முத்து! உனக்குக் கொடுக்க என்னிடம் இப்போது ஒன்றுமில்லை. ஆனால் உன்னுடைய இந்த நன்றியை மறக்க மாட்டேன்" என்றான்.

"துரைசிங்கம்! ஆபத்துக்கு உதவாத தோணியும், அதன் துடுப்பைத் தள்ளும் கைகளும் இருந்து என்ன பிரயோஜனம்! நீ எனக்கு ஒன்றும் கொடுக்க வேண்டாம்" என்றான்.

"முத்து! தோணியும்-துடுப்பும் என்ன செய்யும்! மனிதனுக்கு மனசு வேண்டாமா! மனிதனுக்கு மனிதன் அன்பு காட்டுவதைவிட வேறு என்ன அறம் உள்ளது!" என்று சொல்லி விட்டு மேலக் காட்டை நோக்கிப் புறப்பட்டான் துரைசிங்கம். தோணிக்கார முத்து துரைசிங்கத்தின் வார்த்தைகளைக் கேட்டு, "இவனா கொள்ளைக்காரன்!" என்று எண்ணி ஆச்சரியமடைந்தான்.

*

காட்டுக்குள் ஒளிந்து காலந் தள்ளிய துரைசிங்கம் ஒரு நாள் ஒரு பாறை மீது உட்கார்ந்து சிந்திக்க ஆரம்பித்தான். அவன் பழைய கால நினைவுகள் அலை அலையாக வந்து அவனது மனத்தில் எழுந்தன. வயலை உழுது பயிரிட்டு, கிடைத்ததை வைத்துச் சுதந்திரமாக வாழ்ந்ததை எண்ணினான். தன்னுடைய அத்தை மகள் அன்னம் பருவம் எய்தியதும், அவளை வேறு ஒருவனுக்கு மணம் செய்ய நிச்சயித்ததும் இரவோடு இரவாக அவளை அழைத்துக் கொண்டு வந்து, தான் கலியாணம் செய்து கொண்டதையும் எண்ணினான். தனது மனைவியின் இரண்டாவது பிரசவமும், அதையொட்டித் தன் தாய் இறந்ததும், பெரு மழையில் தன் மண் குடிசை விழுந்ததும், பண்ணையார் கடன் கொடுக்க மறுத்ததும், தானும் . தன் மனைவியும் பட்டினி கிடந்ததும் நினைவுக்கு வந்தன. சனிக்கிழமை சந்தையினின்று திரும்பி வந்து கொண்டிருந்த சாமிச் செட்டியாரைப் பத்து ரூபாய் கடன் கேட்டதையும், அவர் கொடுக்க மறுத்ததையும், அதற்கு மறுநாள் பேயாற்றுப் பக்கம் அவரை மடக்கினதையும், அவர் வைத்திருந்த நூறு ரூபாயில் பத்து ரூபாய் தான் எடுத்துச் சென்றதும், செட்டியார் போலீசாரிடம் நூறு ரூபாய் கொள்ளை கொண்டு போனான் என்று பிராது கொடுத்ததும், போலீசார் தன்னைத் தேடி வந்ததும், அவர்களுக்குப் பயந்து ஓடிப்போன காலத்திலிருந்து தான் நடத்திய துணிகரக் கொள்ளைகளையும் எண்ணினான். தான் நடந்துகொண்ட வழி தவறான வழி என்பதை உணர்ந்தான். நெறி தவறி நடப்பது தர்மம் அல்லவென்றும் அதனாலேயே தன் வாழ்நாள்

## பிரசித்திபெற்ற பாண்ட்ஸ் க்ரீம்களின் உதவியால்
## உங்கள் வதனத்தை மென்மையாகவும்
## நிர்மலமாகவும் வைத்திருங்கள்



**ஒவ்வொருவருடைய சரும இயல்புக்கும் உகந்தவாறு இரண்டு மேன்மையான க்ரீம்கள்.**

எழிலரசியாகத் திகழ எந்தப் பெண்மணியும் ஆசைப்படுவது சகஜமே! அதை உத்தேசித்தே பாண்ட்ஸ் க்ரீம்களின் தயாரிப்பாளர்கள், உங்களுக்கு உதவியாக இதோ இரண்டு அழகு சாதனங்கள் வழங்குகின்றனர். பாண்ட்ஸ் க்ரீம்கள், வரட்சி அல்லது நசநசப்பு மிகுந்த பிரதேசங்களில் உங்கள் சருமத்தைப் பாதுகாப்பதற்கென்றே தயாரிக்கப்பட்டவை; உலர்ந்ததோ, இல்லை எண்ணைப்பசையுடையதோ ஆன எத்தகைய சருமத்திற்கும் பொருத்தமான வகையில் அமைந்தவை. உலகமுழுவதிலும் உள்ள எழில் நங்கையர்களைப் போல் நீங்களும் இந்த க்ரீம்களை பிரதிதினமும் உபயோகித்து, உங்கள் வதனத்தை புதுமலர்ப் புதுமையோங்க வைத்திருங்கள்!




உங்கள் முகப்பொலிவை பாழ்படுத்தும் வரட்சியான பிரதேசங்களில் — பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம் உங்களுக்கு தேவை. அதிலடங்கிய செழிப்பான எண்ணைகள் சருமத்திற்கு சமனமூட்டி, கடுமையான வெயில் மற்றும் வரட்சிக்காற்றிலும் அது வாடி வதங்காமல் காப்பாற்றுகின்றன.




வெப்பம், நசநசப்பு மிகுந்த பிரதேசங்களில் — அல்லது சருமம் இயற்கையாகவே எண்ணைப்பசையுடையதாலும்—பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகியுங்கள். இம்மெல்லிய க்ரீம், சருமத் துவாரங்களில் படியும் பிசுக்கையும் செத்த ஜீவாணுக்களையும் வெளியேற்றி உங்கள் மேனிக்கு சௌமியமான பாதுகாப்பு அளிக்கின்றது.

உங்களுக்கிஷ்டமான பாண்ட்ஸ் க்ரீமை நாள்தோறும் உபயோகியுங்கள். சொற்ப தினங்களில் உங்கள் வதனம் அன்றலர்ந்த மலர்போல் மென்மையாக, புதுமைப் பொலிவுடன் விளங்குவதைக் காண்பீர்கள்—உணரவும் செய்வீர்கள்!

## உலகில் எழிலரசிகள்
## உபயோகிக்கும் க்ரீம்கள்

# பாண்ட்ஸ்

கோல்ட் க்ரீம்

வானிஷிங் க்ரீம்




P. 6945

மற்றும் ஒரு சிறந்த பிஸ்கோத்து

பிரிட்டானியா...

Glaxo

கிளாக்ஸோ பிஸ்கோத்துகள்




இவை உலகப்பிரசித்தி பெற்ற பாலுணவான கிளாக்ஸோ வின் புஷ்டியான போஷாக்கு சத்து முழுவதும் அடங்கி யிருக்கும்படி தயாரிக்கப்பட்டு, உபரிவிடமின்களும் சேர்க்கப் பட்டவை.

★FBMI★
FEDERATION OF BISCUIT MANUFACTURERS OF INDIA

SBX-11 TM

பாழாகியதையும் சிந்தித்தான். மறுபடியும் நேர்மையான வாழ்க்கையை மேற்கொள்ள எண்ணினான். ஆனால் செய்த குற்றங்களுக்காகச் சர்க்கார் தண்டனையிலிருந்துதான் எப்படித் தப்ப முடியும்? கொள்ளைக்காரனாகவே இறந்து விட எண்ணினான். ஆனால் அதில் புது மாறுதலைப் புகுத்தினான்.



★

வருடங்கள் ஓடிச் சென்றன. போலீசாரால் துரைசிங்கத்தைப் பிடிக்க முடியாமற் போய் விட்டது. அதிகார வர்க்கமே தோல்வியுற்றது. அவனை உயிருடனாவது, அவன் பிணத்தை யாவது கொண்டு வரவேண்டு மென்ற உத்தரவும் போலீஸ் அதிகாரிகளுக்குக் கொடுக்கப்பட்டது.

மகேந்திரகிரி சாலை வழியாக ஒரு வண்டி போய்க்கொண்டிருந்தது. அதில் கைலாசநாதர் முக்கியமான சர்க்கார் வழக்குப் பத்திரங்களை இன்னொரு கோர்ட்டுக்கு எடுத்துக்கொண்டு, பயணம் செய்து கொண்டிருந்தார். அந்தச் சாலையின் இரு பக்கமும் வரவரக் காடு அடர்ந்திருந்தது. பொழுதும் மேற்கே நன்றாகச் சாய்ந்து விட்டது. அவர் போக வேண்டிய இடமோ இன்னும் வெகு தொலைவிலிருந்தது. வண்டிக்காரனை வேகமாக ஓட்டும்படி கட்டளை யிட்டார். அவர் சொல்லி வாய் மூடு முன்னர் வண்டிக்காரன் "எஜமான்! துரைசிங்கம் அதோ ஆல மரத்தடியில் துப்பாக்கி சகிதமாக நின்று கொண்டிருக்கிறான்" என்று சொல்லி நடுங்க ஆரம்பித்து விட்டான்.

கைலாசநாதர் திடுக்கிட்டார். அவர் உடம்பெல்லாம் 'ஜில்'லிட்டுப் போய் விட்டது.

மாடக்கண்ணு நடுச் சாலையில் வண்டியை நிறுத்தினான். "எஜமான்! அவன் நம்மை நோக்கியே வருகிறான். அப்படி யிப்படின்னு சுட்டு விடுவான்" என்று சொல்லிக்கொண்டே வண்டியினின்று குதித்து ஓடிச் சென்று விட்டான்.

கைலாசநாதர் தனியாக விடப்பட்டார். துரைசிங்கம் வண்டியின் அருகில் வந்து உள்ளே எட்டிப் பார்த்தான்.

கைலாசநாதர் பயந்து விட்டார். அவரைக் கூர்ந்து பார்த்தான் துரைசிங்கம். அவரை நன்கு அடையாளம் கண்டு கொண்டான். தன் துப்பாக்கியை வண்டியின்மீது சாத்தி விட்டு, இரு கரங்களையும் கூப்பி "எஜமான், வணக்கம்" என்றான்.

கைலாசநாதர் ஆச்சரியத்துடன் விழித்தார்.

"எஜமான்! நீங்கள் ஏன் பயப்படுகிறீர்கள்? நான் ஒருநாளும் நன்றி மறப்பவன் அல்ல. உப்பிட்டவரை உயிர் உள்ள அளவும் எண்ணுவேன். நான் உங்களுக்கு ஒரு கெடுதலும் மனத்தினாலும்கூட எண்ண மாட்டேன். உங்கள் வண்டிக்காரனைப் பாருங்கள். நம்பி வந்தவரை நட்டாற்றில் விட்டு விட்டுப்போன இந்தச் சுயநலக்காரனுக்கு நான் நல்ல பாடம் கற்பித்துக் கொடுக்கிறேன்" என்று சொல்லி மின்னல் வேகத்தில் பாய்ந்து சென்று அண்மையில் ஒரு புதருக்குள் மறைந்து கிடந்த மாடக்கண்ணுவைப் பிடித்து, உதைத்து இழுத்து வந்து, கைலாசநாதரின் முன் நிறுத்தினான்.

"எஜமான்! இனி நீங்கள் இப்படி வரக் கூடாது. சாலை நெடுக என் ஆட்கள் நிற்கிறார்கள். நல்ல காலமாக நான் இன்று இங்கே வந்தேன். தெரியாமல் என் ஆட்கள் ஏதாவது தவறு செய்து விட்டால் நான் மிகவும் வருந்தவேண்டி யிருக்கும். ஆகையால் நானே இப்பொழுது உங்களுக்குக் காவலாக கல்லோடை வரை வந்து விட்டு வருகிறேன். அதற்கப்பால் பயமில்லை" என்று துப்பாக்கியைத் தோளின்மீது வைத்துக் கொண்டு வண்டிக்குப் பின் காவல் புரிந்து வந்து கொண்டிருந்தான். கைலாசநாதர் ஆச்சரியப்பட்டு, கள்ளனின் கருணை நிறைந்த உள்ளத்தை எண்ணி மனம் பொங்கினார். கல்லோடை வந்தது. துரைசிங்கம் வண்டிக்காரனை எச்சரித்து விட்டுக் கைலாசநாதரிடம் விடைபெற வந்தான்.

கைலாசநாதர் உணர்ச்சியோடு "துரைசிங்கம்! நான் உனக்கு ஒரு உபகாரமும் செய்ததாகத் தெரியவில்லையே" என்றார்.

"எஜமான்! நான் மறக்க முடியுமா! சில வருடங்களுக்கு முன் நீதி மன்றத்தில் நீங்கள் எனக்கு ஒரு சுருட்டு வாங்கிக் கொடுக்கவில்லையா? அதை மறக்க முடியுமா!" என்றான்.

கைலாசநாதர் நினைத்துப் பார்த்தார். பின் துரைசிங்கத்தை ஏறிட்டுப் பார்த்து—அவனது பயங்கர தோற்றத்தினுள்ளே மறைந்து கிடக்கும் விசாலமான உள்ளத்தைக் கண்டு அன்பின் பெருக்கால் பொலபொலவென்று கண்ணீர் உகுத்தார்.

★

காலம் செல்லச் செல்ல அவன் மனத்திலே அதிசய மாறுதல் ஏற்பட்டு உருவாகிக் கொண்டிருந்தது. அவன் வாழ்க்கை கல்லும் முள்ளும் பயமும் நிறைந்ததா யிருந்தாலும், இயற்கையன்னை அவனுக்குச் சாந்தியளித்து நின்றாள். ஓய்ந்த நேரங்களில் பெரிய மகான்களின் சரித்திரங்களையும் அவர்கள் உபதேச மொழிகளையும் படித்துச் சிந்தித்து வந்தான். சத்தியத்தைக் கடைப்பிடித்தான். அகந்தையை அறவே ஒழித்துக் கட்டினான். அஹிம்சையைக் கைக்கொண்டு, அன்பைப் பெருக்கி அன்பு மயமாகிக் கொண்டு வந்ததை எவரும் அறியார்.

தன் அந்திய காலம் நெருங்கிக் கொண்டிருந்ததை அவன் உள்ளம் உணர்ந்தியது. தன் மனைவி மக்களைப் போய்ப் பார்த்து வர எண்ணினான். மாறு வேடத்தில் கிளம்பினான். வெகு தூரம் நடந்து

வந்ததால் அவன் களைத்துப் போனான். தன் கிராமம் வந்து சேர்ந்த பொழுது நன்றாக இருட்டி விட்டது. வீட்டுக்கு வந்தான். கதவு சாத்தியிருந்தது. மங்கிய வெளிச்சம் பலகணி வழியாகத் தெரிந்தது. ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தான். தன் மனைவி படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தாள். அவளைப் பார்த்துப் பெருமூச்சு விட்டான். அவளுக்கு எவ்விதத் தீங்கும் நேரிடா வண்ணம் காக்குமாறு இறைவனை வேண்டிக் கொண்டான். தன்னுடைய இரண்டு குமாரர்களும் இன்னொரு இடத்தில் படுத்து நித்திரை செய்து கொண்டிருந்தார்கள். அவர்கள் இப்பொழுது நன்றாக வளர்ந்து விட்டார்கள். அவர்களைப் பார்த்ததும் அவன் மனம் பொங்கியது. ஒரு காலத்தில் கல்லும் மோதி உடைந்துவிடும்படியான அவன் உள்ளம் இப்பொழுது மலர்போல மிருதுவாகி விட்டபடியால் அவனை அறியாமலே கண்ணீர் விட்டான். அவர்களைக் காக்குமாறு எல்லோருடைய இதயக் குகையிலும் மறைந்து வாசம் செய்யும் பரிபூரணனை வேண்டிக்கொண்டு அவ்விடமிருந்து கிளம்பி, நேராக ஓடக்கார மூத்துவின் வீடு நோக்கி வந்தான். அங்கு வீட்டைக் காணோம். ஆற்று வெள்ளத்தில் அது அழிந்து போயிருந்தது. ஆற்றோரம் உள்ள மண்டபத்தில் வெளிச்சம் தெரிந்தது. அங்கே ஓடக்காரனைக் கண்டான். மூத்து தன் மனைவியையும் ஐந்து பிள்ளைகளையும் கூட்டிக் கொண்டு வந்து மண்டபத்தில் வசித்துக் கொண்டிருந்தான். துரைசிங்கத்தைக் கண்டதும் மூத்து பயப்பட்டான்.

துரைசிங்கம் அவனை அன்போடு கடிந்து கொண்டு, "நீ ஏன் பயப்படுகிறாய்! மனிதனுக்கு மனிதன் ஏன் பயப்பட வேண்டும்!" என்றான்.

மூத்து துரைசிங்கத்தின் பசியைப் போக்கினான். அவன் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் பொழுதே, மூத்து தன் கஷ்டத்தையும் கவலையையும் துரைசிங்கத்தினிடம் சொன்னான்.

துரைசிங்கம் அவ்வோடக்காரனுக்கு இப்பொழுது எப்படி உதவி செய்யலாம் என்று யோசித்து, ஒரு முடிவுக்கு வந்தான்.

தன்னைப் பிடித்துக் கொடுப்பவர்களுக்கு, அல்லது பிடிபடுவதற்குத் துப்புத் தெரிவிப்பவர்களுக்குச் சர்க்கார் ரூபாய் 2000 கொடுப்பதாக விளம்பரப்படுத்தியது ஞாபகத்துக்கு வந்தது.

மறு தினம் ஜில்லா போலீஸ் அதிகாரியின் முன் ஒரு வேடுவன் வந்து நின்றான்.

"நீ யார்!" என்றார் அதிகாரி.

"எஜமான்! நான் ஒரு வேடன். துரைசிங்கம் இராக் காலங்களில் இப்போ எங்கே படுத்துக் கொள்ளுகிறான் என்ற துப்பு எனக்குத் தெரியும்."

அவர் ஆச்சரியத்துடன் "உனக்குத் தெரியுமா!" என்று கேட்டார்.

"நான் சொன்னால் ரூ. 2000 எனக்கு வெகுமதியாகக் கிடைக்குமா!" என்றான் வேடன்.

"உன் துப்புச் சரியாயிருந்து அவன் பிடிபட்டால் நிச்சயமாகக் கிடைக்கும்."

"எஜமான்! அவன் நிச்சயமாக அகப்பட்டு விடுவான். இரவு நடுச் சாமம் கழித்துத்தான் அங்கே வருவான். படுத்துத் தூங்கும்பொழுது அவன் மார்பில் தன் துப்பாக்கியைக் கிடத்தியிருப்பான். நீங்கள் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்" என்றான் வேடன்.

"அவன் எங்கே இப்போ வந்து இரவைக் கழிக்கிறான்!" என்று கேட்டார் போலீஸ் அதிகாரி.

"எஜமான் நாவலூர் ஆற்றங் கரையில் இருக்கும் அரசமரத்து மண்டபத்திலேதான்" என்று பதில் சொன்னான்.

"சரி, உன் பெயர் என்ன!"

"காட்டுப் புலி"

"உன் ஊர் என்ன!"

"மேல மலை."

எல்லாவற்றையும் கவனமாகக் குறித்துக் கொண்டார் அதிகாரி.

"எஜமான் ஒரு விண்ணப்பம். எனக்குக் கிடைக்க வேண்டிய ரூபாயை வேறு ஒருவருக்குச் சேரும்படி நான் எழுதி வைக்கலாமா!" என்றான் வேடன்.

"எழுதி வைத்தால் கொடுக்கிறோம்" என்றார்.

அதை வயலூர் ஓடக்காரன் மூத்துவுக்குச் சேரும்படி விவரமாக எழுதி வைத்துத் தன்னுடைய கையொப்பத்தையும் இட்டான்.

"நீ ஏன் அவனுக்கு எழுதி வைக்கிறாய்!" என்று அவர் கேட்டார்.

"எஜமான், அது என் சொந்த விஷயம். நான் பட்ட கடன்" என்றான்.

"எஜமான் இன்னும் இரண்டு—மூன்று நாட்களுக்குள் வர வேண்டும். இல்லாவிட்டால் அவன் வேறிடம் போய்விடுவான்" என்று சொல்லிவிட்டு வேடுவன் சென்று விட்டான். ஜில்லா அதிகாரி தனக்குக் கீழ்ப்பட்ட அதிகாரிகளுக்கு உடனே தந்தி மூலம் உத்தரவு அனுப்பி வைத்தார்.

★

துரைசிங்கம் ஓடக்கார மூத்துவின் வீட்டுக்கு வந்தான். அவனிடம் விடைபெற்றுக்கொண்டான்.

"மூத்து! சர்க்கார் எனக்கு இரண்டாயிரம் ரூபாய் தரவேண்டும். நான் அதை உனக்கு எழுதி வைத்திருக்கிறேன். நான் இனி அதிக நாள் பிழைத்திருக்க மாட்டேன். சர்க்கார் கொடுக்க முன் வந்தால் அதை வாங்கிக் கொள்" என்றான்.

ஓடக்காரன் விழித்தான். "துரைசிங்கம்! எனக்கு ஒன்றும் வேண்டாம்!" என்றான் மூத்து.

"இது என்னுடைய கடைசி விருப்பம். நீ தடை செய்யாதே" என்றான் துரைசிங்கம்.

மேலும் அவனைப் பார்த்து "மூத்து! எனக்கு மற்றொரு பெயர்—காட்டுப் புலி. என்னுடைய ஊர்ப் பெயர் மேலமலை. அதிகாரிகள் இந்தமாதிரி தான் கேட்பார்கள். கேட்டால் 'காட்டுப் புலி ஒரு வேடன். அவன் என் சொந்தக்காரன். அவனுக்கு மேலமலை ஊர்—' என்று சொல். ஆனால், துரைசிங்கம் என்ற பெயரை மட்டும் எந்தச் சமயத்திலும் சொல்லி விடாதே" என்று எச்சரித்து விட்டுப் போய் விட்டான்.

★

நள்ளிரவு. போலீசார் நாவலூர் ஆற்றங்கரை மண்டபத்தைச் சூழ்ந்தனர். "டார்ச்" வெளிச்சம் மேலே பட்டதும்—விழித்துக் கொண்டான் துரைசிங்கம். எங்கேயோ ஒரு கூகை அலறியது. எழுந்து நின்றான் துரைசிங்கம். அவனது ஆஜானுபாகுவான உருவத்தைக் கண்டதுமே, போலீசாரும் அதிகாரிகளும் பயந்தனர். துப்பாக்கியிலிருந்து சத்தம் கிளம்பியது. மூன்று குண்டுகள் துரைசிங்கம் மார்பில் பாய்ந்தன. துரைசிங்கம் 'ராமா! ராமா!' என்று கீழே விழுந்தான்.

நாடெங்கும் துரைசிங்கம் சுடப்பட்ட செய்தி பரவியது. கைலாசநாதர் செய்தியைக் கேட்டதும் தன்மீது குண்டு பாய்ந்தது போன்ற வேதனையடைந்து கண்ணீர் விட்டார்.

தோணிக்கரை மூத்து மனமுருகி அழுதான்.

---




வெகு மும்மரமாக எழுதிக் கொண்டிருந்த பொழுது கடிகாரத்தில் மணி "விர்" என்று ஒன்பதரை மணியை அறிவித்து என் சிந்தனை யோட்டத்தைத் தடை செய்தது. வெளியே நோக்கினேன். என்ன ஆச்சரியம். அதே மனிதர் அதே யிடத்தில் தோன்றினார்.

ஒருநாள் இரண்டு நாள் இம்மாதிரி ஒரே யிடத்தில் தோன்றுவது சகஜம். ஆனால் நான் அந்த வீட்டிற்குக் குடி வந்ததிலிருந்து பார்க்கிறேன், அந்த மனிதர் அதே ஒன்பதரை மணிக்குச் சரியாக அந்தச் சிறிய கல் பாலத்தைக் கடந்து கொண்டிருப்பார்.

இவ்வளவு கணக்காக இவருக்கு எப்படி முடிகிறது, இவரிடம் ஏதோ அபூர்வ சக்திதான் இருக்கிறது என்று நினைத்துக் கொண்டேன்.

அந்தச் சமயம் கமலம் உள்ளே வந்தாள்.

"கமலு, அதோ போகிறாரே அவர் யார் என்று உனக்குத் தெரியுமா……!" என்று கேட்டேன்.

"ஏன்! கல்யாணி மாமியின் அகத்துக்காரர். பாவம், மாமி ரொம்பத் தங்கமானவள். நாலு சின்னஞ்சிறு குழந்தைகளை விட்டு விட்டுப் போய் விட்டாள். என்ன, திடீரென்று அவர்மீது உங்கள் கவனம்!" என்று கேட்டாள் கமலம்.

"ஏன்! அவரிடம் ஒரு தனி விசேஷம் இருப்பதினால் தான்."

"அதென்னவோ……!"

"அதைச் சொல்கிறேன். அதற்கு முன்னால் நான் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்லு. உன்னால் ஒரு நாளாவது சரியாகப்பத்து மணிக்கு நான் சாப்பிட இலைபோட முடிகிறதா…!"

"இதென்ன கேள்வி! சம்சாரி வீட்டிலே கொஞ்சம் முன்னே பின்னேதான் நடக்கும். இதற்கெல்லாம் குற்றம் கண்டு பிடித்தால்…!"

"வந்தாயா வழிக்கு! உனக்கு இந்தச் சிறு காரியம்கூடக் குறிப்பிட்ட நேரத்தில் செய்ய முடியவில்லை என்பதை ஒப்புக்கொள். ஆனால் நீ நான் தவறாமல் அதே பத்து மணிக்கு இலை போடுகிறாயென்று வைத்துக்கொள். அவ்வாறு செய்வது ஆச்சரியமில்லையா! அதைத்தான் சொல்லிக் கொண்டு வருகிறேன். சற்று முன் காண்பித்தேனே ஒருவரை, அவரைத் தினந்தோறும் நான் பார்க்கிறேன்; ஒன்பதரை மணி அடிக்க வேண்டியதுதான். அந்தக் கல் பாலத்தில் தோன்றுகிறார். ஒருநாளா இரண்டு நாளா! நான் கவனித்து வரும் ஒரு மாத காலமாக இப்படியேதான் போய்க் கொண்டிருக்கிறார். எப்படித்தான் அவருக்கு இது முடிகிறதோ" என்றேன்.

"அவரையே போய்க் கேளுங்கள்" என்று சொல்லி விட்டுப் போய் விட்டாள் கமலம்.

அவரைப் பற்றி அறிய ஆவல் தூண்டியது. ஆகவே அன்று சாயங்காலம் அவர் வரவை எதிர்பார்த்துக் கொண்டு வீட்டின் வெளிப்புறத்தில் நின்று கொண்டிருந்தேன்.

அவர் சற்று நேரத்துக்கெல்லாம் அந்தத் தெரு முனையில் வந்து கொண்டிருந்தார். அவர் சமீபத்தில் வரவும் நான் அவரை நெருங்கினேன்.

என்னைக் கண்டதும் அவர் முகமலர்ச்சியுடன் வரவேற்றார். பல நாட்கள் பழகியவரைப் போல மனம் விட்டுப் பேச ஆரம்பித்து விட்டார்.

"வாருங்கள், ஸார்! சௌக்கியமா...! வீட்டில் எல்லோரும் சௌக்கியமா! புது வீடு எப்படியிருக்கிறது! இடவசதி ஜலவசதி யிருக்கின்றதா!" என்று கேள்விகளை அடுக்கிக் கொண்டே சென்றார். நானும் சுருக்கமாகப் பதிலளித்துக் கொண்டே அவரைத் தொடர்ந்து அவர் வீட்டுக்குப் போனேன்.

வாசற்புறத்திலிருந்த இரண்டு பெண் குழந்தைகள் "அப்பா!" என்று ஓடி வந்து அவரைக் கட்டிக் கொண்டன.

"சங்கரன், வெங்கிட்டுவெல்லாம் எங்கே போயிருக்கிறார்கள்!" என்று விசாரித்து, என்னையும் உள்ளே அழைத்துச் சென்றார் பெரியவர்.

பல ஆண்டுக் குடுத்தனங்களைக் கொண்ட அந்த வீட்டின் கடைசி அறையை அடைந்தோம். ஒரு மடக்கு நாற்காலியைப் பிரித்து என் முன் போட்டு உட்காரச் சொன்னார். பிறகு ஒரு குடத்தை எடுத்துக் கொண்டு கொல்லைப்புறம் சென்றார்.

என் கண்கள் அந்த அறையை ஆராய்ந்தன. சாமான்கள் வெகு ஒழுங்காக வைக்கப்பட்டிருந்தன. வீணே அனாவசியமாக ஒரு சாமான் இல்லை. வெகு சுத்தமாகப் பெருக்கப்பட்டு இருந்தது.

குப்புசாமி அய்யர் குடத்தில் ஜலத்தோடு திரும்பினார். அடுப்பைப் பற்ற வைத்து ஜலத்தை வைத்தார். பில்டரில் காப்பிப் பொடியைப் போட்டார்.

"முதல் முதலாக இங்கு வருகிறீர்கள். டிபன் செய்து கொடுக்கக்கூட முடியவில்லை."

"அதைப்பற்றி நீங்கள் அனாவசியமாக வருந்தாதீர்கள். நீங்கள் ஒண்டியாக, வீட்டு வேலைகளையும் கவனித்துக் கொண்டு குழந்தைகளையும் எப்படிப் பார்த்துக் கொண்டு வருகிறீர்களோ!"

"கடமை என்னவென்று அறிந்து கொள்வதுதான் அதிசயம். கடமையைச் செலுத்துவதுகூட அவ்வளவு ஆச்சரியமில்லை. அவள் சின்னஞ் சிறு குழந்தைகளை என் பொறுப்பில் தள்ளி விட்டுக் கண்ணை மூடி விட்டாள். நான் எவ்வளவு கண்ணுக்குக் கண்ணாகப் பாதுகாத்து வந்தாலும் தாயாரின் அனுசரணையே வேறுதான். அதற்கீடு ஒன்றுமில்லை. ஏதோ அவள் இன்னும் கொஞ்ச நாள் இருந்து இந்தக் குழந்தைகளையும் ஒருவன் கையில் பிடித்துக் கொடுத்து விட்டுப் போயிருக்கலாம். பார்க்கப் போனால் இதெல்லாம் வீண் அஞ்ஞானம்" என்றார் பெரியவர்.

"உங்களிடம் வெகு நாட்களாக ஒரு விஷயம் கேட்க வேண்டுமென்கிற ஆவல்..."

"ஆகா, தாராளமாகக் கேளுங்கள்."

"நீங்கள் எப்படி அவ்வளவு கணக்காக ஒன்பதரை மணிக்கு அந்தக் கல் பாலத்தை அடைகிறீர்கள்!" என்று கேட்டேன்.

"அதெல்லாம் பழக்கம்தான் காரணம். அப்பழக்கத்தை முறைக்குக் கொண்டு வருவது மிகவும் கடினம் தான். பெரும்பான்மையோருக்குத் திட்டப்படி நடக்க முடியாதுதான். காலை நாலரை மணிக்கு எழுந்து, ஆற்றங்கரைக்குச் சென்று ஸ்நானம் செய்து விட்டு, ஐந்தரை மணிக்கு வீடு திரும்புவேன். ஐந்தே முக்கால் மணியிலிருந்து ஆறரை மணி வரை பூஜை. அதன் பிறகு ஏழு மணிக்குச் சமையல் ஆரம்பித்தால் எட்டரை மணிக்கு முடிந்துவிடும். குழந்தைகளுக்கும் சாதம் போட்டு விட்டு மத்தியானத்திற்கும் வைத்து விட்டுச் சரியாக ஒன்பது இருபத்தைந்துக்கு வீட்டை விட்டுக் கிளம்பி ஒன்பதே முக்காலுக்கு ஆபீஸுக்குப் போய் விடுவேன். எல்லாம் வயது வந்த காலத்தில் கஷ்டம்தான். இந்த இரண்டு குழந்தைகளையும் உத்தேசித்துத்தான் இன்னும் வேலை பார்க்க வேண்டியிருக்கிறது......"

"ஆமாம்...... பையனுவது, பெரியவனுக இருந்தால் உத்தியோகத்திற்குச் சென்றிருக்கலாம்."

"ஆமாம்.....பெரிய பிள்ளை இருந்தான். பிள்ளை இருந்து என்ன பயன்! அவனுல் நமக்கென்ன!"

சிறிது நேரம் சிந்தனையிலாழ்ந்தார். அவர் நெற்றி நரம்புகள் தடித்தன. முகத்தில் அரும்பரும்பாக வியர்வை தோன்றியது. அவர் முகத்தில் கலக்க மேற்பட்டது. நான் அவரை இடைமறிக்க விரும்பவில்லை. சிறிது நேரங் கழிந்தது.

"பெரிய பிள்ளை......பெரிய பிள்ளை......அவனை ஏன் நினைக்க வேண்டும். என்னுடைய புத்திமதிகளை லக்ஷியம் செய்யாமல் திரிந்தான். ஆதிப் பழக்கம்தானே பிற்காலத்திலும் வரும்! நான் கொஞ்ச நஞ்சமிருந்த நிலத்தை விலை பேசிக் கடைசியாகப் பணம்கட்ட வேண்டிய முதல்தினம் சிரமப்பட்டு அவனிடம் பணத்தைக் கொடுக்கும் போது என்ன சொன்னுன் தெரியுமா! அதை நினைத்தால் இன்னும் என் நெஞ்சு குமுறுகிறது. 'உங்களை நம்பினுல் நடுக் காட்டில் நின்றாற்போலத்தான். நாளைக்குள் * பணம் கட்ட வேண்டும். நான் என் சிநேகிதனிடமிருந்து பணம் கடன் வாங்கிக் கட்டி விட்டேன்' என்றான். எவ்வளவு அவமதிப்பும் துணிச்சலும் இருக்க வேண்டும்! அப்படி என்மீது மதிப்பும் நம்பிக்கையும் இல்லாதவன் வெளியே போய் விடு, உன் முகத்தில் நான் விழிக்க விரும்பவில்லை என்று கையிலிருந்த ரூபாயை அவன் முகத்தில் வீசி யெறிந்து விட்டு உள்ளே சென்றேன். அன்று வீட்டை விட்டு வெளியேறினவன்தான். வருடம் இருபது ஆகி விட்டது. அவனுக்கும் எனக்கும் உள்ள தொடர்பு, பாசம், பந்தம் எல்லாம் நீங்கி விட்டது" என்றார்.

"அப்படிச் சொல்லாதீர்கள். எல்லாம் கால வித்தியாசம். அவன் தவறை உணர்ந்து உங்களிடம் வரமாட்டானென்பது என்ன நிச்சயம்!"

"அவன் வரட்டும் வராமலிருக்கட்டும். நான் அவன் உதவியை எதிர்பார்க்கவில்லை. என் சக்தியிருக்கு மட்டும் என் குழந்தைகளுக்கு உழைத்து முன்னுக்குக் கொண்டு வருவது என் கடமை" என்றார் பெரியவர்.

நான் அவரிடம் விடை பெற்றுக் கொண்டு வந்து சேர்ந்தேன்.

அதிலிருந்து எங்களுடைய சிநேகம் வளரலாயிற்று. அடிக்கடி அவர் வீட்டுக்குச் சென்று வருவேன். அவர் மீது அனுதாபம் நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டே வந்தது. அந்தக் குழந்தைகளின் பிற்காலத்தைப் பற்றிய விசாரம் நாளுக்கு நாள் என் மனத்தில் குடி கொண்டது. பாவம், வயதாகி, உயிரைக் கொக்கியில் பிடித்துக் கொண்டிருக்கும் அவர், திடீரென்று...... அதற்கு மேல் என்னுல் நினைக்க முடியவில்லை. என் மனத்தில் என்னவோ வேதனை செய்தது.

ஓரிரண்டாண்டுகள் கழிந்தன. குப்புசாமி அய்யர் குழந்தைகள் என் வீட்டுக்கு அடிக்கடி வந்து போய்க் கொண்டிருந்தனர். அப்படியிருந்தும் என் வீட்டில் சாப்பிடக் கூடாது என்று நிபந்தனை போட்டிருந்தார் அவர். அவர் நோக்கம் எனக்குச் சுருக்கென்று இருந்த போதிலும் அவர் ஒரு லட்சிய புருஷர் என்பதற்காக நான் அதை அதிகமாகப் பாராட்டவில்லை.

ஒரு நாள் ஒன்பதரை மணி அடித்ததும் குப்புசாமி அய்யரைக் காணும். கடிகாரம்தான் விரைவாகப் போகிறதா என்று சந்தேகித்தேன். மணி ஒன்பதே முக்கால், பத்து ஆகிவிட்டது. என்னவோ, விசேஷம் இருக்கிறது. சாயங்காலம்

# நீங்கள் இன்று புரோடெக்ஸ் உபயோகித்தீர்களா?



நீங்கள் நாள் முழுதும் புதுமையுடனும் வாசனையுடனும் இருக்க, உயர்ந்த, புதிய புரோடெக்ஸ் ஆல்-பர்பஸ் டாய்லட் பவுடர். மென்மையும், நறுமணமும் சேர்ந்த புரோடெக்ஸ் குடும்ப முழுதுக்கும் வெப்பத்தில் குளுமையும் இனிமையும் தருகிறது.




ஸ்நானத்துக்குப் பின்
வாசனைப் பூஷணம். ஈரத்தை
உறிஞ்சி புதுமை தருகிறது.





குளுமை! குதூகலம்!
கோடையின் கொடுமையில்

நேர்த்தியும் மென்மை!
யும்-குழந்தைக்கு ஏற்றது.





மிக எடுப்பானது
உங்கள் வதனத்தை அழகு
படுத்தும் பவுடர்.

## புரோடெக்ஸ் ஆல் பர்பஸ் டாய்லட் பவுடர்

கால்கேட்டின் புதிய
சிறந்த தயாரிப்பு



ஜீவகளையுடனிருப்பதில்
பெருமிதம்—
பயங்கரமான
**முதுகு வலி**
இப்பொழுது அறவே
ஒழிந்து விட்டதால்

"தினசரி தவருமல் "க்ருஷன்" உட்கொண்டு வந்ததால் வலிகளினின்று நான் பெற்றுள்ள நிவாரணம் மிகவும் போற்றத்தக்கது என்பதை அவசியம் உங்களுக்குத் தெரிவிக்க வேண்டியிருக்கிறது. பல வருஷங்களாக முதுகு வலியால் அவஸ்தைப் பட்டதில், என்னால் நிமிர்ந்து கூடப் பார்க்கமாட்டாத அளவுக்கு நோயின் பொருட்டு விடுமுறை பெற்று வந்தேன். பல விதமான மின்சார சிகிச்சை, நிவாரண - தேகாப்பியாசங்கள் முதலியன செய்தும், "க்ருஷன்" மார்க்கத்தைப் பின்பற்றும் வரை அவ்வலிகள் இருந்து கொண்டே இருந்தன. இப்பொழுது நான் முற்றிலும் புதிய மனிதனாக விருப்பதாக உணர்கிறேன்."—W. B.

தீராத முதுகு வலிக்கு மூலகாரணம் உட்புற அவயவ சம்பந்தமானது. மூத்திர கோசங்கள் கழிவுப் பொருள்களை உடலிலிருந்து சரிவர வெளியேற்றாவிடில் விஷ அமிலங்கள் ரத்தத்தில் ஊறிக் கலந்து முதுகு வலியை உண்டாக்குகின்றன. க்ருஷனிலுள்ள ஆறுவித முக்ய உறுப்புக்கள் மந்தித்த மூத்திர கோசங்களை மெதுவாக ஊக்கி நன்கு இயங்கச் செய்வித்து ரத்த ஓட்டத்திலுள்ள அசுத்தங்களை துரிதமாக சுத்திகரிக்கின்றன. தினசரி தவருமல் கொஞ்சம் "க்ருஷன்" உட்கொண்டு வந்தால் முதுகு வலி ஒரு நாளும் திரும்பி வராமல் ஒழிந்து போகும்.

**"க்ருஷன்"** உங்கள் ஆரோக்கியத்திற்கும் ஆனந்தத்திற்கும் உதவுகிறது

---

பெர்ல் பார்லி *என்று கூறுவதற்கு முன்பாக*

**ராபின்ஸன்ஸ்**

*என்று சொல்லிக் கேளுங்கள்*

எல்லா உபயோகங்களுக்கும்
சிறந்தது




அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிட்.,
த. பெ. 664, கல்கத்தா.



ARFK 4 TM.



விதியின் விளையாட்டை யாரே அறிவார். "எதிர்பாராதது" என்ற தமிழ்ப் படத்தில் இப்படி ஒரு காட்சி. தனயனை ரிக்ஷாவில் வைத்து தந்தையே இழுத்துக் கொண்டு போகிறார்.

போய் விசாரிக்க வேண்டுமென்று அன்று மாலை அவர் வீட்டை அடைந்தேன். நான் கண்ட காட்சி என்னைத் தூக்கி வாரிப் போட்டது.

குப்புசாமி அய்யர் படுத்துக் கொண்டிருந்தார். கனமான போர்வை போர்த்தப் பட்டிருந்தது. உடம்பைத் தொட்டுப் பார்த்தேன். கை வைக்க முடியவில்லை. அவ்வளவு கொதித்தது.

வெங்கிட்டு அடுப்பில் சாதம் சமைத்துக் கொண்டிருந்தான். லீலாவும், வேதாவும் புளியங் கொட்டையை வைத்துக் கொண்டு அவர் தலைமாட்டில் விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

என் இருதயத்தை இறுக்கிப் பிழிந்தது. இப்படிப் படுத்துக் கொண்டு விட்டாரே!

ஏதாவது அசந்தர்ப்பமாக நேர்ந்து விட்டால் குழந்தைகளின் கதி என்ன!

"வெங்கிட்டு, அப்பாவுக்கு உடம்பு சரியில்லை என்றால் டாக்டரைக் கூப்பிட்டுக் காண்பிக்க வேண்டாமா? இல்லாவிட்டால் என்னிடம் ஒரு வார்த்தை சொல்லக் கூடாதா!" என்றேன் நான். "நான் கேட்டுப் பார்த்தேன். டாக்டரை அழைத்துக் கொண்டு வர வேண்டாமென்று சொல்லி விட்டார், மாமா!"

"அதுதான் கிடக்கட்டும். நீங்கள் சமையல் செய்து கஷ்டப்படுவதா. எங்கள் வீட்டுக்கு வந்து தினம் சாப்பிட்டு விட்டு, அப்பாவுக்கும் கஞ்சி வாங்கிக் கொண்டு போகக் கூடாதா!"

"ஹூம்... ஹூம்" என்று தலையசைத்த குப்புசாமி அய்யர், "பிறத்தியாருக்கு வீண் தொந்தரவு கொடுக்கக் கூடாது" என்றார்.

"சாப்பாடு கிடக்கட்டும். வைத்தியமாவது செய்து கொள்ளக் கூடாதா!" என்றேன்.

அவர் சிரித்தார். கைகளைக் கூப்பிக் கொண்டு உயரே தூக்கினார். "எனக்கு அவர் அழைப்பு வந்து விட்டது. கவலைப்படாதீர்கள். எல்லாம் அவர் கவனித்துக் கொள்கிறார்" என்றார்.

"நான் டாக்டரை அழைத்துக் கொண்டுதான் வரப்போகிறேன்" என்றேன்.

"வேண்டாம், வேண்டாம்" என்று சொல்லி என்னை நிறுத்தி விட்டார். நான் தோல்வியடைந்து வீட்டிற்குத் திரும்பினேன்.

அதன் பிறகு இரண்டு நாட்களில் அவர் நினைவு தெறி விட்டது. குழந்தைகள் பயந்தார்கள். நான் என் தாயாரை அவர் வீட்டிற்கனுப்பிச் சமயல் செய்து போடும்படி ஏற்பாடு செய்து, டாக்டரையும் அழைத்துக் காண்பித்தேன்.

டாக்டர் சோதனை செய்தார். "ரொம்பவும் சிக்கலாக இருக்கிறது. முக்கால்வாசி நம்பிக்கையில்லை. எதற்கும் பார்க்கிறேன்" என்றார். என் கண்கள்முன் துயரம் படிந்த குழந்தைகளின் முகங்கள் தோன்றி மறைந்தன.

நினைத்ததுபோலவே ஆகிவிட்டது. ஒருநாள் இரவு இரண்டு மணிக்கு வாசற் கதவை யாரோ தட்ட, நான் திறந்தேன். வெங்கிட்டு அழுது கொண்டு நிற்பதைப் பார்த்தேன். அவனை அழைத்துக் கொண்டு பறந்தேன்.

துக்கம் என்னை மீறிவிட்டது. விக்கி விக்கி அழுதேன். குழந்தைகள் கதறினர். குப்புசாமி அய்யர் கண்களை மூடி விட்டார். அவர் முகத்தில் ஒரு விசனக் குறிகூடத் தென்படவில்லை. வெகு அமைதியாகத் தோன்றியது. அவர் போய் விட்டார். அவர் லட்சியம் நிலைக்க வேண்டும்.

நான் எடுத்துக் கொண்ட விசேஷ சிரத்தையில், அவர் காரியம் நடந்து விட்டது. குழந்தைகளை யார் எப்படிப் பார்த்துக் கொள்வது!

எனக்குத் தெரிந்த பிரமுகர்களை அணுகினேன். அவர்களும் உதவிசெய்ய முன் வந்தார்கள். அதன்படி அவர்கள் ஒவ்வொருவர் வீட்டிலும் ஒவ்வொரு மாதம் சாப்பிட வேண்டியது. வெங்கிட்டு, சங்கர் படிப்புக்காக வேண்டிய பணமும் திரட்டி வைத்தேன். எல்லாக் குழந்தைகளும் என் வீட்டில்தான் இருந்தார்கள்.

ஒரு வருடம் ஓடி மறைந்து விட்டது. நேற்றுத் தான் கல்பாலத்தினருகில் பார்த்தது போலிருக்கிறது. இவ்வளவு சீக்கிரமாக நாட்கள் ஓடி மறைந்து விட்டன......!

கடவுளின் கருணை இனிமேல்தான் எப்படியிருக்கப் போகிறதென்ற கவலையாயிருந்தது. பெண் குழந்தைகள் ஆயிற்றே, வருடங்கள் ஓடி விடாதா, அதன் பிறகு அவர்களுக்கு மணம் முடிக்க வேண்டாமா! எனக்குப் பெண் குழந்தைகள் இருந்து, கலியாணத்துக்கு நின்றாலும் அவ்வளவு வேதனையடைந்திருக்க மாட்டேன்.

ஒருநாள் நாராயணசாமி ஐயர் என்னை மார்க்கெட்டில் சந்தித்தார்.

"ஸார், ஒரு விஷயம். புதிதாக ஒரு ஆபீஸர் வந்திருக்கிறாரய்யா எங்களுக்கு. அவர் வந்து ஹெட் கிளார்க் நீலகண்ட சாஸ்திரியிடம், குப்புசாமி ஐயரைப் பற்றி விசாரித்தாராம். அவர் வந்து குப்புசாமி ஐயர் தவறி விட்டதாகவும் அவருடைய குழந்தைகள் உங்கள் பாதுகாப்பில் இருப்பதாகவும் சொன்னாராம்!"

"அவருக்குத் தெரிந்தவராக இருந்திருக்கலாம். அதனுலென்ன !" என்றேன்.

"உங்களைப் பற்றியும், உங்கள் விலாசத்தையும் கூடக் கேட்டாராம். ஒரு வேளை உங்களைப் பார்க்க வேண்டுமென்ற விருப்பமோ என்னவோ தெரிய வில்லை" என்ருர்.

"அதற்கென்ன தாராளமாக வந்துதான் பார்க்கட்டுமே !" என்றேன்.

ஒருநாள் இரவு எட்டரை மணி. வாசற்புற அறையில் உட்கார்ந்து கொண்டு, ஆபீஸ் வேலையைக் கவனித்துக் கொண்டிருந்தேன்.

'சர்' என்று என் வீட்டினெதிரில் ஒரு கார் வந்து நிற்க, ஒரு நடுத்தரமான வாலிபர் இறங்கி, வாசலில் நின்று கொண்டிருந்த என் அத்திம்பேரிடம் "ஆத்மநாதன் இங்குதான் இருக்கிருரா!" என்று விசாரித்தார். அத்திம்பேர் அவரை அழைத்துக் கொண்டு என் அறைக்கு வந்தார்.

வந்தவரை உபசரித்து உட்காரச் செய்தேன்.

வெங்கிட்டு, சங்கர் எல்லோரும் பக்கத்தறைக்குச் சென்றுவிட்டனர்.

"தாங்கள் யாரென்பதை அறிய மிக ஆவலாயிருக்கிறேன்" என்றேன்.

"நான் வருமான வரி அலுவலகத்தில் ஒரு அதிகாரி. இங்கு மாற்றலாகி இரண்டு மாதங்களாயின. ஆமாம், ஒரு விஷயத்தைப் பற்றிக் கேட்க வேண்டுமென்றுதான் உங்களைக் காண வந்தேன் !" என்ருர் வந்தவர்.

"தாராளமாகக் கேட்கலாம் !"

"வந்து...குப்புசாமி ஐயர் என்ற பெயருடைய ஒருவர், கூட்டுறவு நிதியில் பொருளாளராக...... இருந்தாரென்ற விஷயம் உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். சென்ற வருடம் திடீரென்று தவறி விட்டதாகவும், அவர் குழந்தைகள் தங்களுடைய வீட்டில் இருந்து வருவதாகவும் கேள்விப்பட்டுப் பார்த்து விட்டுப் போகலாமென்று வந்தேன்..."

' அவரை எனக்கு நன்ருகத் தெரியும். இதோ அவர் குழந்தைகளை அழைத்து வருகிறேன்" என்று சொல்லி விட்டு வெங்கிட்டு, சங்கர், லீலு, வேதா எல்லாரையும் அழைத்துக் கொண்டு வந்து அவர் முன் நிறுத்தினேன்.

"இந்தக் குழந்தைகளை விட்டுவிட்டுக் கண் மூடி விட்டார். தம் நினைவு இருக்கு மட்டும் தம் லட்சியத்தைக் கொண்டு செலுத்தினுர். கெஞ்சினேன், மன்ருடினேன், கோபித்தேன், கடிந்தேன். ஆனல் ஒரு வேளைகூட இக் குழந்தைகளை என் வீட்டில் சாப்பிட அனுமதிக்கவில்லை. அதுதான் போகட்டும். வைத்தியமாவது செய்து கொண்டாரா ! அதுவுமில்லை. அவர் நினைவு சிதறியவுடன் நான் டாக்டரை அழைத்து காண்பித்தேன். ஆனல் காலன் அவரை அழைத்துக் கொண்டான்."

"அவர் போய்விட்டார். குழந்தைகளை யார் கவனிப்பது..." நாலைந்து பெரிய மனிதர்களை அணுகினேன். அவர்களும் சம்மதித்தார்கள். அவர்கள் சாப்பாட்டிற்கும் பள்ளிக்கூடப் படிப்பிற்கும் வேண்டிய பணமும் இரட்டினேன்.

"இதோ இந்தச் சிறிய பெண் குழந்தைகள். வருடங்கள் பறந்துவிடும். அவர்களுக்கும் நான் மூயற்சி செய்து, எல்லோர் தயவின் பேரிலும் நம்மால் ஆவது ஒன்றுமில்லை ..."

நான் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே அவர் உள்ளத் துடிப்பைக் கவனித்தேன். கண்கள் நீரைப் பெருக்கின. இரண்டு மூன்று விம்மல் தொடர்ந்து கேட்டது. அவரைப் பற்றிக் கேட்டால் யாருக்குத் தான் துக்கம் பெருகாது !

"ஸார்" என்று ஆரம்பித்தார். "அவர் வரலாற்றைக் கேட்க என் மனம் குமுறுகிறது. சென்ற வருடம் இந்த மாற்றுதல் கிடைத்திருந்தால் அவரை ஒரு தரமாவது பார்த்திருக்கலாம். அவர் சாயலைத் தாங்கிய இந்தப் பையன்கள், பாக்கியம் செய்தவர்கள். சார், என் வேதனை எல்லை மீறுகிறது. உங்கள் தாராளமான, மூற்போக்கான மனப்பான்மையைக் கண்டு மிகவும் பாராட்டுகிறேன். இன்று உங்களையும், இக் குழந்தைகளையும் கண்டது, சிறிது ஆறுதலாக இருக்கிறது. நான் கூடிய சீக்கிரம் உங்களை மறுபடி காணுவேன். "குழந்தைகளா, நான் யாரென்று உங்களுக்குத் தெரியாது. வெங்கிட்டு, சங்கர், லீலு, வேதா நான் வருகிறேன்" என்று சொல்லிவிட்டுக் கிளம்பினுர்.

அவர் கார் மறைந்ததும், 'அடேடே இவர் யார் என்பதைக் கேட்க மறந்து விட்டேனே' என்று என்னை நொந்துகொண்டேன். இரண்டு நாட்கள் கழித்து எனக்கு ஒரு கடிதம் கிடைத்தது.

பிரியமுள்ள ஆத்மநாதனுக்கு,

இரண்டு நாட்களுக்கு முன் நான் தங்களைக் கண்டு பேசியது ஞாபகமிருக்கலாம். நான்தான் குப்புசாமி ஐயரின் மூத்த மனைவியின் புத்திரன். என்னைப் பற்றி நீங்கள் கேட்டிருக்கலாம்.

அவர் தத்துவம் வீணுகவில்லை. நிஜம்தான். இல்லாவிட்டால் பத்து வருடங்களுக்குப் பிறகு திடீரென்று இப்பொழுது மாற்றுவானேன். அவரைக் காணக் கொடுத்து வைக்காவிட்டாலும், என் சிறிய தாயாரின் குழந்தைகளைக் காணும் பாக்கியம் பெற்றேன்.

இனிமேல் என் கடமை தொடங்கி விட்டது. குழந்தைகளை ஏற்றுக் கொண்டு, என்னுடைய ஆதரவில் கொண்டுவருவது இனி என் பொறுப்பு. தாங்கள் இதுகாறும் செய்த உதவிகளுக்கும், தயாளத்திற்கும் தகுந்தபடி பாராட்ட இயலாதவனுக யிருக்கிறேன்.

இரண்டு நாட்கள் கழித்து மீண்டும் வருகிறேன் என் தம்பி, தங்கைகளை என்னிடம் ஒப்படைப்பீர்களென்று நம்புகிறேன். பலராமன்.

கடிதத்தைப் படிக்கப் படிக்க என் வியப்பு அதிகமாகியது. இவ்வளவு பெரிய பதவியிலிருக்கும் தம் மகனைப் பற்றி அறிய அவர் ஆவல் கொள்ளவில்லை. மனதிருந்தால் இவர் இருக்குமிடத்துக்குச் சென்றிருக்கக் கூடாதா! பலராம் பணம் பதவியோடு சுகமாக யிருக்க, இவர் ஏன் கஷ்டப் பட்டிருக்க வேண்டும் ! என்ன வைராக்கியம்! அவர் பிறவியே அலாதிதான்.

இரண்டு நாட்கள் கழிந்ததும் பலராமன் வந்தார். எனக்கு ஒரு ஆக்ஷேபணையு மில்லை. வெங்கிட்டு, சங்கர் எல்லோரையும் அழைத்தேன். "இதோ பார் வெங்கிட்டு, சங்கரா, லீலு, வேதா. இவர்தான் உங்கள் அண்ணு. டில்லியிலிருந்து இந்த ஊருக்கு வந்திருக்கிருர்" என்றேன்.

"அண்ணுவா !..." என்ருன் வெங்கிட்டு.

"அண்ணு..." என்ருன் சங்கரன்.

வேதாவையும் லீலுவையும் அவர் அணைத்துக் கொண்டார். நான்கு பேர்களையும் மாறி மாறி ஆவலோடு பார்த்தார்.

"சார், நாங்கள் வருகிறோம். நீங்கள் அடிக்கடி என் வீட்டுக்கு வரவேண்டும். மறந்து விடக் கூடாது......" என்ருர்.

என் வாய் அகன்று, மூடியது. ஏதேதோ விவரிக்க முடியாத உணர்ச்சிகளின் வசம் கட்டுண்டு பிரமை தட்டி நின்று கொண்டிருந்தேன். எல்லோரும் காரில் உட்கார்ந்தார்கள். "வருகிறேன், மாமா" "போய் வருகிறேன்" என்ற இளங் குரல்கள் காற்றில் கலந்து பரவின.

# மெழுகுப்

வெள்ளையான மனம். துள்ளிக் குதித்து விளையாட ஒரு துடிப்பு. அள்ளி அணைத்து முத்தமிட நம்மைத் தூண்டும் அழகு. கிள்ளிக் கிள்ளி 'வெடுக் வெடுக்' கெனப் பேசிடும் திறன். பிள்ளைப் பருவம் என்றால் இது தானே...! அழகான குழந்தை அழகற்ற குழந்தை எதனிடத்திலும் காணும் தனி இயற்கைப் பண்பு இதுதானே...... ஆனால் புறம்பு என்பது எந்த விதிக்கும் தான் இருக்கிறதே! அந்தப் புறம்பைப் படைக்காவிட்டால் அது இயற்கையே இல்லையோ......!

ஓடி ஓடிச் சளைத்துப் போக வேண்டிய கால்கள் வீட்டுத் திண்ணையையே உராய்ந்து கொண்டிருந்தால்......! சிரித்துச் சிரித்து முத்தும் பொறுமை கொள்ள வேண்டிய பற்களை உதடுகள் மூடி உள்ளேயே மறைத்து வைத்திருந்தால்...! பேசிப் பேசிப் பதமடைய வேண்டிய வாயை இரு வரிசைப் பற்களும் திறக்க விடாமல் வைத்திருந்தால்......!

புகைந்து புகைந்து மன மகிழ்ச்சியையே மூடி விட்டதா துக்கம்! எண்ணி எண்ணி ஏங்கி ஏங்கி ஏக்கத்தின் அளவிலே கருகி எதையும் ரஸிக்கும் திறன் குறையும் அளவுக்கு ஜீவனற்றுப் போய் விட்டதா இதயம்......!

இதுதான் சதா என் மனத்தைச் சுற்றிச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருந்த எண்ணத் தீ... என்மனத்தைச் சுழற்றிச் சுழற்றி அடித்துக் கொண்டிருந்த சிந்தனைப் புயல். இதைக் குறித்து நான் சிந்தித்திருக்கிறேன். சிந்தனை சிதறுண்டதே யொழியச் சீர்பட்ட தில்லை. என் மனத்திலே எழுந்த சந்தேகத்தை அவளிடமே கேட்டுப் பார்த்துவிடலாம் என்று ஒரு ஆசை. ஆனால் அதைப் புரிந்து கொண்டு விடையளிக்கும் பருவமல்லவே அது! பாவம், பண்படாத அந்தப் பிஞ்சு உள்ளம் ஏக்கத்தினால் வெம்பி விட்டதே......!

எண்ணத்தைத் திசை மாற்றச் சிறிது நேரம் வாசற் புறம் செல்லலாம் என்று எண்ணினேன். ஜன்னலின் வழியாக எட்டிப் பார்த்த நான், வாசலில் அவள் நின்று கொண்டிருப்பதைக் கண்டேன்.

அவள்......ஆம், அவள்தான் தாரா... அபாக்கியவதியான அந்த அபலையின் எண்ணத்தை மாற்ற நினைத்த என் கண்களில் அவளே பட்டவுடன் சிந்தனை அவளையே பின்பற்றிச் சுழன்றது.

சரவணன்-

ஜனனி

பரிசுக் கதை

# பொம்மை



பிரும்மசரியத்தின் இருதய மேடையிலே சதா காதலும் மணமும்தான் களி நடம் புரிகின்றன. அந்த நடனம் முற்றுப் பெற்று விட்டால்தான் நிம்மதி உண்டு என்னும் ஒரு எண்ணமும் ஆங்காங்கே தோன்றி மறைகிறது. அதே வரிசையில் நின்ற ரவி, கலாவைக் காதலித்துக் கடிமணம் புரிந்து கொண்டான். விவாகமாகி வருடங்கள் பல உருண்டன. ஆனால் அவர்களுடைய அன்புச் சிப்பியிலிருந்து ஓர் நல்லமுத்து கிளம்பவில்லை. எனவே, தம்பதிகள் வருந்தினார்கள்.

ஒரு குழந்தைக்காக ஏங்கிய அவர்கள் மனம் இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் தோன்றிவிட்ட இரட்டைப் பெண்களைக் கண்டு இரண்டு மடங்கு மகிழ்வெய்தியது. அழகான பெயராகப் பொறுக்கிச் சூட்டினார்கள் ராதா—தாராவென்று.

வானத்தினின்று காற்றால் விலகும் மேகக் குவியல்போல ஒரு கணப் பொழுதில் வருடங்கள் எட்டு மறைந்து விட்டன. அப்பொழுதுதான் ரவி அந்த இரட்டையர்களின் பிறவி வித்தியாசத்தை உணர்ந்தான். பாவம், பெற்று விட்ட குழந்தைகளை யெண்ணிப் பூரித்துப் போய்க் கொண்டிருந்த அவனுக்கு அது பெருத்த ஏமாற்றத்தை அளித்தது.

அழகென்னும் அமுதத்தில் தோய்த்துத் தீட்டியிருந்தான் ராதா என்னும் அந்த அற்புத ஓவியத்தை. கண்டவர் கண் கொட்டாது நின்று பார்க்கும் தனிப் பெரும் வடிவம். சீரான வரிசைப் பற்கள், இலேசான மெல்லிய செவ்வுதடுகளுக்குப் பின்னணியாய் நின்றன. கொவ்வை இதழ் விரிப்பிலே கைதேர்ந்த பூக்காரன் முல்லை அரும்புகளைச் சமைத்திருப்பது போல்! 'கருகரு' வென்று சுருண்டு நிலைகொள்ளாது கலையும் குழற்கற்றைகள் காற்றிலே மிதந்து வந்து மதியை ஒக்கும் முகத்தை மறைக்கும்போது, வான் மதியின் பின்னே நிற்கும் கருமுகிலுக்கு உவமை காட்டுவது போலிருக்கும். தந்தம் போன்ற கைகளையும் கால்களையும் படைக்கப் பிரமன் படாதபாடு பட்டிருக்க வேண்டும். அத்தனை அழகு ...... அவளை ஒரு காவிய அழகி என்று கூறினாலும் சிறிதும் மிகையாகாது.

ராதாவின் நேர் எதிர் துருவம் தாரா.

திரும்பிப் பார்த்தேன். இமைக்காது என்னையே நோக்கியவாறு தாரா நின்று கொண்டிருந்தாள். "என்ன மாமா, என்ன யோசிக்கிறீர்கள் !......" என்று என்னைப் பார்த்துக் கேட்டாள்.

"ஒன்றுமில்லை, தாரா ! நீ எங்கு வந்தாய் !" என்றேன், சிந்தனையிலிருந்து விடுபட்டவனாக.

"மாமா, உங்களை ஒன்று கேட்க வேண்டும்..."

"என்ன, தாரா ...!"

"ஏன், மாமா ! நான் அழகா, ராதா அழகா !" என்று கேட்டாள் தாரா.

அந்தக் கேள்வி என்னை உண்மையிலேயே தூக்கி எங்கோ வானத்தில் எறிந்தது போலிருந்தது. இந்த மாதிரி சங்கடமான நிலையில் நான் என்ன பதிலளிக்க முடியும்! அவள் அழகைப் பற்றி அவள் எதிரில் நான் என்ன சொல்ல முடியும்! அவள் அழகு என்று சொல்ல என் மனம் எப்படி ஒப்பும் ! அழகு இல்லை எனக் கூறி அவள் பசலை மனத்தை முறிக்கவும் நான் சம்மதப் படவில்லை.

"இது என்ன அசட்டுக் கேள்வி, தாரா !" என்று ஏதோ தட்டுத் தடுமாறி நிலைமையைச் சமாளிக்க வேண்டி மனத்தைத் துளாவித் துளாவிக் கண்டெடுத்தேன், அந்த விடையை.

"மாமா, நான் எதற்காகப் பிறந்தேன ; என்னைக் கண்டால் யாருக்குமே பிடிக்கவில்லையே !" வேதாந்திகளும் விடை காண முடியாத கேள்வி, நான் எதற்காகப் பிறந்தேன் என்பது ! நான் என்ன பதில் சொல்வேன் ! "வெளி அழகு யாருக்கு வேண்டும், தாரா ! உன் அழகுதான் முக்கியம்" என்று கூறி அவளைச் சமாதானப் படுத்த முயன்றேன்.

"உன் அழகு இருக்கிறதா இல்லையா என்று எளிதில் கண்டுவிட முடியுமா ! வெளியழகைக் கொண்டுதானே நிர்ணயிக்க வேண்டும் ! அதுதானே கண்களுக்குப் புலனாகிறது." உண்மையிலேயே அந்தச் சின்னஞ் சிறு மூளைக்கு ஏற்ற பேச்சு அல்ல அது. அவள் பிறவி அறிவாளிதான். இல்லாவிட்டால் பத்து வயதுப் பெண்ணின் மனது தத்துவ விடை இதுவாயிருக்க முடியுமா !





"போதும், தாரா......வேறு ஏதாவது பேசு..." அவள் செயலை மாற்ற எண்ணினேனே யொழியச் சிந்தனையை மாற்ற முடியவில்லை.

"மாமா, எனக்கு எல்லாம் தெரியும். நான் அழகாக யில்லை. ராதாதான் அழகா யிருக்கிறாள். அதனால் எல்லோரும் அவளிடம் அன்பாயிருக் கிறார்கள். பின்னே, இருக்கமாட்டார்களா......! மாமா, நடன உடையிலே ராதா ஒரு புகைப் படம் எடுத்துக் கொண்டிருக்கிறாள் ரொம்ப அழகாக இருக்கிறது. அதைப் பார்த்ததும் எனக்கு எவ்வளவு ஆசையாக இருந்தது, தெரியுமா!"

"போனால் போகிறது, தாரா! நீ கொடுத்து வைத்தது அவ்வளவுதான்!"

"அதுதான் இருக்கிறதே, கடைசி வேதாந்தம்! நீங்கள் சொல்லித்தான் எனக்குத் தெரியவேண்டு மாக்கும்!" என்று கேட்ட தாரா விசித்து விசித்து அழத் தொடங்கி விட்டாள்.

*　　　*　　　*

**பா**ல பருவத்திலே ஒட்டிக் கொண்டுதான் பவனி வருவார்கள், ராதாவும் தாராவும். ஊர் உற்று நோக்கும் இந்த அற்புதத்தை, காக்கையும் வண்ண வெண்புறாவும் கட்டி அணைத்துக்கொண்டு வருவது போலப் பள்ளிக்குப் போகையிலும், திரும்பி வருகையிலும் இருவரும் சேர்ந்தேதான் போவார்கள், வருவார்கள். ஒருவர் மீது ஒருவர் எல்லையில்லாத அன்பை அள்ளி விட்டிருந்தார்கள். எது அழகு, எது அழகற்றது என்று சீர் தூக்கிப் பார்க்கக்கூடிய காலமா அது!

காலம் கரை புரண்டது. மனத்திலே புரை யோடியது. ஏற்றத் தாழ்வு மின்னியது.

அழகில் உயர்ந்த ராதா அறிவில் தாழ்ந்திருந் தாள். அதற்கு நேர்மாறாகத் தாரா 'படு' சூடிகை யாகத் திகழ்ந்தாள். 'வெடுக்' 'வெடுக்'கென்று பேசிச் சதா 'துருதுரு'வென்று காரியங்கள் செய் வதிலும் அவளுக்கு இணை அவள்தான்.

ஆனால் அதே தாரா இப்பொழுது! தன்னையும் தன் சூழ்நிலையையும் உணரத் திண்மை பெற்று விட்டபின் தன் பிறப்பின் ஓர்சத்தை நினைந்து நினைந்து பொருமினாள். ராதாவின் அழகைக் கண்டு அருவை கொண்டாள்.

பள்ளிப் படிப்புக்கு முற்றுப் புள்ளி வைத்து விட்டாள் ராதா......அவள் பெற்றோர் அவளுக்கு நடனப் பயிற்சி அளித்தனர். கச்சை கட்டிக் கொண்டு நடன உடையில் இடுப்பில் கையை ஊன்றிக் கொண்டு உதடுகளில் இலேசான புன் சிரிப்பை இழைத்துக் கொண்டு அவள் நின்று விட்டால் தவ முனிவர்களும் தத்தளித்து நிற்பர்.

ஏக்கத்துடன் ஒருவருக்கும் தெரியாமல் பார்த் துக் கொண்டே நிற்பாள் தாரா. பாவம், கண்ணாடி அருகில் சென்று தானும் அதேபோல் நின்று பார்ப்பாள். ரோஜா மலரும் எருக்கம் பூவும் மாறி மாறிக் கண்ணாடியில் தோன்றி மறையும்.

அந்த வேற்றுமைக் கனலின் ஆவி கண்ணீராய்க் கலங்கும். 'நான் ஏன் பிறந்தேன்!' என்று சிந்தித் துச் சிந்தித்துச் செந்நீரைக் கண்ணீராய்ச் சிந்து வாள். எப்படி இரட்டையராக ஒட்டிக்கொண்டு பிறந்தனரோ, அப்படியே அவர்கள் மனமாற்ற மும் ஒட்டிக் கொண்டுதான் பிறந்திருக்க வேண்டும்.

ராதாவும் ஒரு பெண்தானே! 'தான் அழகு' என்ற கர்வம் இல்லாமல் இருக்குமா! இருந்தாலும் அவள் தாராவோடு பேசுவதே இல்லை.

ராதாவின் மீது கொண்ட துவேஷம் தாரா விடத்திலே வளர்பிறையாக வளர்ந்தது. ராதா தன் அழகில் வீண் கர்வம் கொண்டவள் என்ற தீர்மானம்தான் தாராவின் அந்தப் புகைச் சலுக்கு அஸ்திவாரமாக அமைந்தது.

பள்ளியிலே அறிவுப் போட்டியும் அழகுப் போட்டியும் நடத்தினார்களாம். அறிவுப் போட்டி யிலே முதலாவதாகத் தேறிய தாரா அழகுப் போட்டியைக் கனவிலும் கருத முடியுமா! அவளே என்னிடம் கூறினாள். "மாமா, அழகுப் போட்டியில் எல்லாப் பெண்களும் கலந்து கொண்டார்கள்" என்று கூறியவள் குரலைச் சிறிது தாழ்த்திப் பெருமூச்சு ஒன்றை விட்டு, "ஆனால் அதில் பங்கெடுத்துக் கொள்ள எனக்கு யோக்கியதை ஏது! நான் அங்கே வேடிக்கை பார்க்கப் போனேன். என்னைப் பார்த்து வாத்தி யார் அம்மா, 'உனக்கு என்னடி இங்கே வேலை! கொல்லன் பட்டறையிலே ஈ மாதிரி நீ ஏன் வந்து இங்கே நிற்கிறாய்!' என்று கேட்டாள்.

"அப்பொழுது எனக்கு மனசு எப்படி இருக்கும்! நீங்களே பாருங்கோ! அப்புறம்...அப்புறம்... படிப்பிலே முதலாவதாக வந்ததற்கு என்னைத் தட்டிக் கூடக் கொடுக்க வில்லை."

பீறிட்டுக் கொண்டு வந்த அழுகை அவள் பேச் சுக்குத் தடை விதித்து விட்டது. அழுகையிலே தோய்த்து அங்கலாய்ப்பிலே உலர்த்தி என் முன் னாலே எடுத்து விரித்தாள் தனது உள்ளக் குமுறலை.

"நீ ஏன் தாரா அங்கு போனாய்!"

"வேடிக்கையாயிருக்கிறது, மாமா, நீங்கள் சொல்கிறது! நமக்குப் பாடத் தெரியவில்லை யென்றால் பாடுவதைக் கேட்பதற்குக் கூட உரிமை யில்லாமற் போய் விடுமா! அது போல நான் அழ காயில்லை யென்றால் அழகிகளைக் கண்ணெடுத்தும் பார்க்க உரிமையற்றவளாகி விடுவேனா!"

அவள் அழகில்லாதவள்தான். அதற்காக அழ குப் போட்டியில் கலந்து கொள்ளும் சிறுமிகளைப் பார்ப்பது கூடத் தவறாகி விடுமா!

"மாமா, அழகுப் போட்டியில் ராதாவுக்குத் தான் பரிசு கிடைத்தது. அவளைக் கட்டிக் கொண்டு எங்கள் வாத்தியாரம்மா ஒரு புகைப் படம் எடுத்துக் கொண்டார்கள். நான் படிப் பிலே முதற் பரிசு வாங்கியதற்கு வெறும் பாராட்டு தலைக் கூடக் காணோம். அவள் அழகுப் போட்டி யில் தேர்வு பெற்றதற்காகப் புகைப்படம், தேநீர் விருந்து, எல்லாம் நடந்திருக்கின்றன. அழகின் முன்னால் அறிவு ஒரு பாராட்டுதலைப் பெறக்கூட யோக்கியதை யற்றதா!"

அவள் வார்த்தைகளைப் பொல பொல வென்று உதிர்த்தாள். அதில் விஷமிருந்தது, விசனமிருந்தது. ஆத்திரமிருந்தது, அலறல் இருந்தது. மெல்லிய 'ஜவ்வு' போன்ற குழந்தையின் மனத்தைக் கூரிய ஈட்டி போன்ற வார்த்தைகளால் குத்திக் கிழித்து விட்டாளே, அந்த உபாத்தியாயனி! ஆனாலும் அவள்தான் எப்படிப் பொறுப்பாள்! இந்த உலகம் அழகுக்கு அடிமை.

திரும்பிப் பார்த்தேன், தாராவை. விட்டத்தை நோக்கியவாறு ஏதோ யோசித்துக் கொண்டிருந்தாள். அவள் பிறப்பு, அவள் மனப் பண்பு எல்லாமே தனி ரகமாகி விட்டன. அவள் கண்கள் கலங்கி யிருந்தன. நான் பார்ப்பதை அறிந்த அவள் என் பக்கம் திரும்பி, "மாமா, உடலழகு என்பது சீராக வார்க்கப்பட்ட மெழுகு பொம்மை. அதன் உருவம் சாசுவதமன்று. அது அமரத்வம் வாய்ந்ததுமன்று. எந்தக் கனல் பட்டாலும் உருகி அழிந்து அருவமாகிவிடும் தன்மையுடையது" என்று கூறி முடித்தவுடன் அவளைத் தூக்கி முத்தமிட்டு உச்சி மோந்தேன். இப்படிப்பட்ட ஒரு பிறவி அறிவாளியை வாழ்நாள் முழுவதும் ஏங்கி ஏங்கி உள்ளம் தேய்ந்து உடல் மாய்ந்து போவதற்காகப் படைத்து விட்டானே என்று என்னுடைய மனம் குமைந்தது.

வருடங்கள் பல பறந்தன. இயற்கையிலேயே கவர்ச்சியோடு கூடிய வாளிப்பான உடலைப்பெற்ற ராதா தனிச் சோபையுடன் காணப்பட்டாள். மணப் பருவம் எய்தியும் பாவாடை சட்டையுடன் பாலிகையாகவே நின்றாள் தாரா.

ஆனால் பருவத்தின் பூரண கடாட்சம் பெற்றுப் பருவ உணர்ச்சியும் உண்டாகிக் கல்யாண மாகாமல் கஷ்டப்பட்டுச் சாவதை விட அந்த உணர்ச்சியே யற்றுச் சின்னஞ் சிறு குழந்தையாகவே இருப்பது மேலல்லவா!

பருவ மொக்கு மலர்ந்து பூத்துக் குலுங்கும் யௌவனப் பூங்காவிலே பவனி வரும் எழிலரசி ராதாவைக் கண்டாள் தாரா. கல் விழுந்தவுடன் குளத்திலே தோன்றுமே, எண்ணற்ற அலைக் குவியல்கள்! அதுபோலப் பொறாமையின் அலைகள் மனக் கடலில் உருப்பெற்றன. ஆனால் நாளடைவில் பொருமிப் பொருமி அவளுடைய உள்ளம் காய்ந்து விட்டது.

தெருக்கோடியிலே பசியுடன், சுருட்டிப் பிடித்துக் கொண்ட குடலுடனும், ஒட்டி உலர்ந்த வயிறுடனும் முடங்கிக் கிடக்கிறான் பிச்சைக்காரன். 'கவலை யில்லாது உறங்குகிறான்' என்று கூறுகிறது நம் வாய். ஆனால் உண்மையில் அவன் விசாரமின்றியா உறங்குகிறான்! துக்கம் அவனிடம் ததும்பி நிற்கிறது. அதன் எல்லையிலே — அதன் அடிவானத்திலே அவன் வெந்து சாகிறான். அவன் வருந்தித்தான் என்ன பயன்! சகிக்கக்கூடிய அளவுக்குத் துக்கம் வரும்போது மனித உள்ளம் வருந்துகிறது. அதற்குமேல் போய் விட்டால் வருந்திக் கட்டுமா! அதே வரிசையில்தான் இருந்தாள் தாரா. இந்தப் பதினைந்து வருடங்களாக அழுது அழுது அவளுக்கு அலுத்து விட்டது.

கல்யாணத்துக்குக் காத்து நின்றாள் ராதா. அழகான ஓவியம்போல, பொருள் செறிந்த காவியம்போல. அவளையடைய உண்மையிலேயே பெரும் பேறுதான் பெற்றிருக்க வேண்டும். தாராவினாலே ராதா மணமாகாது நின்றாள் என்றால் அதிலே ஓரளவு உண்மை யிருக்கத்தான் வேண்டும். அழகற்ற உருவைத் தனது மனைவியின் சகோதரியாகக் கொள்ள எந்த ஆண் மகனும் முன்வரவில்லை. என்ன விசித்திர உலகம்!

அன்றும் ராதாவின் விவாக விஷயமாக ரவி எங்கோ வெளியே போய் வந்தான். களையிழந்த அவனது முகத்தைக் கண்டே முடிவு கண்டு கொண்ட கலா அவனிடம் எதுவும் கேட்கப் பிரியப்படவில்லை. எனினும் கேட்க வேண்டும் என்னும் கடமை உணர்ச்சி உந்தவே, வாய் திறவாது விழிகளாலேயே வினவினாள்.

"இப்படி ஒரு அவலட்சணம் இருக்கிற வீட்டிலே எவன் பெண் எடுப்பான்......!" என்று ஏமாற்றத்தால் ஏற்பட்ட ஆத்திரத்தில் ரவி வார்த்தைகளை உதிர்த்து விட்டான்.

தான் பிறப்பதற்குக் காரண பூதமான அந்த மனிதனின் வாயிலிருந்து வந்த அந்த அனற் சொற்களைத் தற்செயலாக அந்தப் பக்கம் வந்த தாரா கேட்டு விட்டாள். அதைக் கேட்ட அவள் தூண்டிலின் முள் முனையில் உயிருக்கு மன்றாடும் மீனைப் போலத் துடித்தாள்.

* * *

"ராதா! ஓடி வாயேன், ஓடி வாயேன்!" ஒருவருமில்லாத அந்த வீட்டில் எதிரொலியுடன் கூடி மருவி அலறிச் சிதறியது இந்தப் பயங்கர அழுகுரல். சோபாவில் சாய்ந்து கொண்டு ஏதோ ஒரு சினிமாப்பாட்டை முணு முணுத்தவாறு பின்னல் வேலை செய்து கொண்டிருந்த ராதா பதறி எழுந்து சத்தம் வந்த திசையை நோக்கி ஓடினாள்.

சமையலறையில் உடன் பிறந்த சகோதரி தாரா உடல் சேலையிலே தீப் பற்றி விடவே தீயின் வெம்மை தாளாமல் துடித்துக் கொண்டிருந்தாள்.

உணர்ச்சிக் காற்றிலே அறிவைப் பறக்கவிட்ட ராதா கதியற்றவளைக் காக்க வேண்டுமென்ற கருத்தில்லாது, ஓடிப்போய்க் கட்டிக்கொண்டாள்.

ராதாவுக்கு அன்பின் வேகத்தின் முன் நெருப்பின் வேகம் தெரியவில்லை. இரத்த பாசத்துக்கும் இதயத் துடிப்புக்கும் எதிரே தீயின் வெம்மை தெரிய வில்லை. அந்த வெம்மையைச் சகோதரி வாஞ்சை யென்னும் தண்மை தணித்து விட்டது.

"ராதா, இன்றோடு உன்னைப் பிடித்த பீடை அகன்று விட்டது என்று வைத்துக் கொள். என்னைச் சகோதரியாக அடைந்து நீ பட்ட மனத் துன்பமெல்லாம் தீர்ந்து விட்டது என்று நினைத்துக் கொள். பரிசுத்தமான உனது இதயத்திலே இந்தக் குரூபிக்கு ஒரு கணமாவது இடமளித்து விடு! உன்னை விட்டு அகலப் போகும் இந்தத் தருணத்தில் நான் கேட்பதை மறுக்காதே! நீ விவாகம் செய்து கொண்டு இல்வாழ்க்கையை இன்பமுடன் நடத்து" — தாரா தன் போக்கில் சொல்லிக் கொண்டே போனாள்.

அதற்குள் வாசலிலே ஏகக் கூக்குரல் கேட்டது. இரு சகோதரிகளும் தீயிலிருந்து காப்பாற்றப் பட்டனர். ஆனால் ராதாவும் தாராவும் அழகிலும் சகோதரிகளாகி விட்டனர். அதாவது ராதாவும் தாராவின் அழகைப் பெற்றாள். அவளிடம் முக அழகு மறைந்து அக அழகு மலர்ந்தது.

"ராதாவின் அழகு என்னும் மெழுகு பொம்மை தன் பொறாமைக் கனல் பட்டுத்தான் உருகி அழிந்து விட்டது!" என்று தாரா மனம் வெதும்பிக் கண்ணீர் வடிக்கிறாள்.

ஆனால், "உடலழகு என்பது சீராக வார்க்கப்பட்ட மெழுகுப் பொம்மை. அதன் உருவம் சாசுவதமன்று. அது அமரத்வம் வாய்ந்ததுமன்று. எந்தக் கனல் பட்டாலும் உருகி அழிந்து அருவமாகி விடும் தன்மை யுடையது" என்று தாரா சொன்ன வார்த்தைகள் இன்றும் என் காதுகளிலே ரீங்காரம் செய்து கொண்டிருக்கின்றன.

# மியூஸிக் அகாடமி, மதராஸ்

## இருபத்தெட்டாவது சங்கீத மகாநாடும் சங்கீதக் கச்சேரிகளும்

(மியூஸிக் அகாடமியைச் சேர்ந்த ஸ்தாபனங்களின் ஒத்துழைப்புடன் நடைபெறுகிறது)

**22 - 12 - 1954 முதல் 2 - 1 - 1955 வரை**

இந்திய சர்க்கார் தொழில் வர்த்தக மந்திரி **கனம் டி. டி. கிருஷ்ணமாச்சாரி** அவர்கள் திறந்து வைப்பார்கள்
அண்ணாமலை சர்வகலாசாலை சங்கீத இலாகா தலைவர் வித்வான் **சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை** அவர்கள் மகாநாட்டுக்குத் தலைமை வகிப்பார்கள்
இந்தியாவின் பிரதம நீதிபதியாக இருந்து ஓய்வு பெற்றுள்ள **ஸ்ரீ எம். பதஞ்சலி சாஸ்திரி** அவர்கள் 'சதஸ்'ற்குத் தலைமை வகிப்பார்கள்

| | | | |
|---|---|---|---|
| ஆரம்ப தினக் கச்சேரி<br>22 - 12 - 1954 மாலை 6 - 15 மணிக்கு<br>மயிலாப்பூர் சுந்தரேஸ்வரர் ஹாலில் | ... | **வித்வான் சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை**<br>விஸ்வநாத சர்மா<br>சியாமசுந்தர் | — பாட்டு<br>— பிடில்<br>— மிருதங்கம் |

பி. எஸ். ஹைஸ்கூல் ஹாலில் காலை 8 முதல் 10 மணி வரை சங்கீத சர்ச்சைகளும் 12 முதல் மாலை 2 மணி வரை சங்கீதப் போட்டிகளும் நடைபெறும்

**தினசரி நிகழ்ச்சி விவரங்கள் (D. V.)**

| பி. எஸ். ஹைஸ்கூல் ஹாலில் (மாலை 3 முதல் 4-30 வரை) | மயிலாப்பூர் சுந்தரேஸ்வரர் ஹாலில் (மாலை 5-30 முதல் இரவு 8-30 வரை) | மயிலாப்பூர் சுந்தரேஸ்வரர் ஹாலில் (இரவு 9-30 முதல் 11-30 வரை) |
|---|---|---|
| | **23 - 12 - 54 வியாழக்கிழமை** | |
| **கல்லிடைக்குறிச்சி லக்ஷ்மி**<br>பாபநாசம் பாலசரஸ்வதி<br>கனகாம்புஜம் | **மகாராஜபுரம்**<br>சௌடையா<br>மதுரை கிருஷ்ண அய்யங்கார் | **தேவகோட்டை நாராயண ஐயங்கார் & கல்யாணகிருஷ்ண பாகவதர்** —வீணை<br>வி. தியாகராஜன்<br>காரைக்குடி முத்து அய்யர் |
| | **24 - 12 - 54 வெள்ளிக்கிழமை** | |
| **ஆர். கே. ஸ்ரீகண்டன் பி. ஏ.**<br>டி. எஸ். தாத்தாச்சார்<br>டி. ராம்மோகன் ராவ் | **ஆலத்தூர்**<br>டி. என். கிருஷ்ணன்<br>மணி | **டி. என். சுவாமிநாத பிள்ளை**-புல்லாங்குழல்<br>டி. எஸ். வீரராகவன்<br>பழனி |
| | **25 - 12 - 54 சனிக்கிழமை** | |
| **சி. வி. ராமச்சந்திரன்**<br>பி. ராமச்சந்திரய்யா<br>கோயமுத்தூர் பஞ்சாபகேசன் | ... ... ... | **எம்பார் விஜயராகவாச்சாரி** —ஹரிகதை |
| | **26 - 12 - 54 ஞாயிற்றுக்கிழமை** | |
| **தஞ்சாவூர் வெங்கடேச அய்யங்கார்** | **கமலா லக்ஷ்மண்** —பரதநாட்டியம் | **டி. விஸ்வநாதன் & பார்ட்டி** —பதங்கள் |

**27-12-54 திங்கட்கிழமை**

| | | |
|---|---|---|
| கே. ஆர். கணபதி —புல்லாங்குழல் | செம்மங்குடி | எஸ். பாலசந்தர் —வீணை |
| திருவனந்தபுரம் எல். கணபதி | பாப்பா | லால்குடி ஜெயராமன் |
| நாகராஜன் | பழனி | வேலூர் ராமபத்திரன் |
| | கோதண்டராம அய்யர் | |

**28-12-54 செவ்வாய்க்கிழமை**

| | | |
|---|---|---|
| டி. என். சிவசுப்ரமணிய பிள்ளை | டி. கே. பட்டம்மாள் | இந்திராணி ரஹ்மான் |
| கும்பகோணம் சீனிவாசன் | திருவள்ளூர் சுப்பிரமண்யம் | —பரதநாட்டியம் |
| மதுரை சீனிவாசன் | பாலக்காடு குஞ்சுமணி | |

**29-12-54 புதன்கிழமை**

| | | |
|---|---|---|
| எஸ். ஆர். ஜானகிராமன் | ஜி. என். பாலசுப்பிரமணியம் | துவாரம் ... —வயலின் |
| டி. என். மணி | கோவிந்தராஜ பிள்ளை | ரகு |
| கும்பகோணம் என். கணேசன் | பழனி | |

**30-12-54 வியாழக்கிழமை**

| | | |
|---|---|---|
| டி. சியாமளா | மதுரை மணி ஐயர் | அண்ணாசாமி பாகவதர் |
| வேதவல்லி | ராஜமாணிக்கம் பிள்ளை | —ஹரிகதை |
| வி. எஸ். ஜானகி | மணி | |

**31-12-54 வெள்ளிக்கிழமை**

| | | |
|---|---|---|
| எஸ். நரசிம்மலு | படே குலாம் அலிகான் & பார்ட்டி | டி. என். ராஜரத்னம் —நாகஸ்வரம் |
| ஜி. லக்ஷ்மிநாராயணன் | (கராச்சி) —ஹிந்துஸ்தானி பாட்டு | என். பி. ராகவ பிள்ளை |
| ஷண்முகானந்தம் | | |
| டி. என். தியாகராஜன் | | |

**1-1-55 சனிக்கிழமை**

| | | |
|---|---|---|
| கிருஷ்ணமூர்த்தி ராவ் | எம். எல். வசந்தகுமாரி | ஏ. கே. சுப்பய்யர் —ஜலதரங்கம் |
| எஸ். ராமகிருஷ்ண | எம். எஸ். கோபாலகிருஷ்ணன் | ஏ. எஸ். தண்டபாணி |
| பாலக்காடு வி. ராமநாதன் | கே. எம். வைத்தியநாதன் | திருவாரூர் நாகராஜன் |
| | டி. எஸ். வில்வாத்திரி அய்யர் | |

**2-1-55 ஞாயிற்றுக்கிழமை**

மாலை 4-25 மணிக்கு: சதஸ் மாலை 5-30 மணிக்கு: பாலசரஸ்வதி —பரதநாட்டியம்

சீஸன் டிக்கெட்டுகள்: ஸ்பெஷல் ரிசர்வ்டு ரூ. 60- (பிட்), ரூ. 50- (மேடை), முதல் வகுப்பு ரூ. 20- இரண்டாம் வகுப்பு ரூ. 15-
மியூஸிக் அகாடமி ஆபீஸில் ரூ. 5/- கொடுத்து முதல் வகுப்புக்கு மட்டும் ரிசர்வ் செய்து கொள்ளலாம்

சீஸன் டிக்கெட்டு கிடைக்குமிடங்கள்: மியூஸிக் அகாடமி ஆபீஸ், 115-E, மௌபரிஸ் ரோடு, சென்னை-14. ரஸிக ரஞ்சனி சபா, மயிலாப்பூர்

மைக் ஒலிபெருக்கி ஏற்பாடுகள்: அஸோஸியேட்டட் ரேடியோ ஏஜன்ஸீஸ், மதராஸ்-4

# மிக உறுதியானது . .

**ஒரு அங்குல அகலமுள்ள துண்டு காகிதம் 20 ராத்தலை தாங்குகிறது !**



**இந்த அனுகூலங்களை கவனியுங்கள்:**



ட்ரேயான்ஸ் ட்ரான்ஸ்பெரன்ட் காகிதம் கண்ணாடியை விடத் தெளிவானது... அதன் மூலம் 95% வெளிச்சம் ஊடுருவிச் செல்லுகிறது. ஆகையால் அது உங்கள் பொருள்களை தெளிவாகக் காட்டுகிறது.



இதுவே மிகவும் மலிவான பாக்கிங் சாதனம். விலையை ஒப்பிட்டுப் பாருங்கள். 20"X30" அளவுள்ள ஒருதாளின் விலை 1½ அணாவுக்கும் குறைவு!

ஒரு சதுர அங்குலத்திற்கு 6.5 டன் எடை வரை கிழியாமல் நிற்கும் சக்திவாய்ந்த ட்ரேயான்ஸ் ட்ரான்ஸ்பெரன்ட் காகிதம் மிகவும் உறுதியானது. அதில் பாக் செய்யப்பட்ட பொருள்கள் சுத்தமாகவும் புத்தம்புதியதாகவும் இருக்கின்றன. எவ்வளவு அஜாக்ரதையாக கையாளப்பட்டாலும் பொருள்களுக்கு சேதம் ஏற்படுவதில்லை. உங்களுடைய பொருள்களை ட்ரேயான்ஸ் ட்ரான்ஸ்பெரன்ட் காகிதத்தில் பாக் செய்து, சுலபமாக விற்பனை செய்யுங்கள். உங்களுக்குத் தேவையான காகிதங்களை வாங்குவதில் கஷ்டமிருந்தால் எங்களுக்கு நேராக எழுதுங்கள்.

**விலை:**

நிறமற்றது:-500 தாள்கள் கொண்ட 1 ரீம்-ரூ 44/-
ஆம்பர் :-500 தாள்கள் கொண்ட 1 ரீம்-ரூ 51/8
உள்ளூர் விற்பனை வரி தவிர
பாக்கிங் சார்ஜ்—ரூ 1/4 கூடுதலாக




## ட்ரேயான்ஸ் ட்ரான்ஸ்பெரன்ட் காகிதம்

**தி திருவாங்கூர் ரேயான்ஸ் லிமிடெட்**
பாக்டரி: ரேயான்புரம், வடக்கு திருவாங்கூர்
**ஸேல்ஸ் ஆபீஸ்: யுனைடெட் இந்தியா லைப் பில்டிங், மதராஸ்–1.**
**இந்தியாவில் முதன் முதலாக ட்ரான்ஸ்பெரன்ட் காகிதம் தயாரிக்கும் ஸ்தாபனம்**

மதராஸ் ஸ்டாக்கிஸ்டுகள்: ரேயான் ட்ரேடர்ஸ் லிமிடெட், 27 கோரல் மர்ச்செண்ட் தெரு, மதராஸ்-1 (பிராஞ்சுகள்: மதுரை, சேலம் & கோயம்புத்தூர்)
பெங்களூர் ஸ்டாகிஸ்டுகள்: Mr. H. சுப்பண்ணா, டாட்பேட், பெங்களூர் TR.4069




ஆசிரியர் : ரமண்லால் வஸந்தலால் தேசாய்

மொழி பெயர்ப்பு : :: ரா. வீ

## 30. பரம விரோதி

"ஏதற்காகச் சிரிக்கிறாய்?" என்ற கேள்வியைக் கேட்டதும், ஜகதீஷுக்கு மீண்டும் சிரிப்பு வந்தது. வேட்டைப் பிராணியின் விழிகள் இருளில் பிரகாசிக்குமே, அது போல் அவன் கண்கள் பிரகாசித்தன.

"உனக்கு என்ன, பைத்தியமா?" என்றுகேட்டான் மேடுஏறி வந்தவன்.

"இல்லை; இன்னும் பிடிக்கவில்லை. ஆனால் இருக்கிற நிலைமையில் சீக்கிரமாகவே பைத்தியம் பிடித்து விடும் என்றுதான் தோன்றுகிறது!" என்றான் ஜகதீஷ், தன் சிரிப்பு நின்றதும்.

"அந்தப் பெண் பிள்ளை எங்கே போனாள்?" குரலில் கடுமைதொனித்த போதிலும் அந்த ஆள் கேட்ட கேள்வி தெளிவாக விழுந்தது. அவன் ஜகதீஷை அணுகி வந்து விட்டான். அவன் இடுப்பில் மட்டும் வேஷ்டி கட்டியிருந்தான், மற்றப்படி அவன் உடல் முழுவதும் மறைக்கப்படாமல் திறந்தே இருந்தது. தலையில் நீண்டு வளர்ந்த கேசம் முதுகுப் புறமாகத் தொங்கிக் கொண்டிருந்தது.

"அவள் எங்கே போகவேண்டும் என்று எண்ணினளோ, அங்கே போய் விட்டாள். ஆமாம், அவளிடம் உனக்கு என்ன வேலை?" என்று கேட்டான் ஜகதீஷ்.

"எனக்கு அவளிடம் என்ன வேலை? உனக்குத்தான் ஏதாவது இருக்கும். நீ அவளோடு தானே வந்தாய்? எனக்கு அவளிடம் ஏதாவது வேலையிருந்தால் இப்படி நீ கேட்க வேண்டியிராது!" என்றான் அந்த ஆள், குரலில் சினம் தொனிக்க. அப்பொழுது ஜகதீஷின் கையிலிருந்த வைர வளையல் 'தகதக' வென்று மின்னியது. ஆளின் பார்வை அந்த வளையலின் மீது விழுந்தது. உடனே, "உன் கையில் இருப்பது என்ன?" என்று குரலில் கடுமையை வரவழைத்துக் கொண்டு கேட்டான்.

"வைர வளையல்!"

"இதை என்ன செய்வாய்?"

"என்ன செய்வேனா? பார்!" என்று சொன்ன ஜகதீஷ் கையிலிருந்த வைர வளையலை ஆற்று வெள்ளத்தில் வீசி எறிந்தான். நீரில் விழுந்த வளையல் இருட்டிலும் பளபள வென்று பிரகாசித்தவாறு அரை வட்டமாகத் தண்ணீரில் தெரிந்தது.

"சரி, சரி! நீ பெரிய கிறுக்கனாக இருப்பாய் போலிருக்கிறது! அது போகட்டும். நீ யார், சொல்லு!" என்று ஜகதீஷின் முதுகில் கையினால் ஒரு தட்டுத் தட்டியவாறே கேட்டான் அந்த ஆள். அவனுடைய உருவத்தை ஒருமுறை வெள்ளோட்டம் விட்டுப் பார்த்த ஜகதீஷுக்கு அவன் ஒரு துறவியாக இருக்கலாமோ என்று தோன்றியது. அவன் உதட்டிலே நகை நெளிந்தது. ஆனால் அந்த நகை அவன் கண்களின் கொடூரத்தைத் தான் மிகைப்படுத்திக் காட்டியது.

"நான் திருடன். பதினையாயிரம் ரூபாயைக் களவாடிக் கொண்டு ஓடி வந்திருக்கிறேன்!" என்றான் ஜகதீஷ்.

"திருடனாயிருந்தால் தெரியாத மனிதர்களிடம் இப்படியெல்லாம் பேசமாட்டான்!"

"வைர வளையலை நீ கேட்டதும் நான் விட்டெறிந்தேனே, பார்க்க வில்லையா?"

"பார்த்தேன். ஆயினும் திருட்டுப் பொருள் உன்னிடம் இல்லை என்பது எனக்குத் தெரியும். அதை எங்கே வைத்திருக்கிறாய், சொல்லு!" என்று கேட்டவன் ஜகதீஷின் மீது பாய்வதற்கு ஆயத்தமானான்.

ஜகதீஷ் அதைக் கவனிக்கவும் இல்லை; எதிர்பார்க்கவும் இல்லை. எனவே அலட்சியமாக, "என்னைக் கேட்பானேன்? நீயேதான் தேடி எடுத்துக் கொள்ளேன்!" என்றான்.

ஜகதீஷ் இவ் வார்த்தைகளைச் சொல்லி முடிப்பதற்குள்ளாகத் துறவியின் வேஷத்தில் இருந்த அந்த ஆள் கழுகுபோல் பாய்ந்து ஜகதீஷின் கழுத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். ஜகதீஷ் எதிர்பாராத அந்தத் தாக்குதலைக் கண்டு சற்றுக் கதி கலங்கித் திகைத்துப் போனான்.

அப்பொழுது துறவியின் விழிகள் கனலைக் கக்கிக் கொண்டிருந்தன. உதடுகள் பிளந்து படபட வென்று துடித்தன. பற்கள் நறநற வென்று நெறிந்தன. அந்த ஒலி ஜகதீஷின்



காதுகளில் தெளிவாக விழுந்தது. மேலுக்குத் துறவியாகத் தோற்றமளித்த பொழுதிலும் இத்தனை கோபம் கொள்பவன் உண்மையான துறவியாக இருப்பான் என்பதை ஒப்புக்கொள்ள ஜகதீஷின் மனம் மறுத்தது. தான் தேடித் திரியும் வேட்டைமிருகம் கிடைத்துவிட்டால், பசி வெறியிலிருக்கும் ஓநாய் பேயாகப் பாய்ந்து குடலைக் கிழித்துத் தின்னுமே, அதை நினைவுறுத்திக் கொண்டிருந்தான் துறவி. அவன் கை நகங்கள் ஜகதீஷின் கழுத்தில் பதிந்து தாங்கவொண்ணாத வலியை அளித்தன. திணறிப்போன ஜகதீஷ் துறவி நல்ல வலிமை பெற்றவன் தான் என்பதை உணர்ந்தான்.

அடுத்த கணம் ஜகதீஷுக்குத் தன் கல்லூரி நாட்கள் நினைவு வந்தன. அந்த நாட்களில் அவன் புரிந்த துணிகரத் துஷ்டச்செயல்கள் கண் முன் வந்து நின்றன. அக்காலத்தில் தனக்கு இருந்த பலம் நினைவுக்கு வரவே, அவன் துறவியின் கைப் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள முயன்றான். துறவியின் கைப் பிடிக்கு இருந்த பலம் முதலையின் பற்களுக்குக் கூட இருக்க முடியாது. ஏனெனில் ஜகதீஷின் எந்த முயற்சிக்கும் அவன் சிறிதும் இடங்கொடுக்கவில்லை. பிடி நழுவாம விருப்பதற்காக மேலும் மேலும் இறுக்கினான். ஜகதீஷினால் தாளமுடியவில்லை. புழுவாய்த் துடித்து விட்டான். கடைசியில் வெகு சிரமப் பட்டு வலியைப் பொறுத்துக் கொண்டு கீழே குனிந்தான். குனிந்தவன் கணநேரத்தில் கை வாகு பார்த்துத் துறவியின் கால்களைப் பிடித்து இழுத்தான். துறவி பொத்தென்று கீழே விழுந்தான். ஆனால் ஜகதீஷின் கழுத்தைப் பிடித்திருந்த பிடியை மட்டும் சிறிதும் தளரவிடவில்லை. ஜகதீஷின்கழுத்து அவன் கையில் சிக்கியது சிக்கியபடி இருந்தது. அதனால் அவனோடு ஜகதீஷும் விழுந்து உருண்டான். இருவரும் ஒருவரையொருவர் வெகு நேரம் வரை கட்டிப் புரண்டனர்.

அப்படி உருண்ட நேரத்தில், தன்னைக் காட்டிலும் துறவி பலத்தில் சிறிதும் குன்றியவன் அல்ல என்பதைப் புரிந்து கொள்ளும் வாய்ப்பு ஜகதீஷுக்கு மீண்டும் ஒரு முறை கிட்டியது. 'கரணம் தப்பினால் மரணம்தான்' என்ற கதையாக முடிந்துவிடக் கூடும் என்பதையும் அவன் உணர்ந்தான். நாம் சிறிதளவு தளர்ச்சி காண்பித்தாலும் துறவி நம் கழுத்தை நெறித்துக் கொன்று விடுவான் என்றும் தோன்றியது. எனவே, தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வழி தேடினான். அதிர்ஷ்ட வசமாகத் துறவியின் கை அவன் கையில் வசமாகச் சிக்கியது. ஜகதீஷ் உடனே தன் முழு பலத்தையும் பிரயோகித்து அவன் கையை முறுக்க ஆரம்பித்தான்.

துறவி தன் பிடியை விட்டுக் கொடுப்பதில்லை என்று பிடிவாதமாயிருந்தால் கை முறிந்துவிட வேண்டியதுதான். ஆனால் அவன் தன் கையை ஒடித்துக் கொள்வதற்காகவா அங்கே வந்திருந்தான்? அதனால் சட்டென்று தன் பிடியைத் தளர்த்திக் கொண்டான். அடுத்த நிமிஷம் ஜகதீஷ் குப்பென்று பந்தாகத் துள்ளி யெழுந்தான்.

# 'கோலினஸ்' உங்கள் பற்களை சுத்தம் செய்வது தவிர மேற்கொண்டும் உதவுகிறது!

## இப்பொழுதே இந்த நூதனமுறை டூத்பேஸ்டை நீங்கள் உபயோகிக்கத் தொடங்குவது நலம்

ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த பச்சை 'கோலினஸ்' பற்களை சுத்தமாக்குவதுடன் நிற்பதில்லை! அது உண்மையில் ஒரு நூதன முறை டூத் பேஸ்டாகும். பல் சிதைவுக்குக் காரணமான கிருமிகளை ஒழித்து, ஈறுகளுக்கு ஆரோக்கியமூட்டி, உங்கள் சுவாஸத்தை மணிக் கணக்கில் புது மணம் கமழ வைத்திருக்கிறது.

இதன் ரகசியம் அற்புதமான 'கோலினஸ்' நுரைதான். அது ஆக்டிவ் க்ளோரோபிலை வாயில் பிரஷ் நுழையமுடியாத மூலை முடுக்குகளுக்கும் எடுத்துச் சென்று, உங்களுக்கு மிகுந்த அனுகூலம் தருகிறது.

### அதிசயமான சிக்கனம்!

ஈரமில்லாத பிரஷில் அரையங்குல அளவே தேவை. ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த 'கோலினஸ்' எவ்வளவோ அதிக மதிப்புடையது. இன்றே ஒரு பெரிய டியூப் வாங்குங்கள்!

### உங்கள் குழந்தைகளுக்கு இலவசம்

"நகைமுகனும் அவனுடைய பிராணி நண்பர்களும்" என்ற நயமான சித்திரக்கதைக்கு இப்பொழுதே எழுதுங்கள்:

நகைமுகன்,
இலாகா 50 I
த. பெ. 541,
பம்பாய்.




GK. 214

அவனுக்கு முன்னால் துறவியும் கையை உதறிக் கொண்டு பருந்தாய்ப் பாய்ந்து நின்றான்.

"சாமியாரே! இனியும் உன் வாலை ஆட்டினால் உன்னைப் பிடித்துக் கீழே உருட்டி விடுவேன். ஜாக்கிரதை!" என்று ஜகதீஷ் துறவிக்குப் பயம் காட்டினான்.

துறவி இதற்கெல்லாம் பயந்தால் கட்டி வருமா? ஜகதீஷை அறியாப் பிள்ளையாக மதித்து அலட்சியமாகச் சிரித்தான். அவன் பற்களின் பயங்கர சொரூபம் ஜகதீஷின் கண்களில் பட்டது. அப்பொழுது 'இவன் ஒரு மனிதன்தானா?' என்ற ஐயமே அவனுக்கு உண்டாகி விட்டது.

"தம்பி! கொஞ்சம் மூச்சு விட்டுக் கொள். உன்னாலே சரியாகப் பேசக் கூட முடியவில்லை; திணறுகிறாய். நீதான் என்னைப் பிடித்துக் கீழே தள்ளி விடுவாயாக்கும்!" என்றான் துறவி எகத்தாளமாக.

துறவி சொன்னதில் துளிக்கூடப் பொய்க் கலப்புக் கிடையாது. முழுவதும் உண்மை. நோய் வாய்ப் பட்டு எழுந்த பின், ஜகதீஷ் சரியாக உடற் பயிற்சிகூடச் செய்ய ஆரம்பிக்கவில்லை. அதனால் சிறிது நேரம் கட்டிப் புரண்டதற்குள்ளேயே அவனுக்கு மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கத் தொடங்கி விட்டது. ஜகதீஷுக்கு உடல் தெம்பு குறையவில்லையென்றாலும், துறவிக்குச் சமமாகச் சளைக்காமல் நிற்பது என்பது சிரம சாத்தியமான காரியமாகவே பட்டது. துறவிக்கு அவனைப்போல் சிறிதும் மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க வில்லை. அத்தனை சண்டையையும் எவ்விதச் சிரமமுமின்றி வெகு அநாயாசமாகச் செய்தவனாகவே காணப்பட்டான்.

இதேசமயம் இரண்டு மூன்று மனிதர்கள் மடமடவென்று மேட்டின்மேல் ஏறி வந்தார்கள். கல்லூரி வாழ்க்கையைப் போன்ற சுயேச்சை வாழ்க்கை நடத்தி வந்தால், ஜகதீஷ் பழைய காலத்து ராஜபுத்திரர்களைப் போல் எத்தனை ஆட்கள் எதிர்த்து வந்தாலும் தனியாகவே ஒரு கை பார்த்திருப்பான். ஆனால் அந்தக் காலத்து உணர்ச்சி வேகமும் அலட்சிய மனோபாவமும் இப்பொழுது அவனிடமிருந்து விடைபெற்றுக் கொண்டு விட்டன. அவற்றைத் திரும்பிப் பெறக்கூடிய நிலைமையிலும் அவன் அப்பொழுது இல்லை. அதற்காகப் பிறரைக் கண்டு அஞ்சியோடும் இயல்பையும் அவன் பெற்றிருக்க வில்லை. அதைக் கொண்டு அடிதடியிலேயே காலத்தைக் கழிக்கும் அடியாட்களின் கும்பலில் அவனைச் சேர்த்து விடலாம் என்று எண்ணுவதும் தவறாக முடியும். ஏனெனில் அவன் தானாகச் சண்டைக்குப் போவதும் இல்லை; வலிய வந்த சண்டையை விடுவதும் இல்லை.

இந்த நேரத்தில் ஜகதீஷுக்கும் துறவிக்கும் இடையே ஏற்பட்ட அடிதடி அநாவசியமானது. ஆனால் துறவி வீண் பிரமையில் உழன்று அடிதடிக்கு அடிகோலி விட்டான்.

அதற்காக இருவரும் ஒரு தடவை கட்டிப் புரண்டு உருண்டும் ஆகிவிட்டது. "இனி அடிதடி வேண்டாம். சௌஜன்யமாகப் போய்விடுவோம்!" என்று ஜகதீஷ் சொல்லத் தயாரா யிருந்தான். ஆனல் அது துறவியின் காதுகளில் ஏற வேண்டுமே!

இந்த யோசனையில் ஆழ்ந்த ஜகதீஷ் பேச வாய் எடுப்பதற்கு முன்பாகவே துறவி மேடு ஏறி வந்து கொண்டிருந்த ஆட்களைப் பார்த்து, "என்ன, அப்பா! பார்த்துக் கொண்டு நிற்கிறீர்கள்? இவன் கழுத்தைத் திருகி இவனிடம் இருக்கும் பதினையாயிரம் ரூபாயை எடுங்கள்!" என்று கடுமையான குரலில் கட்டளை யிட்டான்.

வந்தவர்களில் இருவர் துறவியின் கட்டளைக் கிணங்க ஜகதீஷை நோக்கி முன்னேறினர். மூன்றாமவன் சற்றுத் தயங்கினன். 'திருட்டுக் குற்றம்தான் நம்மேல் சுமத்தப் பட்டிருக்கிறது. இனி நாம் சாவுக்கு எதற்காக அஞ்சிச் சாக வேண்டும்? நாம் மரிக்க நேர்ந்தாலும் அக்கறையில்லை; முதலில் இவர்களை ஒரு கை பார்த்து விடுவோம்!' என்று முடிவு கட்டித் தன்னை எதிர்ப்புக்கு தயாராக்கிக் கொண்டான் ஜகதீஷ்.

கல்லாகிவிட்ட இந்தச் சிறு மணல் மேட்டில் இத்தனை மனிதர்கள் ஏககாலத்தில் சுலபமாக ஏறி வரமுடியாது என்பதை அறிந்த ஜகதீஷ் தன்னை எதிர்த்து வருபவனைக் குன்றிலிருந்து கீழே உருட்டி விடுவது என்று தீர்மானித்தான். அதற்குள்ளாக ஏறிவந்த இருவரும் ஜகதீஷின் மேல் பாயத் தயாராகி விட்டனர். அதற்கு ஒரு விநாடி முன்பாக, "அடே, நில்லுங்களடா!" என்று உரத்த குரலில் கூவினன் மூன்றாமவன். பிறகு, "சாமி, இவன் நம் ஆள்!" என்று துறவியைப் பார்த்தும் சொன்னான்.

'சாமி' என்று தம்மைப் பிறர் அழைக்க வேண்டும் என்ற ஆசை துறவிகளுக்கு எத்தனை காலமாக இருந்து வருகிறதோ, தெரியவில்லை! சிங்கம் புலியாக உறுமும் இந்தப் போலித் துறவியும் தன்னைச் சாமி என்றே அழைக்க வேண்டும் என்று மக்களைப் பழக்கியிருக்க வேண்டும். இல்லா விட்டால் அப்படி ஏன் அழைக்கப் போகிறார்கள்?

மூன்றாமவனின் சொற்களைக் கேட்டதும், ஜகதீஷின் அருகில் வந்துவிட்ட இருவரும் எண்ணத்தைச் செயலாக்காமல் நின்றுவிட்டனர். அப்பொழுது சந்திரன் உதயமாகித் தண்ணிலவை வீசிக் கொண்டிருந்தான். அந்த மணல் மேட்டின் மீதும் அவனது வெண்ணிலவு காய்ந்து கொண்டிருந்தது.

"என்னடா சொல்கிறாய்?" என்று அவனை அதட்டிக் கேட்டான் துறவி.

"இவர் நம் ஜுகல் கிஷோர் ஐயாவுக்குத் தெரிந்தவர். என்னிடம்தான் இவரை ஓடச் சொல்லி அவர் செய்தி அனுப்பினார்!" என்றான் அந்த ஆள்.

ஜகதீஷ் கவனித்துப் பார்த்தான். தன்னிடம் கடிதம் கொண்டு வந்து கொடுத்த

வன் அவன்தான் என்பது அவனுக்கு நன்கு விளங்கியது. துறவி ஜகதீஷை நெருங்கி அவன் முதுகில் கை வைத்தான். பிறகு இலேசாகச் சிரித்தவாறே, "தம்பி, இதை நீ ஏன் என்னிடம் முன்பே சொல்லவில்லை?" என்று கேட்டான்.

"உன்னை யார் என்று எனக்குத் தெரியாது. தெரியாதவனிடம் ஒருவன் எப்படிச் சொல்வான்? அப்படியே நான் சொல்ல நினைத்திருந்தாலும், நீதான் சொல்லமுடியாமல் என் கழுத்தைப் பிடித்து அமுக்கி விட்டாயே!" என்றான் ஜகதீஷ்.

"நம் சாமியின் செயலே இப்படித்தான். சந்தோஷம் வந்தால் சாம்ராஜ்யத்தையே தூக்கிக் கொடுப்பார். கோபம் வந்தால் உயிரையே வாங்கி விடுவார். என்ன, நான் சொல்லுகிறது?" என்றான் ஒரு ஆள்.

துறவியைத் திருப்திப் படுத்துவதைக் காட்டிலும் கோப மூட்டுவதற்கு நேரம் பிடிப்பதில்லை. காரணம் சந்தோஷப் படுத்துவது சிரமமான காரியம். கோப மூட்டுவது மிகச் சுலபமான காரியம்.

"நீ நல்ல பலசாலிதான், தம்பி! உனக்கு இருக்கும் பலத்தை ஒன்றும் குறை சொல்வதற்கில்லை. ஆனல், உனக்கு இன்னும் மூச்சுப் பிடித்து நிற்க வரவில்லை. மூச்சுப் பிடித்தால் திணறத் தொடங்கி விடுகிறது. அதனல் நீ நன்ருகத் 'தம்' பிடிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். என்னிடம் பிராணுயாமம் கற்றுக் கொள்கிருயா? நான் கற்றுத் தருகிறேன்!" என்ருன் துறவி.

இந்தப் பயங்கரச் சாமியாரிடத்தில் எதைக் கற்றுக் கொள்வது, எதைக் கற்றுக் கொள்ளாமல் இருப்பது? ஜகதீஷுக்கு ஒன்றும் யோசனை ஓடவில்லை. அவன் யோசித்துப் பதிலளிக்கத் தொடங்குவதற்கு முன்பாகவே, ஆற்றங்கரையில் லாந்தர் வெளிச்சம் தெரிந்தது. கரையிலே பல மனிதர்கள் நடமாடுவதும் தெரிந்தது. மணல்மேட்டின் உச்சியிலிருந்த மூவரும் அப்படியே கீழே உட்கார்ந்து விட்டார்கள்.

"உயர உட்கார்ந்திருப்பது யார்?" என்று கரையிலிருந்து பிறந்த கேள்வியில் அதிகார தோரணை மிளிர்ந்தது.

போலீஸ்காரர்கள் இப்படிப் பேச வேண்டும். இப்படிப் பேசக்கூடாது என்றெல்லாம் போலீஸ் இலாகாவில் ஏதாவது ரகசியச் சட்ட திட்டங்கள் இயற்றி யிருப்பார்களோ? இது சம்பந்தமாக நம்பகமான செய்தி இது வரை யாருக்கும் கிட்டியதில்லை. இருந்தாலும் போலீஸ்காரர்கள் தங்களுக் கென்று ஏற்பட்ட உடை, குல்லாய், வில்லை முதலியவற்றை அணிந்து கொள்ளாமல் சாதாரண உடையில் வந்த பொழுதிலும், அவர்கள் பேச்சிலிருந்து அவர்கள் போலீஸ் இலாகாவைச் சேர்ந்தவர்கள் என்பது எப்படியோ தெரிந்து விடுகிறது. ஒரு வேளை மக்கள்தான் அத்தகைய அபாரமான அறியும் ஆற்றலைப் பெற்றிருக்கிருர்களோ?

"வாருங்கள், வாருங்கள்! போலீஸ் ஐயாவா? இங்கே வேறு யாரும் இல்லை; நாங்கள்தான் இருக்கிறோம். நம் சாமியும் பக்கத்தில் இருக்கிறது. நீங்கள் இங்கே தாராளமாக வரலாம். வாருங்கள்!" என்ருன் ஒருவன், குன்றின் மேலிருந்த வண்ணமே. அவன் ஏற்கெனவே ஜகதீஷுக்கு அறிமுகமானவன்தான்.

"எங்கேயப்பா வருகிறது? இந்தப் போலீஸ் உத்தியோகம் பிராணனை வாங்குகிறது. ஒரு நிமிஷம் என்றால் ஒரு நிமிஷம் நிம்மதி கிடையாது.—ஏன், சாமி! நீங்கள் சௌக்கியமாக இருக்கிறீர்களா?" என்று விசாரித்தார் ஹெட் கான்ஸ்டேபிள்.

"சௌக்கியத்துக்கு என்னப்பா குறைச்சல்? ஏறி மேலே வா! வெற்றிலை போட்டுக் கொண்டு போகலாம்!" என்று துறவி அழைத்தான். அவன் குரல் அப்பொழுதும் கரகரப்பாகத்தான் ஒலித்தது.

"வேண்டாம், சாமி! எனக்கு இப்பொழுது சாகக்கூட நேரமில்லை."

"அப்படி என்ன தலை போகிற வேலை வந்து விட்டது? இந்த நேரத்திலேகூட நேரம் இல்லை என்கிறீர்களே!" என்று ஜகதீஷுக்கு அறிமுகமானவன் கேட்டான்.

"உனக்கு எங்கள் கஷ்டம் என்ன அப்பா தெரியும்? இன்றைக்கு ஒரு பெரிய திருட்டு நடந்திருக்கிறது. யாரோ ஒரு பாவி ஐம்பதினயிரம் ரூபாயை 'அபேஸ்' பண்ணிக் கொண்டு ஓடி விட்டான். ஊர் முழுவதும் சல்லடை போட்டுச் சலித்தாகி விட்டது. தேடாத இடம் இல்லை. இன்னும் ஆள் அகப்பட வில்லை. என்ன செய்வது? இந்தப் போலீஸ் உத்தியோகம் ரொம்பப் பொல்லாத உத்தியோகம், அப்பா!"

"என்ன, திருட்டா? எங்கே திருட்டுப் போய் விட்டது, போலீஸ் ஐயா?" என்று கேட்டவன் ஜகதீஷை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தான்.

அப்பொழுது ஜகதீஷின் முகம் போன போக்கைச் சொல்லி முடியாது. ஒரேயடியாய்த் தொங்கி விட்டது. தனக்கும் சிறைச் சாலைக்கும் இடையே அதிக இடைவெளி இருப்பதாக அவனுக்குத் தோன்ற வில்லை. அப்படியே பேயறைந்தவன் போல் சமைந்து விட்டான். அதோடு அவர்கள் பேச்சுக்கிடையே ஜகதீஷ் தன் மனத்தை இல்லாத தர்க்க விதர்க்கங்களுக் கெல்லாம் இலக்காக்கிக் குட்டையைக் குழப்பிக் கொண்டான். ஹெட்கான்ஸ்டேபிள் பதில் சொல்வதற்கு முன்பாகவே, அந்த ஆள், "போலீஸ் ஐயா! இங்கே மேலே ஏறி வர உங்களுக்கு விருப்பம் இல்லையா? அப்படியானல் தாராளமாகக் கீழேயே நின்று கொண்டு பேசுங்கள். இங்கே யாரும் வேண்டாம் என்று தடுக்க வில்லை. ஆனல் நம் சாமி பிரசாதம் கொடுக்கிறது. அதை வாங்கிக் கொண்டு போங்கள்.




அதிகப்படி போஷாக்கு பெற தன்
குழந்தைகளுக்கு அவள்
**ஓவல்டின் கொடுக்கிறாள்**

போதுமான போஷாக்கு இருந்தால் நல்ல ஆரோக்கியம் ஏற்படும் என்று அறிந்துள்ள உலகெங்குமுள்ள தாய்மார்கள், தங்கள் குழந்தைகளுக்கு ருசி மிகுந்த ஓவல்டின் கொடுக்கிறார்கள்! குழந்தைகள் தங்கள் உடலிலுள்ள சக்தியை வெகு சீக்கிரத்தில் செலவழித்து விடுகிறார்கள். இழந்துவிட்ட தங்கள் சக்தியைத் திரும்பப் பெற வேண்டியதோடு மட்டுமின்றி, எதிர்கால வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் போதுமான சக்தியையும் உடலில் அவர்கள் சேர்த்து வைத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது.

இந்த விஷயத்தில் ஓவல்டின் இன்றியமையாதது; இயற்கை உணவுச் சத்துக்களிலிருந்து அது தயாரிக்கப்படுகிறது. இன்னும் B & D வைட்டமின்களுடன் சேர்த்துத் தயாரிக்கப்படுகிறது. இந்த ருசி மிகுந்த புத்துயிரளிக்கும் பானம், சிறுவர்களின் புத்தியையும், உடலையும் நாள் பூராவும் சுறுசுறுப்பாக வைத்திருக்கிறது. நித்திரை காலத்தில் ஆரோக்கிய சுகமுள்ள நித்திரையை அளிக்கிறது. உடனே உங்கள் குழந்தைகளுக்கு ஓவல்டின் கொடுக்க ஆரம்பியுங்கள்.

# ஓவல்டின்

எதிர்கால ஆரோக்கியத்திற்கு
உறுதியான அஸ்திவாரம்




விநியோகஸ்தர்கள்: கிரஹாம்ஸ் ட்ரேடிங் கோ.
(இந்தியா) லி-ட்.

*சனிக்கிழமைகளில் இரவு 8 முதல் 8-30 மணி வரை ரேடியோ சிலோனில் (ஹிந்தி-41.72 மீட்டர்கள்) ஓவல்டின் அமெச்சூர் நேரத்தைக் கேளுங்கள்*

IV 448

சாமியிடம் பிரசாதம் வாங்கிக் கொள்ளாமல் யாரும் போகிற பழக்கமில்லை" என்றான்.

அதைச் சொல்லி முடித்ததும் முடிக்காதது மாகக் கொஞ்சம் தேங்காய்க் கீற்றைக் கையில் எடுத்துக் கொண்டு கீழே இறங்கிக் கரையை அடைந்தான்.

இலவசமாக வரும் பிரசாதத்தை யார் தான் வேண்டாம் என்பார்கள்? ஹெட் கான்ஸ்டேபிளும் அவரோடு வந்த மற்ற போலீஸ்காரர்களும் மிகுந்த பக்தி சிரத்தையுடன் கிடைத்த தேங்காய்க் கொப்பரையை வாங்கி வாயில் போட்டுக் கொண்டார்கள். பிறகு சாவகாசமாக வந்து சாமியைப் பார்ப்பதாகச் சொல்லி விடையும் பெற்றுக் கொண்டு அங்கிருந்து அகன்றார்கள்.

"உன்னை விடாமல் போலீஸ் துரத்துகிறதே! நீ இப்பொழுது எங்கே போகப் போகிறாய்?" என்று ஜகதீஷுக்கு அறிமுகமான ஆள் ஜகதீஷைப் பார்த்துக் கேட்டான்.

"அதுதான் யோசனை செய்கிறேன். ஒன்றும் புரியவில்லை. ஏனெனில் ஓடினாலும் போலீஸார் பிடித்து விடுவார்கள்; ஓடாவிட்டாலும் பிடித்து விடுவார்கள். அதனால் ஓடுவோமா அல்லது நேரில் சென்று போலீஸில் நாமே சரணடைந்து விடுவோமா என்று பார்க்கிறேன். ஆனால் இன்னும் ஒரு தீர்மானமான முடிவுக்கு என்னால் வர முடியவில்லை!"

"அதிருக்கட்டும். நீ எத்தனை மணிக்குத் திருடினாய், சொல்லு!"

"நான் திருடினேனா? யார் சொன்னது? திருட்டு நடந்தது ஒரு வேளை உண்மையாக இருக்கலாம். ஆனால் நான் திருடவில்லை என்பது மட்டும் நிச்சயம். என் மேல் அபாண்டமாகப் பொய்க் குற்றம் சாட்டப் படுகிறது. இப்படி அநாவசியமாகப் பொய்க் குற்றம் சாட்டுபவர்களை இந்த உலகத்திலிருந்தே வெளியேற்றி விட்டால் என்ன என்று எனக்கு ஆத்திரம் ஆத்திரமாக வருகிறது!" என்று ஜகதீஷ் தன் மனக்குமுறலை வார்த்தைகளாக வடித்தான்.

"ஆமாம்! இத்தனை ஆத்திரப்படுகிறாயே, இத்தனை ஆத்திரப் படுகிறவன் உன் ஆத்திரத்தை அப்பொழுதே தீர்த்துக் கொள்வதற்கு என்ன? எதற்காகக் கையைக் கட்டிக் கொண்டு சும்மா உட்கார்ந்திருக்கிறாய்?" என்று கேட்டான் துறவி. அவன் குரலில் அந்தப் பழைய கொடுமையும் கடுமையும் தாண்டவமாடுவது குறையவில்லை.

ஜகதீஷுக்கு வெகு காலத்துக்கு முன்பாகவே தன் வாழ்வில் விரக்தி ஏற்பட்டு விட்டது. அதனால்தான் அவன் தனக்குக் கிடைத்திருந்த சுகபோக வாழ்க்கையை உதறித் தள்ளி விட்டு எளிய வாழ்க்கையை மேற்கொண்டான். அவனது அந்தச் செய்கை பார்ப்பதற்குப் பித்துக்குளித்தனமாகத் தோன்றலாம். ஆனால் அவன் யோசிக்காமல் அந்த முடிவுக்கு வரவில்லை. பணத்தில் புரண்ட காலத்தில் பல தீமைகளை அதில் கண்டான். ஏழைமையை மேற்கொண்டால் அந்தத் தீமைகளிடமிருந்து ஒரு வேளை தனக்கு விடுதலை கிடைக்குமோ? அமைதியும் ஆனந்தமும் ஏற்படுமோ என்று அவனுக்குத் தோன்றியது. ஆனால் நேரிடையாக எளிய வாழ்க்கையில் இறங்கிய பின் அதிலும் மாசு தோய்ந்திருக்கிறது என்பது அவனுக்குப் புலனாகியது. ஏழை எளியவர்களின் கும்பலும் இப்படித்தானா? இதிலும் உண்மையானவர்களுக்கு இடம் இல்லையா?—ஜகதீஷுக்கு இவ்வுலக வாழ்க்கையே வெறுத்தது.

இதையெல்லாம் ஆதாரமாகக் கொண்டு ஒரு கூடைச் செங்கல்லும் பிடாரிதான் என்னும் கதையாக ஒருவன் முடிவு கட்டி விடலாமா? உலகத்தில் உள்ளவர்கள் அனைவரையுமே பொய்மை நிறைந்தவர்கள் என்று புறக்கணித்து விடலாமா? ஏழை எளியவர்களின் அந்தக் கும்பலிலும் எத்தனையோ பேர் உண்மை ஒளி நிறைந்தவர்களாயிருக்கலாம் அல்லவா?

அதேபோல் ஆதிக்க வெறியில் ஆழ்ந்திருப்பவர்களுக்கும் உண்மைக்கும் வெகுதூரம் என்று நினைப்பதும் தவறாக முடியும். ஆனால் இந்த மானிட சமூகத்தின் ஒரு செயலை மட்

டும் குறிப்பிடாமல் இருக்க முடியாது. உத்தியோகத்தை உடும்பாகப் பற்றியிருப்பவர்கள் எப்படித் தீயைச் சாம்பல் மறைப்பது போல் உண்மையை மறைக்க முயற்சிக்கிறார்களோ, அது போலவே ஏழை எளியவர்கள் வாழும் உலகத்திலும் எத்தனை யெத்தனையோ விதமாக உண்மையை ஒளிக்கும் முயற்சி நடைபெறுகிறது. ஜகதீஷ் இருதரப்பினரையும் பார்த்தவன் அல்லவா? அதனால் உண்மைக் கனலை அவிய விடாமல் அடிக்கடி தூண்டிவிட விரும்பினான். 'இந்தப் பித்தனுக்கு இதெல்லாம் எதற்கு?' என்று அவனையறிந்த தோழர்கள் அவனைப் பரிகசித்தனர். அவனது பலனற்ற செய்கையைக் குத்திக் காட்டினர். தியாகிகள் என்று சொல்லிக் கொள்ளும் கும்பலைச் சேர்ந்தவர்கள் அவனை வீண் சுமை யென்றே கருதினர் தன்னலத்துக்குக் குந்தகம் விளையும் இடங்களில் எல்லாம் எதிர்ப்பு ஏற்படுவதுதானே இந்த உலகத்தின் இயல்பா யிருந்து வருகிறது?

உண்மையில் உறுதி கொண்ட ஜகதீஷ் கர்ஜனை பத்திரிகையின் தொடர்பை விட்டது முதற் கொண்டு இந்த உலகத்தோடுள்ள தொடர்பையும் ஒரு விதத்தில் அறுத்துக் கொண்டு விட்டான்.

மனமிரங்கி ஒரு ஏழைப் பிச்சைக்காரிக்கு இடம் அளித்தான் என்பதற்காக மக்கள் அவன் நடத்தையில் மாசு கற்பித்தனர். 'என்னதான் நல்லது செய்தாலும் இந்தப் பாழும் சமூகத்தினிடம் நல்ல பெயர் வாங்க முடியாதா?' என்று எண்ணிய அவனுக்கு ஏற்பட்ட கோபத்தைச் சொல்லி முடியாது. பொதுநலத் தொண்டர்கள், பொது நலப் பாதுகாப்பாளர்கள் என்று சொல்லிக் கொள்கிறவர்களே அவன் செயலைச் சந்தேகித்தனர்; அவனுக்குச் சிரமத்துக்கு மேல் சிரமம் கொடுக்கவும் கங்கணம் கட்டிக்கொண்டனர். அதன் காரணமாக அவன் தன்மான உணர்ச்சியே புண் பட்டது. சமூகத்தையே வெறுக்கத் தொடங்கினான். நல்லது செய்யப்போனவனுக்கு இப்படியா வரவேண்டும்? உலகத்தின் நன்றி கெட்ட செயலை என்னவென்று சொல்வது? அவப் பெயரைச் சூட்டியதோடு மட்டும் இல்லாமல் அவனை வேலைக்கும் தவிக்கும்படி செய்து விட்டதே? சமூகம் செய்த சதி காரணமாக அவன் வேலையில்லாமல் திண்டாடியதோடு மட்டும் அல்ல; கோகிலாவின் நகை நட்டுகளையும் உடைமைகளையும் கொண்டு வாழ்க்கையை ஓட்டும்படியாகிவிட்டது! ஒரு பெண்ணை நம்பி ஆண் மகன் ஒருவன் வாழ்வதென்றால் அதைவிட இளக்காரம் வேறு என்ன வேண்டும்? கோகிலாவின் நகை நட்டுகளை யெல்லாம் விற்று வயிறு வளர்க்கும் படியான நிர்ப்பந்தம் ஏற்படுத்திவிட்ட அவன் தலைவிதியை என்ன வென்று சொல்வது?

கோகிலா!—கோகிலாவின் நினைவு நெருப்பில் நெய்யாக அவன் மனத்தை எரித்தது. பாலைவனத்தின் நடுவே புகலிடம் அளிக்கும் பசுமை, பாலைவனத்தின் பயங்கரத்தைப் பன்மடங்கு பெருக்கிக் காட்டுவதுபோல், கோகிலாவின் உதவியைக் கொண்டு வாழ்க்கை நடத்துகிறோம் என்ற எண்ணம் அவன் மனத்தை அனலாகச் சுட்டது.

இத்தகைய எண்ணப் போராட்டத்தில் உள்ளம் புழுங்கிய அவனைக் கடுஞ் சுரம் பற்றிக் கொண்டது. உள்ளத் தீயும் உடல் தீயும் சேர்ந்து அவனை ஆட்டி வைத்து விட்டன. சாவகாசமாகச் சிந்தித்துப் பார்க்க முடிந்த அந்த நிலையில் அவன் மனம் இளகியது; உள்ளத்தில் இனிமை ஊறியது. வேலை வெட்டி யில்லாமல் இப்படி வாழ்வை வீணாக்கக் கூடாது என்ற முடிவுக்கு வந்தான். அதனால், வாழ்வை ஓட்டத் தனக்குப் புது வழி கிடைக்காதா என்று எதிர்பார்க்கலானான். ஆனால் எந்த வழியில் செல்லுவதில்லை என எண்ணி உதறி வந்தானோ, அதுவே அவனை மீண்டும் அழைத்தது, காலைச் சுற்றும் பாம்பாக. ஆயினும் அவன் அதைத் திடமான மனத்துடன் ஏற்க மறுத்து விட்டான். தேசத் தொண்டு, அரசாங்கத் தொண்டு ஆகியவை யெல்லாம் ஆட்களை ஏமாற்றிப் பிழைக்கும் பிழைப்பு என்று எண்ணி விட்ட அவன் அதை மீண்டும் ஏற்க முன் வரலாமா? எனவே, அவற்றைத் தவிர வேறு எந்த வேலை வந்தாலும் ஏற்றுக் கொள்வது என்று எண்ணினான். ஸர் பிஹாரிலாலும் பிராணலாலும் பத்திரிகையாளன் என்ற முறையில் இல்லாமல் வேறு எந்த வழியில் தன்னை உபயோகப் படுத்திக் கொள்ள நினைத்தாலும் அவன் தன் சேவையை அவர்களுக்கு அளிக்கத் தயாராயிருந்தான். அந்த ஆசைதான் அவனை அவர்கள் வீடு வரைக்கும் கொண்டு சேர்த்தது. தேச பக்திக்காகத் தன்னை அர்ப்பணித்துப் பயங்கரப் பிரதிக்ஞை எடுத்துக் கொண்ட வாலிபன், அதிலிருந்து அலுத்துச் சலித்துப் போய் ஆலை மானேஜருக்கு உதவியாளன் என்ற ஹோதாவில் வேலை பார்க்கத் தன்னை தயார் செய்து கொண்டு விட்டான் என்றால், அவன் மனத்தில் எத்தகைய புரட்சிகரமான எண்ணங்கள் இடம் பெற்றிருக்க வேண்டும்? எனவே, ஆலையில் வேலை என்ற கற்பனை அவன் மனத்திரையில் மங்கலாக நிழலாடியது.

இம்மாதிரி கனவு கண்டவாறே அவன் தன் வீட்டை நோக்கி நடந்து கொண்டிருந்தான். ஆனால் விதி அவனை வீட்டுக்குள் நுழைய வொட்டாமல் தடை விதித்து விட்டது. நெஞ்சுறுதி பெற்ற மனிதனைக்கூடப் பித்தனாக்கிவிடக் கூடிய வகையில் அவன் மேல் அபாண்டமாகத் திருட்டுக் குற்றம் சாட்டப்பட்டது. அதோடு உடனே ஓடி விடும்படியும் எச்சரிக்கை பறந்து வந்தது.

உண்மையைக் கேட்கப் போனால் பதினையாயிரம் ரூபாய் என்ன, பதினைந்து சல்லிகள் கூட அவன் திருட வில்லை. 'உண்மையிலேயே நாம் ஏன் திருடாமற் போனோம்?'

# நறுமணம் விரும்புகிறவர்களுக்கு...

மைசூர் சந்தன சோப்பினால் ஸ்னானம்செய்வதே ஓர் அலாதியான இன்ப அனுபவம். அதன் மிருதுவான நுரை சருமத் துவாரங்களிலும் ஊடேறி சுத்தம் செய்து, சருமத்தை மழமழப்பாகவும் பளபளப்பாகவும் பட்டுப்போல் செய்கிறது. அதன் இன்பமூட்டும் ரம்மியமான மணம் உங்கள் தேகமுழுவதும் பல மணி நேரம் நீடித்துப் பரிமளிக்கும்.




## மைசூர் சந்தன சோப்

**கவர்ன்மெண்ட் சோப் பேக்டரி, பெங்களூர்**

இந்திய சோப், வாசனைப் பொருள்கள் உற்பத்தியாளர் சங்கத்தின் அங்கத்தினர்

---

பிரபல்ய நோவு நிவாரணி

## நோ-வெய்னின்

புகழ் அதன் இணையில்லா சக்தியினால் மேலும் பரவுகிறது

பெரிய, சிறிய ட்யூப்களில் கிடைக்கிறது

# நோவெய்ன்

எல்லா வலிகளுக்கும் ஒரு ஔடதம்

கல்கத்தா கெமிகல்
கல்கத்தா 29

தென் இந்தியா ஆபீஸ்: 5/149, பிராட்வே, மதராஸ் - 1

என்ற எண்ணம் கண நேரத்துக்கு அவனை ஆட்கொண்டது.

நிஜமாகவே அவன் திருடியிருந்தால் ஒருவேளை அவன் மேல் குற்றமே சாட்டப்பட்டிருக்காதோ, என்னமோ? திருடிய தொகையை ஒளித்து வைப்பதற்கும் அவனுக்குப் போதிய நேரம் கிடைத்திருக்கலாம்! இந்தப் பொய்யுலகம் இத்தகைய செயல்களைத்தான் விரும்புகிறது போலும்! இல்லாவிட்டால் நிரபராதியான அவன் மேல் இத்தகைய குற்றம் சாட்டப்படுவானேன்?

இந்த எண்ணச் சிக்கல்களுக் கிடையே அவன் கண்களெதிரே ஒரு பெண்மணி வந்து நின்றாள். அவனை அவள் காதலித்தாள். பெண்களை மயக்கி அவர்களுடைய மனத்தைக் கவரும் சக்திதனக்கு இருப்பதாக அவன் எண்ணியதே இல்லை. அப்படி இருக்கிறது என்று யாராவது சொன்னாலும் அவனுக்கு நம்பிக்கை ஏற்பட்டதில்லை. கோகிலாவின் காதலைக் கூட அவன் தன் தகுதிக்காகக் கிடைத்த காதலாகக் கருதவில்லை. தன் தகுதிக்கெல்லாம் அப்பாற்பட்ட ஆசீர்வாதமாகவும் கிடைத்தற்கரிய பெரும் பாக்கியமாகவுமே தான் கருதினான்.

கணப் பித்தத்தில் அவன் அந்தப் பெண்ணின் அன்புக்குப் பதில் அன்பு செலுத்தினால் என்ன தவறு என்றுகூட எண்ணி விட்டான். பாவம்-புண்ணியம் என்ற பயம் அவனுக்கு இல்லை என்று சொல்லிவிட முடியாது. சமூகம் நேர் பாதையில் செல்வதற்கு இந்தப் பாவமும் புண்ணியமும் தானே கை கொடுத்து உதவுகின்றன? ஆனால் பாவம்-புண்ணியம் என்ற பழைய கருத்துக்களில் அவன் சிரத்தை மிகக் குறைந்து விட்டது.

"பாவமற்றவன், பாவி இவர்களுக்கு நன்மை பயக்கும் மங்களமூர்த்தி நீதான்!"

இந்தச் சூத்திரத்தை ஆதாரமாகக் கொண்டுதான் அவன் அநுஷ்டித்து வந்த நீதி சாஸ்திரமும் இயற்றப்பட்டிருந்தது. ஆனால் ஆண்—பெண் தொடர்புள்ள விஷயங்களில் மட்டுமே பாவமும் புண்ணியமும் அடங்கிவிட்டன என்பதை அவன் ஒருபொழுதும் ஒப்புக் கொண்டதில்லை. சமூகத்துக்கோ நீதிக்கோ புறம்பாக உள்ள தொடர்புகளை அவன் புண்ணியம் நிறைந்தவையாக எண்ணியதில்லை. அதற்காகப் புண்ணியம் தோய்ந்த தொடர்புகள் இல்லாத இடங்களிலெல்லாம், பாவம் வாசம் செய்கிறது என்பதையும் அவன் ஒப்புக் கொள்ளத் தயாராயில்லை.

'நீ செய்த குற்றத்தை உன்னால் ஒளிக்க முடியுமானால் நீ குற்றவாளி இல்லை' என்ற சூத்திரத்தைத்தான் இத்தனை காலும் இந்த உலகம் ஒப்புக் கொண்டு நடந்து வருவதாக அவனுக்குத் தோன்றியது. விஜயலக்ஷ்மியுடன் இந்தச் சூத்திரத்தின் போக்குக்கு ஏற்பத் தொடர்பு வைத்துக் கொண்டு, இந்த உலகத்தின் கண்களில் மண்ணைத் தூவி இந்தச் சூத்திரத்தையே வட்டியும் முதலுமாகத் திருப்பிக் கொடுத்து விட்டால் என்ன என்று ஒரு கணம் சிந்தித்தான். ஆனால் அவன் உள்ளம் அதற்குச் சிறிதும் இடம் கொடுக்கவில்லை. 'இப்படியெல்லாம் எண்ண உனக்கு உரிமை கிடையாது. ஏனெனில் நீ சுதந்திர புருஷன் இல்லை. நீ இத்தகைய முடிவுக்கு வந்தால் அது ஒரு தலைத் தீர்ப்பாக முடியும். உன் தலையில் இன்னுமொரு மகத்தான பொறுப்பும் சுமந்திருக்கிறது. ஜாக்கிரதை!' என்று அவனை எச்சரித்தது.

உள்ளத்தின் எச்சரிக்கை உண்மையானது தானே? ஏதோ ஒரு கடுமையான கட்டுப்பாடு அவனைக் கோகிலாவுடன் அசைய வொட்டாமல் கட்டிப் போட்டிருந்தது. அவன் இருதயத்தில் கோகிலாவைத் தவிர வேறு யாருக்கும் இடம் இல்லை. பாவம்-புண்ணியம் என்ற காரணத்துக்காக அவன் தன் மனத்துக்கு அப்படி அணை போடவில்லை. கோகிலாவைத் தவிர வேறு யாருக்கும் தன் இருதயத்தை அர்ப்பணிக்கும் திறனின்மை காரணமாகத்தான் அவன் தயங்கி நின்று



அக்டோபர் 29-ந் தேதி தியாகராயநகர் சாரதா வித்யாலயா உயர்நிலைப்பள்ளியில் 'ஸ்ரீநிவாச நிகேதன்' மாதர் சங்கத்தின் முதல் ஆண்டு விழா விமரிசையாக நடைபெற்றது. இந்த விழாவுக்குக் கல்வி மந்திரி கனம் சுப்பிரமணியம் தலைமை வகித்துச் சிறப்பித்தார். கடைசியில் சங்க மாணவிகளால் "குசேலா" என்னும் நாடகம் நடிக்கப்பட்டது. மேற்படி நாடகத்தில் கலந்துகொண்ட மாணவிகளைப் படத்தில் காணலாம்.

விட்டான். தன்னலத்துக்காகவோ அல்லது வெளி வேஷத்துக்காகவோ கூட அவனால் கோகிலாவைத் தவிர வேறு யாரிடமும் தன் உள்ளத்து அன்பைக் காட்ட முடியாது. நாடகத்தில் பங்கு எடுத்துக் கொண்டு நடிக்க நேர்ந்தாலும் கோகிலாவைத் தவிர வேறு எந்தப் பெண்ணுடனும் அவனால் ஒப்புக்காக வேனும் தன் காதலைப் பரிமாறிக் கொள்ள முடியாது ; காதல் நாடகம் நடத்த முடியாது. அவன் உள்ளத்தைக் கோகிலா அப்படித் துளிக்கூட இடைவெளி விடாமல் ஆட் கொண்டிருந்தாள்.

தனிமையில் நின்று அட்டகாசச் சிரிப்புச் சிரித்து இந்தச் சிக்கலிலிருந்து அவன் தன்னை விடுவித்துக்கொள்ள முயன்று கொண்டிருந்த பொழுதுதான் ரத்த தாகம் கொண்டு துறவி அவன் கழுத்தைப் பிடித்து நெறித்து விட்டான். வாழ்வும் சமூகமும் எப்படிக் கட்டுப்பாடின்றிச் சீரழிந்து கொண்டிருக்கிறது என்பது அவன் கண்களில் அப்போது தெளிவாகத் தோன்றியது. இந்தக் கட்டுப்பாடின்மையைப் போக்கிச் சீர்திருத்த முயல்வதைக் காட்டிலும் இந்தக் கட்டுப்பாடற்ற சமூகத்தோடு சமூகமாக ஐக்கியமாகித் தானும் கட்டுப்பாடின்றி நடந்து கொண்டால் என்ன என்றே அவன் எண்ணினான்.

அதற்கேற்றாற் போல் அந்தக் கொலைகாரத் துறவி வேறு அவனுக்கு ஆசை காட்டி அந்தக் கனலைக் கனிய விட்டான். உலகத்தை ஒழித்துக் கட்டி விட்டு மறுகாரியம் பார்க்க வேண்டுமென்ற எண்ணம் அவனுள்ளத்தில் நெடு நாட்களாகவே இடம் பெற்றிருந்தது.

போலீஸ் வேறு அவனைப் பின் தொடர்ந்து கொண்டிருந்தது. எதற்காக? செய்யாத குற்றத்துக்குத் தண்டனை அளிப்பதற்காக! போலீஸிடமிருந்து தப்பியோடுவதற்கு அவனுக்கு இந்த உலகத்தில் எங்குமே இடம் இருப்பதாகத் தெரியவில்லை. எனவே உலகத்தைத் தொலைத்தே தீருவது என்று ஆத்திரம் கொண்டான். துறவியும் ஒத்துப்பாடவே கண நேரத்துக்குள் அவன் உலகத்தின் பரம விரோதியாக மாறி விட்டான். (தொடரும்)

# புது டில்லியில் பரத நாட்டியம்

" சுப்புடு "

குமாரி வஸந்தாவின் பரத நாட்டிய விருந்தை நவம்பர் மீ 20, 21 தேதிகளில் தில்லி வாசிகள் அருந்தினர்.

இவ்வரிய அரிய சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்ட தென்னிந்தியக் கழகத்தார் வெகு சுலபமான வழியில் புகழ் சம்பாதித்துக் கொண்டனர்.

வெளிநாட்டு ஸ்தானிகர்களும், உள் நாட்டு ரஸிகர்களும், ஒருங்கே, வைத்த விழி வாங்காமல், மூன்று மணி நேரம் மெய்மறந்து, புது தில்லியில், முதன் முதலாக அரங்கேற்றப்பட்ட தஞ்சாவூர் பாணி பரத நாட்டியத்தை அநுபவித்தனர்.

கலைப் பொக்கிஷமாக வைத்துக் காப்பாற்றி, சம்பிரதாயத்தை நழுவ விடாமல் பாதுகாக்க வேண்டிய பெரும் பொறுப்பு வஸந்தாவின் இளம் தோள்களில் தங்கியிருக்கிறது என்றால் அது மிகையல்ல, உண்மை.

" ஆடப் பிறந்தவள் " என்று ரத்தினச் சுருக்கமாகச் சொல்லி விடலாம். அங்க அமைப்புகள், லாகவ அசைவுகள், அபிநய சுத்தம், நிதானம் நிச்சயம், எல்லாம் ஒருங்கே அமைந்திருக்கின்றன.

கமாஸ் வர்ணம் மிக அற்புதமாயிருந்தது. புடவையின் வர்ணத்தோடு புல்லாக்கின் ஒளி போட்டி போட்டுக் கொண்டும் புல்லாக்கின் ஒளியோடு புன்சிரிப்பின் அழகு போட்டி போட்டுக் கொண்டும், இவ்விரண்டுக்கும் இடையே சதங்கைகள் இன்னினி நாதம் செய்து கொண்டும் புல்லரிக்கச் செய்து விட்டன. பிரதானமாக இந்தத் தஞ்சாவூர் பாணியில் நாம் காண்பது லலித எழில் ; சற்றுக் கூடச் சிரமமில்லாது செய்யப்படும் அடவுகள் ; தாளத்துக்கும், அசைவுகளுக்கும் உள்ள ஒருமைப்பாடு, எல்லாவற்றுக்கும் மேலாகப் பட படப்பின்மை.

வர்ணம் பார்த்த உடனேயே பரம திருப்தியுடன் கூடிய ஒரு உள்ள நிறைவு உண்டாகி விடுகிறது. பதங்களில் " ஆனிப் பொன்னம்பலத்தே " என்று சம்பக மல்லிகா ராகத்திலும், " சின்ன செருக்கி " என்று அடாணாவிலும் " தொட்டுத் தொட்டு " என்று பிம்பளாஸிலும், முக்கியமாகச் சொல்லப்பட வேண்டியவை.

இந்தச் சம்பகமல்லிகா என்ற ராகம் நிதானமாய்ப் பாடும்போது ரொம்ப ரம்மியமாயிருக்கிறது. பிஹாக், வலஜி, இவை யிரண்டின் மூர்ச்சையும் கலந்து வந்து நெஞ்சை அள்ளுகின்றன. அதற்கேற்ப திருச்சிற்றம்பலவாணன் நடம் புரியும் அழகை வஸந்தா அபிநயம் பிடித்தாடும்போது, இம்மை மறந்து, இமை கொட்டாது பார்த்து, மறுமையைச் செம்மையாய் அநுபவிக்கிறோம். சுருட்டியில் " சரிக கொங்கு " என்ற பதம்தான் எவ்வளவு அழகாக அமைந்தது! அந்தப் பாலகிருஷ்ணனின் பால லீலைகள் எவ்வளவு கற்பனையுடன் அபிநயத்தில் பிடிக்கப்பட்டன! வெண்ணெய் திருடிய கண்ணனே இத்தனை லாகவமாய்த் திருடியிருப்பானா என்று சந்தேகம் தோன்றும்படி, குறைந்த பக்ஷம் இருபது முத்திரைகளில் காட்டப்பட்டபோது சபையோர் சிரித்து மகிழ்ந்து தம் பூரிப்பைத் தெரிவித்துக் கொண்டார்கள்.

கடைசியாக அஷ்டபதியில் குமாரி வஸந்தாவும் பாடித் தம் இனிய சாரீரத்தின் குழைவையும் நயத்தையும் வெளிப்படுத்திக் கொண்டார்.

பின் பாட்டுப் பாடிய ஸ்ரீமதி கோமதி ராமசுப்ரமணியத்தின் சாரீரம் ரொம்பவும் குளுமையானது. சங்கதிகளெல்லாம் அநாயாசமாய் வருகின்றன. நல்லதொரு இசை விருந்து, நாள் பூராவும் கேட்கலாம்.

பின்னணி சங்கீதம், மேடையிலே முன்னணி சங்கீதமாய்க் காட்சியளித்தாலும், கோட் வாத்யம் ஸ்ரீ வி. எஸ். பார்த்தசாரதி அய்யங்காரின் தயாரிப்பில் நாதத்துடன் குழைந்து கொண்டே வந்தது.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras-10.

"வெண்மையான, சுத்தமான

# லக்ஸ் டாய்லட் சோப்பின்

## நுரை மிகவும் மிருதுவானது, நறுமணம் கமழ்வது..."

என்கிறார்

## பத்மினி




இந்தியாவில்
தயாரித்தது

லக்ஸ் டாய்லட் சோப் தயாரிக்க மிகவும் சுத்தமான எண்ணெய்கள் மட்டும்தான் உபயோகிக்கப்படுகின்றன. அதனால்தான் எப்பொழுதும் அது அவ்வளவு வெண்மையாக இருக்கிறது. பத்மினி கூறுவதாவது: "லக்ஸ் டாய்லட் சோப்பின் செழிப்பான, வெண்மையான நுரை சருமத்துவாரங்களுக்குள் ஆழப்புகுந்து என் வதனத்தை மிருதுவாகவும், அழகாகவும் வைத்துக்கொள்கிறது. அன்றியும் அதன் நீடித்திருக்கும் நறுமணத்தை நான் மிகவும் விரும்புகிறேன்!"



"...அதனால்தான்
என் வதனத்தை
கவர்ச்சியோடு வைத்திருக்க
லக்ஸ் டாய்லட் சோப்பை
உபயோகிக்கிறேன்!"

**முக்கிய செய்தி!**

தலைமுதல் கால்வரை
கவர்ச்சி அளிக்க

**புதிய பெரிய சைஸிலும்**

இப்பொழுது கிடைக்கிறது!
இன்றே வாங்கி உபயோகியுங்கள்!

★ சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப் ★

LTS. 431-50 TM

REGISTERED No. M. 4392

*Registered as a newspaper in Ceylon*





'சிரியுங்கள்' என்று
சொல்லத் தேவையில்லாத
ஒரு குடும்பம் இது!

# ஒரு சந்தோஷமான குடும்பத்தின் சித்திரம்!

என்னுடைய குடும்பத்தார் எல்லோருடைய முகத்திலும் தவழும் புன்முறுவலுக்குப்பின்னால் ஒரு கதையிருக்கிறது. சிலமாதங்களுக்கு முன் என் கணவர் அடிக்கடி சீக்காக படுத்துவந்தார். மேலும், என் மூன்று குழந்தைகளும் ஆரோக்கியம் குன்றி, மெலிந்து வாழ்க்கையில் பற்றில்லாதவர்கள்போல் காணப்பட்டார்கள். நான் அவர்களுடைய உபாத்தியாயினியுடன் அகஸ்மாத்தாகப் பேசிக்கொண்டிருக்கும் போதுதான் அவள் "உங்களுடைய கஷ்டங்களுக்குக் காரணம் ஒருக்கால் நீங்கள் உபயோகிக்கும் சமையல் கொழுப்பாக இருக்கலாமோ என்று நினைக்கிறேன்" என்று கூறினாள். நான் விலையுயர்ந்த சிறந்த கொழுப்பை சில்லறையாக வாங்குகிறேன் என்று சொன்னதும் அவள் "சில்லறையாக வாங்கும் கொழுப்பு எவ்வளவு சிறந்ததாக இருந்தாலும், எப்பொழுதும் திறந்திருப்பதால் அழுக்கான கைகளாலும், ஈக்களாலும் அசுத்தப்படுத்தப்பட்டு நோய்களை விளைவிப்பதாக இருக்கலாம்" என்று சட்டென்று பதிலளித்தாள்.

அவள் டால்டா வனஸ்பதியை உடனே வாங்கும்படி எனக்கு யோசனை கூறினாள். ஏனென்றால் முதலாவதாக டால்டா, ஆரோக்கியத்தைப் பாதுகாக்கிறது. அதன் சீல் செய்த டின்னுக்குள் கிருமிகள் நுழையமுடியாது. அன்றியும் டால்டா வனஸ்பதியின் தரம் மிகச் சிறந்தது. என் குடும்பத்தினருக்கு டால்டா வனஸ்பதியில் சமைத்த உணவு சீக்கிரமே பிடித்துப் போய்விட்டது. டால்டா பரிமளிக்கச்செய்யும் உணவிலுள்ள இயற்கை ருசியை அவர்கள் மிகவும் விரும்பினார்கள். காற்றுப்புகாத சீல் செய்த டின்னில் வாங்க முடிகிற டால்டா வனஸ்பதி எப்பொழுதும் சுத்தமாகவும், புத்தம் புதிதாகவும் ஆரோக்கியமளிப்பதாகவும் இருக்குமென்று திடமாக நம்பலாம். டால்டா வனஸ்பதி என் குடும்பத்தினரை சந்தோஷமாகவும், ஆரோக்கியமாகவும், நான் முழுவதும் திருப்தியடைந்தவர்களாகவும் வைத்திருக்கிறது. நீங்களும் எல்லா உணவுகளையும் டால்டா வனஸ்பதியில் தயாரியுங்கள். இன்றே ஒரு டின் வாங்குங்கள்.

10, 5, 2, 1, ½ பவுண்டு டின்களில் கிடைக்கிறது.
டால்டாவில் விடமின் 'ஏ', 'டி' இருக்கிறது.

சிறந்த சமையல் கொழுப்பை தேர்ந்தெடுப்பது எப்படி?

இலவச ஆலோசனைகளுக்கு இன்றே எழுதுங்கள்:

தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்
தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1



மர அடையாளமுள்ள டின்னைப் பார்த்து வாங்குங்கள்.

## டால்டா வனஸ்பதி

சிறந்த சமையல் — குறைந்த செலவு.

HVM. 290-50 TM